சிதம்பரம் இராமலிங்கரின்

# சித்தி வளாகம்

வை. இரத்தினசபாபதி



சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை - 600 005.

சிதம்பரம் இராமலிங்கரின்

# சித்தி வளாகம்

(சென்னைப் பல்கலைக் கழகத்து ஒரு நூற்றாண்டின் மேனிகழ் வெள்ளி விழா நினைவு வெளியீடு)

டாக்டர் வை. இரத்தினசபாபதி
வித்துவான், பி.ஓ.எல்., எம்.ஏ., பிஎச்.டி.
டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன்
மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக் கழகம்



சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை

2000

# அணிந்துரை

வடலூர் இராமலிங்க அடிகளார் சமயத்தையும் சமுதாயத்தையும் பொதுமை நிலையில் நின்று நோக்கியவர். எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணும் உள்ளத்தினரே இறைநேயம் மிக்கவர் என்பதைத் தம்முடைய அருட்பாவின் சாரமாகக் கொண்டவர். உயிரிரக்கக் கோட்பாட்டினை உலகிற்கு உணர்த்திய மனிதநேய அருளாளர். சாதியிலும் மதங்களிலும் காணும் வேறுபாடுகளைக் களைந்து சமய நல்லிணக்கம் காண உழைத்த அருளாளர்.

வள்ளலார் அருளிய பாடல்கள் ஆறுதிருமுறைகளாகப் பகுக்கப்பெற்றுள்ளன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இப்பாடல்கள் புதிய விழிப்புணர்வைத் தோற்றுவித்தன; சமூக சீர்திருத்தத்திற்கும் அடிகோலிய பாடல்களாக விளங்கின. சாதியிலும் மதங்களிலும் உள்ள சீர்கேடுகளை எடுத்துரைத்து வள்ளலார் ஆன்மீக ஒருமைப்பாட்டுணர்வுக்கும் வழிகோலினார்; சன்மார்க்க சங்கம், மரணமிலாப் பெருவாழ்வு, என்பன போன்ற கோட்பாடுகளை முன்வைத்து மக்களிடையே புத்துணர்வைத் தோற்றுவித்தார்; சமூகச்சிந்தனையாளர்களுள் முன்னோடியாகத் திகழ்ந்தவர்.

இராமலிங்க அடிகளாரின் சிந்தனைகளை அடிப்படையாகக் கொண்டு பேராசிரியர் வை. இரத்தினசபாபதி அவர்கள் சித்திவளாகம் என்னும் இந்நூலை எழுதியுள்ளார். பல ஆண்டுகளுக்குப்பின் மீண்டும் இந்நூல் மறுபதிப்பாக வெளிவருவது வரவேற்கத்தக்கது. இம்முயற்சியில் ஈடுபட்டு இத்தகைய நூல்களைச் சிறப்பாக மறுபதிப்பு செய்வதற்கு ஆர்வம் காட்டிவரும் சென்னைப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை இயக்குநர் பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி அவர்கட்குப் பாராட்டுகள்.

சென்னை
1.09.2000

பொன். கோதண்டராமன்
(பொற்கோ)
துணைவேந்தர்
சென்னைப் பல்கலைக்கழகம்

# முன்னுரை

1980-81ஆம் ஆண்டிற்குரிய, வள்ளலார் சித்தி நூற்றாண்டு விழா நினைவு அறக்கட்டளையின் சார்பில், 22, 23-3-82 ஆகிய இரண்டு நாட்கள் சென்னைப் பல்கலைக்கழகத்து, டாக்டர். இராதாகிருஷ்ணன் மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனத்தில் யான் ஆற்றிய சொற்பொழிவுகளின் எழுத்துருவமே இந்நூல். இரண்டு நாட்களிலும் அவைத்தலைமையேற்று என்னைச் சிறப்பித்த என் ஆசிரியரும் நிறுவன இயக்குநரும் ஆகிய வேதாந்த வித்தகர், டாக்டர். இரா. பாலசுப்பிரமணியனார் பிஎச்.டி., டி.லிட்., அவர்களுக்கு என் வணக்கத்தை உரிமையாக்கிக் கொள்ளுகின்றேன்.

யான் இந்நிறுவனத்தில் முதன்முதல் ஆற்றிய சொற்பொழிவுகள் வீரசைவம் என்ற பெயரில் இந்நிறுவனத்தின் பொன்விழா வெளியீடாக வந்தது. வள்ளலார் சித்தி நூற்றாண்டுவிழா அறக்கட்டளையின் சார்பில் அமைந்த என் சொற்பொழிவு சிதம்பரம் இராமலிங்கரின் சித்தி வளாகம் என்ற நூலாக இப்பல்கலைக் கழகத்தின் நூற்றாண்டின் மேல் வௌ் வெள்ளி விழா வெளியீடாக வருகிறது என்பதை எண்ணிப் பெருமையடைகிறேன்.

சிதம்பரம் இராமலிங்கம் என்பது அவரே ஏற்றுக் கொண்ட பெயர். சித்திவளாகம் என்பது அவர் நின்ற திருவருட் சந்நிதி விளக்கம். இவ்விரண்டையும் இணைத்த நிலையில் இணைந்து நின்ற பெயரே இந்நூலின் பெயர். வள்ளலாரை மெய்ப்பொருளியற் கண்கொண்டு காண விரும்புகிறவர்களுக்கு இது ஒரு முன்னுரை அல்லது பாயிரம் எனக் கொள்ளலாம்.

வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபில் யான் ஒருவன் என அருளிய இராமலிங்கர் தாம் வந்த மரபும், தாம் மேற்கொண்ட மார்க்கம் இது எனக் கூறும் வகையில் என்மார்க்கம் எனச் சிறப்பித்த புதியமரபும் ஆகிய இருவகை மரபுகளையும் விளக்கும் வகையில் தொடக்கக் கட்டுரையும், அதையொட்டியே சன்மார்க்கம், சாகாக் கலை ஆகியவைகளை வள்ளலார்

மேற்கொள்ளும் முறையை விளக்கும் வகையில் இரண்டாம் கட்டுரையும், சமயங்கள் மதங்கள் ஆகியவைகளின் படிமுறை வளர்ச்சியே சுத்த சன்மார்க்கம் என்பதை விளக்கும் வகையில் மூன்றாம் கட்டுரையும், திருவருள் சமூகம் இருந்தவண்ணம் வேறு, திருவருட் சந்நிதி வளாகம் இருந்தவண்ணம் வேறு என்பதை விளக்கும் வகையில் நான்காம் கட்டுரையும் அமைந்துள்ளன.

அறக் கட்டளை நிறுவிய வள்ளல் பொள்ளாச்சி மகாலிங்கனார் அவர்களை நன்றியுடன் கைகூப்பி வணங்குகிறேன். வள்ளல் மகாலிங்கனாரின் மணிவிழா நன்னாளில் (18-3-83) மணிவிழா நல ஆண்டில் (1983) இது வெளி வருவது ஒருவகைப் பொருத்தமுடையது எனக் கருதி, அவருக்கு என் மணிவிழா வணக்கத்தையும் இதன் மூலம் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இச்சொற்பொழிவுக்கு என்னைப் பரிந்துரை செய்த அறக்கட்டளைக் குழுவினரையும், சென்னைப் பல்கலைக் கழகத்து நூற்றாண்டின் மேல்வளர் வெள்ளிவிழா வெளியீடாக வருவதற்குத் துணை புரிந்த நிர்வாக உறுப்பினர்களையும் நன்றிப் பெருக்குடன் வணங்குகின்றேன்.

என்னைப் பல்லாற்றானும் ஊக்கமூட்டிவரும் பதிவாளர் திரு. குமாரசாமி அவர்களையும், துணைவேந்தர் டாக்டர். எம். சாந்தப்பா அவர்களையும் பணிவன்புடன் வணங்குகிறேன்.

எப்போதும் யான் தரும் தொல்லைகளையெல்லாம் தொண்டாக்கி அழகுற அச்சிட்டுத் தந்த அவ்வை அச்சுக்கூடத்தாருக்கு என் நன்றியும் வணக்கமும்.

சென்னை-5.
18.3.1983

இங்ஙன்
வை. இரத்தினசபாபதி

# உள்ளுறை

# ஆளுடைய பிள்ளையார் அருண்மாலை

உயிர்அனுபவம் உற்றிடில் அதனிடத்தே
ஓங்கருள் அனுபவம் உறும்அச்
செயிரில்நல் அனுபவத்திலே சுத்தசிவ
அனுபவம் உறும் என்றாய்
பயிலு மூவாண்டில் சிவைதரு ஞானப்பால்
மகிழ்ந்துண்டு மெய்ந் நெறியாம்
பயிர் தழைந்துறவைத்தருளிய ஞான
சம்பந்தன் என்றோங்கு சற்குருவே.

தத்துவநிலைகள் தனித்தனி ஏறித் தனிப்பர
நாதமாந் தலத்தே
ஒத்ததன் மயமாம் நின்னைநீ இன்றி உற்றிடல்
உயிரனுபவம் என்று
இத்துணை வெளியின் என்னை என்னிடத்தே
இருந்தவா றளித்தனை அன்றோ
சித்தநற் காழிஞான சம்பந்தச் செல்வமே
எனது சற்குருவே.

தனிப்பர நாத வெளியின்மேல் நினது
தன்மயம் தன்மயம் ஆக்கிப்
பனிப்பிலாது என்றும் உள்ளதாய் விளங்கிப்
பரம்பரத்து உட்புறம் ஆகி
இனிப்புர ஒன்றும் இயம்புறா இயல்பாய்
இருந்ததே அருளனுபவம் என்று
எனக்கருள் புரிந்தாய் ஞானசம்பந்தன் என்னும் என்
சற்குரு மணியே

உள்ளதாய் விளங்கும் ஒருபெரு வெளிமேல்
உள்ளதாய் முற்றும்உள் ளதுவாய்
நள்ளதாய் எனதாய் நானதாய்த் தனதாய்
நவிற்றருந் தானதாய் இன்ன
விள்ளொணா அப்பால் அப்படிக் கப்பால்
வெறுவெளி சிவஅனுபவம் என்று
உள்ளுற அளித்த ஞானசம்பந்த
உத்தம சுத்தசற்குருவே

- சிதம்பரம் இராமலிங்கர்

# 1. முன்னுரை

''அருட் பெருஞ்சோதி அருட் பெருஞ்சோதி
தனிப்பெருங் கருணை அருட் பெருஞ்சோதி''

என்பவைகளை அருட் பெருஞ்சோதி ஆண்டவர் தமக்கு எடுத்துக் கொடுத்த நிறை மொழிகள் - மந்திரம் என்று குறிப்பிடும் அருளாளராகிய வடலூர் வள்ளலார் தம்மைச் 'சிதம்பரம் இராமலிங்கம்' என்றே கையெழுத்திட்டுத் தெரிவித்துக் கொள்ளும் வழக்கமுடையவர்.

'சமரச சுத்த சன்மார்க்கம்' என்ற தொடரின் அடிப்படையில் தம் கொள்கையை வகுத்தவர்.

சமரச சுத்த சத்திய தருமச்சாலை
சமரச சுத்த சத்திய ஞானசபை

என்ற இரண்டையும் தம்முடைய கொள்கைச் செயற்பாட்டு நிலையமாகவும் குறிக்கோள் விளக்க நிலையமாகவும் அமைத்தவர்.

சமரச சுத்த சத்திய சித்தி வளாகம் என்பதை அருட் பெருஞ்சோதி ஆண்டவரின் திருச்சந்நிதி எனக் கண்டவர். கொள்கை விளக்கத்தை அடிப்படையாகக் கொண்டு 'சன்மார்க்கக் கொடி' ஒன்றையும் அமைத்தவர். கொள்கைக்கு உரிய இயக்க வடிவமும் செயற்படு நெறிகளும் இணைந்து அனுபவப்படும் சன்மார்க்க மரபினர் திருக்கூட்டம் அமைத்து, அதற்குச் சமரச சுத்த சத்திய சங்கம் என்ற பெயரை அமைத்தவர்.

'இருமையில் ஒருமை' என்ற அடிப்படைத் தத்துவ வரம்பில் அமைக்கப் பெற்ற சாகாமை அல்லது மரணத்தை ஒழித்தல் என்பதையும் பெருவாழ்வு என்பதையும் இணைந்த ஒருமை நெறியே உண்மை நெறி 'எனப்பெறும் உலகப் பொதுமை நெறி எனக் கண்டவர்.

மரணமிலாப் பெருவாழ்வு வாழ்ந்திடலாம் வம்மின் உலகியலீர் என அனைவரையும் அருள் உள்ளத்தால் சத்திய வாழ்வுக்கு அழைத்த அருள் தொண்டர். இந்நிலவுலகில் கி.பி. 1823 முதல் 1874 வரை உள்ள ஐம்பத்தோராண்டுகள் அனைவர் கண்களுக்கும் தோற்றம் உறும்படி

வாழ்ந்தவர். வள்ளலார் என்றும் திருவருட் பிரகாச வள்ளலார் என்றும் உலகவர்களால் ஆன்மநேய ஒருமைப் பாட்டுணர்வுடன் அழைக்கப் பெறவும் போற்றி வணங்கப் பெறவும் நின்ற அருளாளர். 'சீவகாருணியமே மோட்ச வீட்டின் திறவுகோல்' என்ற தொடரையும், பசித்தவனுக்குச் சோறு போடுதலே பேரறம் என்ற செயலையும், சோதி வழிபாடு என்ற அருட் பேற்றையும் இவ்வுலகில் எங்கேனும் ஒரு மூலையில் கண்டால் அது சிதம்பரம் இராமலிங்கரின் கொள்கைத் தாக்கம் என்று கொள்ளுமளவுக்கு மக்களுள்ளங்களில் நிலைத்து வாழும் நீர்மையர். அருள் நலம் பழுத்த திருநெறித் தமிழ் வள்ளல்.

'வரலாற்று அடிப்படையில் வள்ளலார்' என்ற தலைப்புக்குரிய செய்திகள் கீழே கொடுக்கப் பெற்றுள்ளன. திருவருட்பாவை வரலாற்று முறையில் பதிப்பித்த சன்மார்க்க தேசிகன் - ஊரன் அடிகள் பதிப்பு முறையைக் கொண்டது.

| | |
|---|---|
| காலம் | கி.பி. 1823-1874 |
| பிறப்பு | 5.10.1823 சுபானு, புரட்டாசி, 21, ஞாயிறு. |
| சித்தி | 30.1.1874 ஸ்ரீமுக, தை, 19, வெள்ளி. |
| பிறந்த ஊர் | மருதூர், வடலூரிலிருந்து 7 கல் தொலை, சிதம்பரம் வட்டம். |
| பெற்றோர் | இராமையபிள்ளை<br>சின்னம்மை (ஆறாவது மனைவி) |
| உடன் பிறந்தோர் | நால்வர். சபாபதிப்பிள்ளை, பரசுராமப் பிள்ளை, சுந்தரம் அம்மையார், உண்ணாமுலை அம்மையார். வள்ளலார் ஐந்தாவது பிள்ளை |
| பிள்ளைப் பெயர் | இராமலிங்கம் |

| | | |
|---|---|---|
| வாழ்விடங்கள் | மருதூர் | 1823-1825-2 |
| | சென்னை | 1825-1858-33 |
| | கருங்குழி | 1858-1867-9 |
| | வடலூர் | 1867-1870-3 |
| | மேட்டுக்குப்பம் | 1870-1874-4 |

நிலையங்கள்

| | |
|---|---|
| சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் | *1865* |
| சமரச சுத்த சன்மார்க்க சத்திய தருமச்சாலை | *1867* |
| சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞானசபை | *1872* |
| சித்தி வளாகம் | *1870* |

## சிதம்பரம் இராமலிங்கம்

வள்ளலாரைக் குருவாகவும் தெய்வமாகவும் வழிபட வேண்டும் என்ற கருத்துடைய அன்பர்கள் அவரைத் திருவருட்பிரகாச வள்ளலார், இராமலிங்க சுவாமிகள் என்றெல்லாம் அழைக்க விரும்பினாலும் 'சிதம்பரம் இராமலிங்க பிள்ளை' என்ற அளவில் மட்டுமே நூல்களிற் குறிப்பிடப் பெற வேண்டும் என்பதில் அழுத்தமான பிடிப்பு உடையவராக இருந்தார் வள்ளலார். 'இராமலிங்க சுவாமிகள்' என்று எழுதக் கூடாது எனக் கண்டிப்பாக மறுத்து விட்டவர். தம்முடைய பெயரைப் பொறுத்த வரையில் இரண்டு வகையான வழக்காறுகளை மட்டுமே அனுமதித்தார். 'சிதம்பரம் இராமலிங்க பிள்ளை' என்பது ஒன்று. இதில் உள்ள பிள்ளை என்பது சாதிப் பெயரன்று. இறைவன் தன்னைப் பிள்ளையாக நிறுத்தினான். பிள்ளை என்ற உறவிலேயே பல வகையான பேறுகளைத் தந்துள்ளான். தம்மை இறைவன் தன் செல்லப்பிள்ளையாக்கினன் என்ற கருத்துகளைக் குறிப்பிட அமைக்கப் பெற்றதே பிள்ளை என்ற சொல்.

தத்துவ உலகிலும் சமய உலகிலும் குரு சிஷ்ய உபதேச மரபு வரும் போது தந்தையும் மகனும் என்ற முறைமையைப் பின்பற்றுவர். இம்மரபினைச் சந்தான பரம்பரை அல்லது சந்தான ஆசாரிய பரம்பரை என்று குறிப்பிடும் முறை உண்டு. மேலும், சமயப் பயிற்சி முறையில் இறைவனைத் தந்தையாக, தன்னை மகனாக அமைத்துப் பயிற்சி மேற் கொள்வது சற்புத்ர மார்க்கம் எனப் பெறும். அவ்வகையில் வள்ளலாரும் தத்துவக் கொள்கைகளை ஆசாரிய மரபு முறையில் வெளிப்படுத்தியவர் என்ற கருத்துத் தோன்றும் வகையில் 'பிள்ளை' என நின்றார் என்றுங் கொள்ளலாம். ஆயினும், வள்ளலார் தாம் அரசுரிமைப் பிள்ளை என்ற வகையில் அருள் அரியாசனம் அமர்ந்து, அருட் செங்கோல் ஏந்தி, அருளாட்சியையும், அருள் நெறிப்பட்ட ஐந்தொழில்களையும் நடத்தி வருகிறார். இவ்வகையில் 'பிள்ளை' என்று தாம் வழங்கப் பெறுதலை மிகவும் ஏற்றவர் என்றே

கொள்ளலாம். எனினும், தாம் கையெழுத்திடும் போது 'பிள்ளை' என்னும் சொல்லை இணைப்பதில்லை. 'சிதம்பரம் இராமலிங்கம்' என்றே கையெழுத்திடுவார். இதுவே இரண்டாவது வழக்காறு. சிதம்பரம் என்பதனோடு தம்பெயரை வள்ளலார் இணைத்துக் கையெழுத்திடமுற்பட்டது ஏன் ? 'சிதம்பரம்' என்பதைத் தம் பெயரோடு இணைத்தமைக்குக் காரணம் என்ன ?

இந்நிலவுலகில் மந்திர எழுத்துகளாக 51 எழுத்துகளைக கொள்வது போல் ஐம்பத்தோர் ஆண்டுகள் மட்டுமே வாழ்ந்த வள்ளல் தம் குழந்தைப் பருவத்தில் இரண்டாண்டுகள் மருதூரில் வாழ்ந்தார். பின்னர் 33 ஆண்டுகள் சென்னையில் கழித்தார். எஞ்சி நின்ற 16 ஆண்டுகளை அவர் கருங்குழி, வடலூர், மேட்டுக்குப்பம் ஆகிய இடங்களிற் கழித்தார். சிதம்பரம் சென்று வரும் வழக்கமுடையவர் என்பதைத் தவிர, கையெழுத்திடும் அளவுக்கு முக்கியம் உடையதாகச் சிதம்பரத்தை அமைத்தது ஏன் ?

வள்ளலாருடைய பெற்றோர்கள் அவரை முதன் முதல் அழைத்துச் சென்று காட்டிய கோயில் சிதம்பரமே. சிறிய குழந்தைப் பருவத்திலேயே, சிதம்பர இரகசியப் பொருளைத் திரைதூக்கி அர்ச்சகர் காட்ட, அச்சிதம்பர இரகசியத்தைத் தரிசித்ததோடன்றி, அப்பொருள் தமக்கு 'மெய் உறவாம் பொருள்' என்றும் அறியலானார்.

> ''தாய் முதலாரோடு சிறிய பருவமதில் தில்லைத்
> தலத்திடையே திரைதூக்கத் தரிசித்த போது
> வேய்வகை மேல் காட்டாதே என்றனக்கே யெல்லாம்
> வெளியாகக் காட்டிய என் மெய் உறவாம் பொருளே''

என்று வள்ளலாரே அருள்விளக்கமாலை 44-ஆம் அருட்பாவில் இச்செய்தியைத் தெரிவித்துள்ளார்.

வள்ளலார் தம்முடைய வாழ்நாளின் பிற்பகுதியில் தம்மால் நிலை நாட்டப் பெற இருக்கிற கொள்கையின் மூலங்களாக அமைந்த பல உண்மைகளைச் சிதம்பரத்தில் பெறுகிறார். திரைதூக்கத் தரிசித்தல், ஞான ஆகாய இலிங்கத் தலம் எனப்பெறும் சிற்சபைக்கும் கூத்தப் பெருமான் ஆடிக் கொண்டிருக்கும் பொற்சபைக்கும் இடையில் ஒளிப் பொருளாகத் தொங்கிக் கொண்டிருக்கும் வில்வமாலையின் மூலம் திருவருளையே காண்கிறார். உருவமாசுய

கூத்தப் பெருமானுக்கும் அருவமாகிய ஆகாய இலிங்கத் தலத்துக்கும் இடையே - இருமைக்கு இடையே - இருமையையுங் கடந்ததும் உயர்ந்ததும் ஆகிய 'அருளை' நேரே காண்கிறார். ஆயினும், ஒருவர் திரை தூக்கவும், கர்ப்பூர ஒளி காட்டவும் ஆகிய துணைச் செயல்களெல்லாம் தேவையாகின்றன. அவ்வகையில் உருவமுடைய தம்மை அருளானது தழுவி வெளிப்பட வேண்டுமானால், அருவநிலையினதாகிய ஆகாய லிங்கம் தம்மோடு இணைய வேண்டும். அத்தகைய இணைப்பின் இடையில் அருள் வெளிப்படும் என்ற கொள்கையின் அடிப்படையில் சிதம்பரத்தை மெய்உறவாம் பொருள் என இணைத்து, அந்த இணைப்பின் விளக்கத்தை அருள்விளக்கமாலையிற் கூறினார். இரு வேறுநிலைகளையுடைய பொருளின் இடையில் நின்று, இணைப்பை - சமரசத்தை உண்டாக்க நிற்பதுவே, பின்னர், சமரசப்படுத்தும் நிலையில் பூர்வமாக்கி, உத்தரமாக மருவுகிறது என உணரும் நிலையில், தன் மெய் உறவாம் பொருளாக இன்று காணப்படுவதுவே, பின்னர் மெய் உறவாம் பொருளாகிய அருள் என வந்து நிற்கும் என விளக்கம் அமையும் நிலையில் 'சிதம்பரம்' என்பதைத் தம்முடன் இணைத்துக் கொண்டார். அவ்வகையில், அது பூர்வ ஞான சிதம்பரமாக அமைகிறது. பொதுமைநெறி அல்லது சமரச உண்மைப் பொதுநெறி என்ற ஒன்றைக் காணவேண்டுமானால் அதற்குரிய மூலக் கொள்கைகள் இரண்டனுள் ஒன்று - பூர்வமாக்கி உத்தரமாக மருவுவது என்பதாம். பூர்வமாக்கி உத்தரமாக மருவுவது சிதம்பரம் என நிறுத்தும் வகையில் சிதம்பரத்தை இணைத்துக் கொள்கிறார்.

மேலும், உபதேசப்பகுதியில் 'சுப்பிரமணியமும் அருள் நெறியும்' என்ற தலைப்பில் கோயில்களில் அர்ச்சகர் கர்ப்பூர ஆராதனை செய்து தரிசிக்க வைப்பதன் உட்கருத்தை அடிகளே விளக்குகிறார்கள். வள்ளலார் தில்லைத் தரிசனத்துக்கும் அது பொருந்துவதே. அவ்வகையில் அர்ச்சகர் வள்ளலாருடைய அறிவாகிய கர்ப்பூரத்தில், சிதம்பர உண்மையாகிய விளக்கம் என்னும் பிரகாசத்தைக் கொண்டு, அசுத்த விஷயாதிகள் பொறி புலன்களிற் பற்றாமலிருக்க, நாதமாத்திரமாகிய மணியொலியுடன் தரிசிக்க வைத்தார் என்றே கொள்ளலாம்.

வள்ளலார் இந்நிகழ்வை அருள் விளக்கத்துக்குரிய தொடக்கம் என்று கொண்டமையால், இதுவே அவருக்கு ஒருவகையில்

தீட்சையாக அமைகிறது. அவ்வகையில் தீட்சா நாமம் முதன்மை பெற்றுச் சிதம்பரம் இராமலிங்கம் என அமைகிறது.

இக்கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் வேறு சில நிகழ்வுகளும் அமைகின்றன. தில்லையில் சேக்கிழாருக்கு அருளப்பெற்ற பரநாத ஒலியே இவரையும் தூய்மையாக்கி, இவருக்கும் பரநாத ஒலியின்பத்தை மருவ வைத்தமையாலேதான் சிறுபருவத்துத் தில்லைத் தரிசனத்தின்போது இவர் சிரித்தார் என்ற நிகழ்ச்சியானது வரலாற்றுத் தன்மை பெறுகிறது.

சேக்கிழாரின் திருவருட் பெருமையானது பெரியபுராணத்தால் வெளிப்பட்டது போல, அதற்கு 'உலகெலாம்' என்ற மெய்ம்மொழியும் அதன் பொருளும் துணை நின்றாற் போல வள்ளலாருக்கும் பெரிய புராணமே முதல்நின்று அவரை வெளிப்படுத்துகிறது. 'திருஞானசம்பந்தர் புராணமே' அவர் முதன் முதல் பொருளென நிறுத்திப் பேசுதற்குக் காரணமாக அமைந்தது. அதனால், திருஞானசம்பந்தரே குருவாக அமைகிறார். தாம் தில்லைத் தரிசனத்தின்போது கேட்கப் பெற்ற பரநாத ஒலியின் விளக்கமே,

''உலகெலாம் என்னும் மெய்ம்மொழிப் பொருள் விளக்கம்''

என வெளிப்படுகிறது.

அர்ச்சகர் தில்லையில் திரைதூக்கி, கர்ப்பூர ஒளியால் அமைத்த தரிசனத்தால், திரை தூக்க நெற்றிக் கண்ணில் பட்ட ஒளிநிலையால் ஒருமையுணர்வுடன் பூர்வ ஞானம் பெறும் நிலையை வள்ளலார் பெறுகிறார். அப்போதே அவருக்கும் மெய்ம்மொழிப் பொருள் உபதேசம் அளிக்கப் பெறுகிறது. இதனை,

''திருவளர் திரு அம்பலத்திலே அந்நாள்
செப்பிய மெய்ம்மொழிப் பொருளும்
உருவளர் திருமந்திரத் திருமுறையால்
உணர்த்திய மெய்ம் மொழிப் பொருளும்
கருவளர் அடியேன் உளத்திலே நின்று
காட்டிய மெய்ம் மொழிப் பொருளும்
மருவி என் உளத்தே நம்பி நான் இருக்கும்
வண்ணமும் திருவுளம் அறியும்''

என்ற பிள்ளைப் பெருவிண்ணப்பம் 118-ஆம் அருட்பாவினால் உணரலாம்.

திரு அம்பலத்தில் அந்நாள் செப்பிய மெய்ம் மொழிப் பொருள் என்பதற்கு இந்நிகழ்வைத்தான் கொள்ள வேண்டுமா ? - என்ற ஐயம் வரலாம். ''உலகலொம்'' என்ற மெய்ம்மொழியை விரிவாக்கி ''உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்'' என்ற வரிமுழுதுமே வெளிப்பட்டது என்றும், 'உலகெலாம்' என்பது மட்டுமே அனைவருக்கும் கேட்டது என்றும், ஏனைய பகுதிகள் சேக்கிழார் திருவுள்ளத்துக்கு மட்டுமே அமையக் கேட்டன என்றும் கூறி, அவ்வொலி பரநாத ஒலியாதலின் அழியாமல் இன்றும் கேட்கப்படுவதாகவே இருப்பது என்றும், அதனைத் தாம் கேட்டது போல் இன்றும் வேறுயாராலும் கேட்கப் பெறுவதற்குரியதே என்றும், கேட்கும் பேறு வாய்க்கவில்லை என்பது அவரவர்தம் தவக் குறையே என்றும் நுட்பமாக உணர்தினாராயிற்று. அவ்வகையில், பரநாதம் அபரநாதம் ஆகிய இரண்டன் தன்மைகளையும் கேட்கவும், உணரவும், பயன் துய்க்கவும் ஆகிய பேற்றினை அன்றே திரு அம்பலத்தில் பெற்றார் எனக் கொள்க.

பரநாத ஒலி கேட்கப் பெறும்போது கர்ப்பூரச் சோதியானது பரவிந்துவாக அமையும். அந்நிலையில் பரநாதம், பரவிந்து எனப் பெறும் திருவடி நிலையையும் வள்ளலார் உணர்ந்தார். அதுவே, திருவடி ஞானம் எனப்பெறும் தீக்கை முறை. இந்நிலையில், வள்ளலார் பேரின்பப் பெருவாழ்வு அனுபவப் படிநிலைகள் 43ல் 37ஆம் நிலையில் பெறும் சுத்தசிவசாக்கிர அனுபவம் அவருக்குக் கைவந்தது எனக் கொள்ள வேண்டும். அது இரவு பகலற்ற சுத்த மௌனநிலை எனப்பெறும் மீதானநிலை. அந்நிலையில் வெளியும் ஒளியுமே அனுபவப்படும். அவ்வகையிலும் வள்ளலாருக்குச் சிதம்பரம் என்பது பூர்வ ஞானமாக அமைகிறது. அத்தகைய பரநாத ஒலி அவரால் அனுபவிக்கப் பெற்றது என்பதை அவர் ''உலகெலாம்'' என்பதற்கு எழுதிய உரையால் உணரலாம். இந்நிலையில், முன்னைப் பிறப்பின் முழுமையையும் ஒருமையுற்று நோக்கும் நிலை உண்டாகும். இத்தகுநிலையை உடன்கொண்ட காரணத்தாலேயே 'சிதம்பரம்' என்பதைத் தம் பெயருக்கு முன்னே இணைத்துக் கொண்டார் வள்ளலார்.

இரண்டு வயது என்று குறிக்கத்தக்க காலத்தே இத்தகைய அனுபவம் வள்ளலாருக்கு வாய்த்திருப்பின், அவர் தம்முடைய கொள்கையை நிலைநாட்டுவதற்கு ஏறக்குறைய நாற்பது ஆண்டுகள் தேவையா ? என்ற வினா எழும்.

அருள் நெறி விளக்கங்கள், அருளுபதேசங்கள் முதலியன சில சமயங்களில் உணர்த்தப் பெறும்போது உணர்ந்து கொள்ள இயலாமல், பிறிதொரு சமயம் உணர்ந்து கொள்ளும் நிலை ஏற்படுவதும் உண்டு என்பதை வள்ளலார் வாய்மொழி கொண்டே உணரலாம்.

''திருவருள் விலாசம்'' என்ற தலைப்பில் இரண்டு அருட்பாக்கள் உள்ளன. இறைவன் தமக்கு மெய்ம்மொழிப் பொருள்விளக்கத்தை அறிவுறுத்திய நிலையையும், அப்போது தம்நிலை எவ்வாறு இருந்தது என்பதையும் வள்ளலார் எடுத்துக் காட்டுவதை அப்பாக்களின் மூலம் உணரலாம்.

''ஆண்டவன் நீ ஆகில் உனக்கு அடியனும் நான் ஆகில்
அருள் உடையாய் இன்றிரவில் அருள் இறையாய்வந்து,
நீண்டவனே முதலியரும் தீண்டரிதாம் பொருளின்
நிலைகாட்டி, அடிமுடியின் நெறி முழுதும் காட்டி
வீண்டவனே காலையில் நீ விழித்தவுடன் எழுந்து
விதிமுடித்துப் புரிதி இது விளங்கும் எனப் புகல்வாய்
தாண்டவனே அருட் பொதுவில் தனிமுதலே கருணைத்
தடங்கடலே நெடுந்தகையே சங்கரனே சிவனே''

என்றும்,

திருநெறி மெய்த் தமிழ்மறையாம் திருக்கடைக் காப்பதனால்
திருவுளங் காட்டிய நாளில் தெரிந்திலன் இச்சிறியேன்
பெருநெறி என் உளத்திருந்து காட்டிய நாள் அறிந்தேன்
பிழைபடாத தெய்வமறை இதுஎனப் பின்பு உணர்ந்தேன்
ஒருநெறியில் எனது கரத்து உவந்தளித்த நாளில்
உணராத உளவையெலாம் ஒருங்குணர்ந்து தெளிந்தேன்
தெருள்நெறி தந்தருளும் மறைச் சிலம்பணிந்த பதத்தாள்
சிவகாம வல்லி மகிழ் திருநடத் தெள்ளமுதே.

என்றும் அமைந்த அருட்பாக்களில் ''திருவுளங் காட்டிய நாளில் தெரிந்திலேன்'' என்று குறிப்பிட்டிருத்தலால் அருளுபதேச நிலைகளிலுங் கூட இத்தகைய தடைகள் நேரும் போலும்.

இனி, வள்ளலார் மூவகையாய் மெய்ம்மொழிப் பொருளைத் தமக்கு அறிவித்ததாகக் கூறுகிறார். 'உலகெலாம்' என்ற மெய்ம் மொழிப் பொருள் ஒன்று போக, எஞ்சி நின்ற இரண்டனை இங்கே வரையறை செய்து கொள்ளல் நலமுடையதாம்.

இரண்டாவது மெய்ம் மொழிப் பொருளை வள்ளலார் ''உருவளர் திருமந்திரத் திருமுறையால், உணர்த்திய மெய்ம்மொழிப் பொருளும்'' என்றார். இதனுள் திருமந்திரத் திருமுறை என்பது திருஞான சம்பந்தர் பாடிய ''தோடுடைய'' என்ற முதற்பதிகம். இது தகர வித்தையுடன் பிரணவ விளக்கமும் அமையத் தொடங்கிய திருப்பதிகம். இதன் திருக்கடைக் காப்பினைக் கீழே காணலாம்.

''அருநெறிய மறை வல்ல முனியகன் பொய்கை அலர்மேய
பெருநெறிய பிரமாபுர மேவிய பெம்மான் இவன் தன்னை
ஒருநெறிய மனம் வைத்துணர் ஞான சம்பந்தன்
திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளி தாமே''

என்பது. இதனால், திருநெறி என்பது அருள்நெறி என்பதும், அதுவே பெருநெறி என்பதும், அது இருமை நிலையில் நின்று, மேல் விளங்குவது என்பதும், ஒருமை நெறியால் உணர வேண்டுவது அந்நெறி என்பதும் தெரிய வந்தன.

இனி, மூன்றாவதாக வள்ளலாரின் உளத்திலே நின்று காட்டிய மெய்ம் மொழிப் பொருள் ஒன்றும் உண்டு. அதுவே,

''அருட் பெருஞ் சோதி அருட் பெருஞ் சோதி
தனிப் பெருங் கருணை அருட் பெருஞ் சோதி''

என்பதாம். இதனை மஹோபதேசப் பகுதியில் வள்ளலார் விளக்குவன கொண்டு தெளியலாம்.

## பெரு நெறியும் முறையும் அறிதல்

'ஒருமையுடன் நினது திருவடி நினைக்கின்ற உத்தமர்' என்று தொட்ங்கும் கந்த கோட்டத்து அருட் பாவில் ''பெருநெறி பிடித்து

ஒழுக வேண்டும்'' என்று ஒருவகை விதியை அமைத்தருளினார். பெருநெறி என்பதற்கு வள்ளலார் காட்டும் விளக்கங்கள் பல. திருஞான சம்பந்தர் தம் திருக்கடைக் காப்பினால் பெருநெறி இது என அறிவித்த போது **''இது தான் பிழைபடாத தெய்வமறை''** என்று அறிந்தேன் என்று குறிப்பிடுகின்றார். பிழைபடாத தெய்வமறையெனும் பெருநெறியை விளக்குவதற்காகவே ''மனுமறை கண்ட வாசகம்'' வள்ளலாரால் எழுதப் பெறுகிறது.

''பசுவின் கன்று தேர்க்காலிற்பட்டு இறக்கவே, தேருர்ந்து சென்ற வீதிவிடங்கனுக்கு எவ்வாறு முறை செய்வது என்பதை அரசவை ஆய்வு செய்கிறது. அங்கே, நெறிகளிலும் பூர்வம், உத்தரம் என்ற இருவகைகள் உண்டு என்று வள்ளலார் விளக்குகின்றார்.

மேலும் அவர் எல்லா உயிர்களையும் உயர்வு தாழ்வு நோக்காது சமமாக நோக்க வேண்டும் என்பது உத்தர பாகத்துள் அமைந்த விதி என்று கூறுகிறார். பூர்வ பாகத்து நீதிக்கும் உத்தர பாகத்து நீதிக்கும் என்ன வேறுபாடு என்பதையும் தெளிவாக விளக்கிக் காட்டுகிறார்.

மந்திரி ஒருவர் மனுச் சோழனிடம் உத்தர பாகத்து நீதி ஒன்றினைக் கூறுவதாக வள்ளலார் எழுதுவதை நாம் சிந்தித்தல் மிக முக்கியமான ஒன்றாகும். ''சுருதியில் எல்லா உயிர்களையும் உயர்வு தாழ்வு நோக்காது சமனாக நோக்க வேண்டும் என்று உத்தரபாகத்தில் விதித்திருக்கின்றது அந்தணரொழுக்கத்துக்கன்றி அரசரொழுக்கத்துக்குப் பொருந்தாதே; அது பொருந்துமானால் பிராமணர் முதலான குலாசாரமும், பிரமசாரி முதலான ஆசிரம ஆசாரமும், பெரியோர் சிறியோர் நல்லவர் தீயவர் என்கிற கிரமப்பாடுகளும் வேறுபட்டு, உலகநிலை தவறி, அரசாட்சி மழுங்கி விடுமே; ஆதலால் பூர்வ பாகத்தில் விதித்த விதிப்படி அறநூல்களிற் குறித்த ஞாயங்களைக் கொண்டு தீர்ப்பிடுவதே நெறியாகும்''. இது மந்திரியின் கூற்று.

இங்கே ஒரு விளக்கத்தை நாம் உளங் கொள்ள வேண்டுவது இன்றியமையாதது. அந்தணர் ஒழுக்கம் வேறு, அரசர் ஒழுக்கம் வேறு. அரசர் ஒழுக்கத்தில் பிராமணர் முதலிய குலாசாரம், பிரமசாரி முதலிய ஆசிரம ஆசாரம் முதலியன அடங்கும் என்பது குறிப்பிடப் பெறுகிறது. அந்தணர் ஒழுக்கம், உலக நிலையை உடன் கொண்ட அரச ஒழுக்கம் என இரண்டு பிரிவுகள் காணப் பெறுகின்றன. திருக்குறளில் நீத்தார் பெருமை என்னும் அதிகாரத்தின் இறுதிக் குறளில் அமையும் கருத்தை

இதனுடன் ஒப்பிட வேண்டும்.

அடுத்து, பொதுமையில் நோக்குதல் என்றால் என்ன என்பதையும் உத்தரபாகத்து நீதியின் தன்மை என்ன என்பதையும் மனுநீதிச் சோழன் வாக்கின் மூலமாக வள்ளலாரே பேசுகின்றார்.

''பரமேசுவரன் அவ்வவ்வுயிர்களிடத்திலும் வேறுபடாமல் விளங்குகின்றபடியால் எவ்வுயிர்களையும் பொதுவாக நோக்க வேண்டும் என்பது உத்தரபாகத்து விதி. அவ்விதியை உயிர்க் கொலைக்கு உரிய பரிகாரம் பற்றி எண்ணும் போது மட்டும் மேற் கொள்வேன். மற்றவைகளுக்குப் பூர்வபாகத்து விதி பொருந்தும்'' என்றார்.

மற்றொரு மந்திரி மனுச்சோழரைப் பார்த்துக் கூறுகிறான். ''அரசே! உமது பெயரினால் விளங்கிய மனுநூலில் பசுக் கொலைக்குப் பிராயச் சித்தம் கூறப் பெற்றிருக்கிறதே'' என்று கேட்க, ''அந்த மனு நூல் அநித்தியமாகிய தேகத்தில் அபிமானமும் அசுத்தமாகிய பிரபஞ்ச போகத்தில் ஆசையும் வைத்த கர்மிகளுக்கே அவ்விதி கூறியதல்லது நித்தியமாகிய சிவத்தில் அபிமானமும் சுத்தமாகிய சிவபோகத்தில் ஆசையும் வைத்த என்பிதா மூதாதைக்கு எவ்விதியோ அவ்விதியே எனக்கும் என் புத்திரனுக்கும் வேண்டத் தக்கது'' என்று மனுச்சோழன் கூறுகிறான்.

இங்கே உயிர்களைப் பொதுமையின் நோக்குதல் என்பதன் விளக்கம் அமைத்து, அதனை உத்தரபாகத்து நீதி என்றும் சுட்டுகின்றார். உத்தரபாகத்து நீதி வேறுபாடு கடந்தது; அந்தணர் ஒழுக்கம் அமைந்தது. பூர்வ பாகத்து நீதியினும் உத்தர பாகத்து நீதி பெருமையுடையது, பொதுமையுடையது என்ற விளக்கம் அமையும். இதனைத் தெளிவாக விளக்கும் வகையில்,

''உத்தர ஞான சிதம்பரம்''

என்ற கொள்கையை விளக்க முற்பட்டு ''உத்தர ஞான சிதம்பர மாலை'' என்ற பதினொரு திருவருட்பாக்களை அமைத்தருளுகின்றார்கள். இதனுள், ஐந்தாம் அருட்பாவில்,

''ஒத்தாரையும் இழிந்தாரையும் நேர் கண்டு உவக்க ஒரு
மித்தாரை வாழ்விப்பது''

என்றும், பசுக்கன்று, மந்திரி, வீதிவிடங்கன் ஆகிய செத்தார் மூவரையும் நேர் நின்று எழுப்பியது உத்தர ஞான சிதம்பரம் என்றும் குறிப்பிடுகின்றார். இதனை உணர்த்தவே மனுநீதி என்பதை 'மனு முறை கண்ட வாசகம்' என மாற்றி குறிப்பிடுகின்றார் இதனை உணர்த்தவே மனுநீதி என்பதை ''மனு முறை கண்ட வாசகம்'' என மாற்றி எழுதுகின்றார் வள்ளலார்.

பூர்வம், உத்தரம் என்பனவற்றின் விளக்கங்களையும், திருஞான சம்பந்தரின் திருக்கடைக்காப்பில் அருநெறி, பெருநெறி ஆகியவைகளை ஒரு நெறிய மனம் வைத்துணர்தல் வேண்டும், அப்படி உணர்ந்தால் வரும் திருநெறி என்ற விளக்கத்தையும் இணைத்துக் காண வேண்டும். இவைகளையெல்லாம் தெளிவு படுத்தவே வள்ளலார் 'மனு முறை கண்ட வாசகம்' என்ற உரை நடையை எழுதுகிறார்.

எனவே, பூர்வஞானம் முழுமையையும் உணர்த்தி, உத்தர ஞானம் நோக்கிய வழியைத்திரை தூக்கிய போது, வெறு வெளியாக்கிக் காட்டிய நிலையை உளங் கொண்டு, பூர்வ ஞான சிதம்பரக் குழந்தையாகவும், உத்தர ஞான சிதம்பரப் பிள்ளையாகவும் அமையும் இராமலிங்கம் எனத் தம்மை இடை நிறுத்தி, விளக்கும் போக்கில்

''சிதம்பரம் இராமலிங்க பிள்ளை''

எனப்பெற்றார். இனி, திருவாரூர் நிகழ்வை உளங் கொள நேர்ந்தவர் தில்லையை ஒட்டிய சிதம்பரம் என்பதை இணைப்பானேன்?

திருவாரூர்ப் பரம்பரை முழுவதையும் திருத்தொண்டத் தொகையிற் பேச, அங்கே தலைமையேற்ற இறைவன் தம்மைத் ''தில்லை வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்'' எனக் கூறப் பெற்ற முதல் வரியே காரணம். இவ்வரி இறைவன் கூறியதன்று என ஒரு சிலரும் இறைவன் கூறியதே எனப் பிறரும் கொள்ளும் இருநிலை உண்டு. எவ்வாறாயினும் திருத்தொண்டத் தொகையின் தலைமை தில்லை என்பதும், சேக்கிழார் தில்லையை இடமாகக் கொண்டதும், அங்கே, வானிழல் கூறியதும் ஆகிய இவைகளை ஒருமை நெறியில் நின்று உணர்ந்ததே காரணம் எனக் கொள்ள வேண்டும். மனுமுறை கண்ட வாசகம் என்பதனுள் அமைந்த பூர்வம், உத்தரம் என்பவற்றை மனத்திற் கொண்டு திருஞான சம்பந்தர் மேற் பாடப் பெற்ற அருள்

மாலையை நோக்கினால் 'திரு அருட்பா' என்ற பெயர்க் காரணம், சிதம்பரம் இராமலிங்கம் என்ற கையெழுத்தின் உட்பொருள் ஆகியவைகளைத் தெளிவுற அறியலாம். இக்கருத்தானது பின்வரும் தலைப்புகளில் மேலும் விளக்கம் பெறும்.

இவ்வாறு அமைந்த உபதேசக் காட்சியைப் பூர்வ ஞானக் காட்சியாக அமைக்க வேண்டும் என்ற குறிப்பிலேயே 'குடும்ப கோஷம்' என்ற தலைப்பில், இரண்டே பிரிவுகள் பாடிய நிலையில் 'நந்திமரபில் ஒரு குரு இருக்கவும் சிதம்பர முனிவர் முதன் முதலில் குருவாக அமைகிறார் சஞ்சலன் என்பானுக்கு', என்பதை அமைக்கிறார். சஞ்சலன் என்ற பெயருக்கு உரியவராக வள்ளலாரை அமைத்தால், தம்மைச் 'சிதம்பரம் இராமலிங்கம்' என அமைத்துக் கொண்டமையின் நுட்பம் தெளிய வரும்.

## திரு அருட்பா

வள்ளலார் அருளிய பாடல்கள் ஆறு திருமுறைகளாகப் பகுக்கப் பெற்று, வெளியிடப் பெற்றுள்ளன. வள்ளலார் பாடியவைகள் வள்ளலார் பெயரிலேயே பதிப்புச் செய்யப் பெற்று விடவேண்டும் என்ற தூய எண்ணமானது உண்மையான அன்பர்களை உண்ணா நோன்பு மேற் கொள்ளும் அளவிற்குக் கொண்டு போய் நிறுத்தியது. வள்ளலார் இசைவு தராமையே காரணம். இதற்கெனத் தவம் மேற்கொண்ட இறுக்கம் இரத்தின முதலியாருக்கு வள்ளலார் எழுதிய திருமுகத்தில் உள்ள செய்தி,

''அக்கடிதத்திற் குறித்த விஷயம் எனக்கு அத்துணை அவசியம் இன்று. ஆயினும் தங்கள் கருத்தின்படி 'இறைவன்' என்னுள்ளிருந்து பாடுவித்தவைகளை மாத்திரம் தாங்கள் வரைந்தபடியே செய்து கொள்ளலாம்'' என்பதே,

இராமலிங்க சுவாமிகள் எனத் தம்பெயர் பதிப்பாகலாகாது என்பதில் அழுத்தமாக நின்ற வள்ளலார் 'திருவருட்பா' எனத் தம்முடைய பாடல்களுக்குப் பெயரிட இணங்கார். அருளும் இறைவனும் ஒன்றே என எண்ணிய நிலையில் இறைவன், தன்னுள் நின்று பாடுவித்தவைகள் என்ற பொருளமைதியில் 'திருவருட்பா' என்ற பெயரை அவர் எண்ணியிருக்க வேண்டும். ஆயினும்,

''திருவருட் பிரகாச வள்ளலார்
என்னும்
சிதம்பரம் இராமலிங்க பிள்ளை
திருவாய் மலர்ந் தருளிய
திருவருட்பா''

என்ற வரிகளை அச்சிற் கண்டதும் மிகவும் வருந்தியிருக்கிருர்கள். பின்னர், ஒருவாறு மன அமைதியுற்றுத் ''திருவருட் பிரகாச வள்ளல் ஆர்? என்று கேட்கும் இராமலிங்கம்'' என்று வைத்துக் கொள்ள வேண்டுமோ? என்று கூறிஞர்களெனில் அவர் தம் உள்ளம் இந்நிகழ்ச்சியால் எவ்வளவு வருத்தமுற்றிருக்கும் என்பதை எண்ணலாம். இனி வருவது பாயிரம்.

## பாயிரம்

வள்ளலார் வரலாற்றில், திருவருட்பாப் பதிப்பின் அடிப்படையில் எழுந்த சிக்கல்களுள் ஒன்று பாயிரம் பற்றியது.

தொழுவூர், வேலாயுத முதலியார் உபய கலாநிதிப் பெரும் புலவர். அருட்பாப் பதிப்பு என்ற வகையில் முதல் நான்கு திருமுறைகளேயன்றி ஆருந் திருமுறை வரையில் அருந் தொண்டாற்றியதாக இறுக்கம் இரத்தின முதலியார் காணப்படுகிருர். திருவருட்பாப் பதிப்பு என்ற வரலாற்றில் இங்கே தொழுவூர், வேலாயுத முதலியாரைக் காணவில்லையே ஏன்? என்ற விஞ நம் உள்ளத்தில் இயல்பாக எழுகிறது. ஆனல் விடை தெரியவில்லை.

பொன்னேரிசுந்தரம் பிள்ளை எழுதிய பாயிரம் ஒன்று. பாயிரத்தை வள்ளலாரிடம் காட்டி இசைவு பெற வேண்டும் என்ற வகையில் சுந்தரம் பிள்ளையே செல்கிருர். வள்ளலார் தம் கருத்தை எழுத்து மூலமாகவே அனுப்பினுர் என்பது வரலாறு. பாயிரம் பற்றிய சிக்கல் உண்டு என்பதை முன்பேயே குறிப்பிட்டுள்ளார் வள்ளலார் என்பதைத் திருமுகப் பகுதியால் உணரலாம். ''நமது சுந்தரம் பிள்ளை எழுதிய பாயிரம் நன்ருயிருக்கிறது அதை அச்சிடுவிப்பீர்களாக''. என்றும், ''அன்றி நமது சிதம்பர சுவாமிகள் பாயிரமும் நன்றாயிருக்கின்றது. அதையும் அப்படியே செய்க'' என்றும் குறிப்பிடப் பெற்றுளன. சிதம்பர சுவாமிகள் பாடலே பாயிரமாக அமைதற்குரிய தகுதி வாய்ந்தது. ஏனெனில், பாயிரச் செய்திகள் பலவற்றையும் இணைத்துத் தருவது.

பொன்னேரி, சுந்தரம்பிள்ளையவர்களின் பாடல் குரு வணக்கமாதற்குரியது எனக் கொள்வதில் தவறில்லை.

வேதாகம சுத்த சைவ சித்தாந்த சமயாசாரிய பீடமாய் விளங்குகிற மதுரைத் திருஞான சம்பந்த சுவாமிகளாதீனம் சிதம்பர சுவாமிகள் அருளிய பாயிரம்

''தண்ணீர் விளக்கெரித்த தன்மை போல் மாந்தர்கள்தம்
உண்ணீர் சிவம்விளங்க ஓங்குவிக்கும் - கண்மணியாம்
நங்கள் இராமலிங்கன் நல்லஅருட் பாமுறையைத்
துங்கமுற மாணு தொழு''

என்பதே.

இவ்வெண்பாப் பாட்டினுள் முதல் வரியின் இறுதிச்சீர் நாலசைச் சீர். வெண்பாத் தளை தட்டும். இதுவரையில் இப்பாயிர வெண்பாவைப் பதிப்புச் செய்த எல்லாச் சான்றோர்களும் 'மாந்தர்கள்தம்' என்பதைத் தனி ஒரு சீராகவே எண்ணிப் பதிப்பித்துள்ளார்கள். இவ்வகையில்,

''தண்ணீர் விளக்கெரித்த தன்மைபோல்மாந் தர்கள்தம்''

என்று சீர்வகைகளைப் பிரித்து அமைதிகொண்டே அவர்கள் பதிப்பித்திருக்க வேண்டும். எவ்வாறுயினும் இவ்வெண்பாவில் உள்ள வேறொரு கருத்தைக் குறிப்பிட்டேயாக வேண்டும். அக்குறிப்பினை உட்கொண்டதே 'தண்ணீர் விளக்கெரிதல்' என்பது.

**பாயிரத்தின் உட்பொருள்**

''ஆயிர முகத்தால் அகன்றது ஆயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே''

என்பது பாயிர இலக்கணம். அவ்வகையில் சிதம்பர சுவாமிகள் அருளிய இப்பாயிரம் பலவகையான நுட்பப் பொருளுடையதாக அமைந்துள்ளது. திருவருட்பா முதல்நான்கு திருமுறைகளின் பதிப்பு அமைக்கப் பெற்றபோது எழுதப்பெற்ற இப்பாயிரமே, பின்னர் ஆறு திருமுறைகளாகத் திருஅருட்பா வெளி வந்த போதும் பாயிரமாக அமைந்த பெருமையுடையது. சிதம்பரசுவாமிகள் பாயிரம் எழுதியமைக்குக் காரணம் தெரியவில்லை.

## தண்ணீர் விளக்கெரிதல்

வள்ளலார் ஓர் அருட்பாவில் மெய்விளக்கு, பொய்விளக்கு, நெய்விளக்கு, தண்ணீர்விளக்கு ஆகியவைகளைக் குறிப்பிட்டு, அவைகளை இணைத்த ஒரு தத்துவ விளக்கத்தையும் அமைத்துக் காட்டுகின்றூர்.

''மெய்விளக்கே விளக்கல்லால் வேறு விளக்கு
இல்லையென்றுர் மேலோர் நானும்
பொய்விளக்கே விளக்கென உட்பொங்கி
வழிகின்றேன் ஓர் புதுமை அன்றே
செய்விளக்கும் புகழுடைய சென்னநகர்
நண்பர்களே செப்பக் கேளீர்
நெய்விளக்கே போன்று ஒரு தண்ணீர்
விளக்கும் எரிந்தது சந்நிதியின் முன்னே.''

என்ற அருட்பா ''அருள் நிலை விளக்கம்'' என்ற தலைப்பில் காணப்பெறும் தனிப்பாட்டு. இவ்வாறே 'அறநிலை விளக்கம்' என்ற தலைப்பில் ஓர் அருட்பா இருக்கிறது. அது இறுக்கம் இரத்தின முதலியாருக்கு எழுதப்பெற்ற முடங்கலின் தொடக்கத்தில் காணப்பெறுகிறது. அத்தகைய அமைப்பிலேயே இதுவும் அமைந்திருக்கலாம். இப்பாடலின் பொருள் கீழே கொடுக்கப் பெறுகிறது.

''மெய்விளக்கே விளக்கு; வேறுவிளக்கு இல்லை என்று சான்ருேர் கொண்டனர். பொய்விளக்கே விளக்கு என்பது என் உட்கிடை. அத்தகைய அனுபவத்தையும் உடலானது புறத்தே வெளிப்படுத்தும். ஆகையால், பொய்விளக்கே விளக்கு என்ற கொள்கை என் அனுபவத்தால் விளைகிறது. அது ஒரு புதுமையன்று. நெய் விளக்கைப் போலவே சந்நிதியின் முன் தண்ணீர் விளக்கும் எரிந்தது'' என்பதே அப்பாடலின் உட்பொருள்.

## அருள்நிலை விளக்கப் பாட்டின் விளக்கம்

அருளாளர்கள் சில அற்புத நிகழ்வுகளை நடத்தியுள்ளார்கள். அவைகளுக்கு விளக்கம் அமைக்கும் சான்ருேர்கள் அற்புதம் நிகழ்த்தியவர்களின் கை, வாய் முதலிய கருவி கரணங்கள்

சாதாரணமாக எல்லா மனிதர்களுக்கும் அமைந்துள்ள கருவி கரணங்கள் போன்றவைகளாகத் தோன்றினும், அவை பதி கரணங்கள். இறைவனின் கருவி கரணங்களாக அவை அமைந்து விட்டமையால் அத்தகைய அற்புதச் செயல்களை நடத்துகின்றன. ஆகையால், மெய்யாம் பதிப்பொருளே செய்கிறது. அற்புதத்தை நிகழ்த்திய மனித அமைப்புடைய கருவி கரணங்கள் அங்கே இல்லை. எனவே, அருளாளர் கடவுளாகவே மாறி விட்டார்.

''பாலை நெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனை அன்று ஏவிக் கராங் கொண்ட-பாலன்
மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்
கரணம்போல் அல்லாமை காண்''

என்பது திருக்களிற்றுப் படியார் 12ஆம் வெண்பா. அருளிப்பாடுகளை அருளிய அவர்களின் உடம்பு முதலிய கருவிகள் நம் கருவிகளைப் போன்றவை அல்ல. கடவுள் அருளாளர் வழியில் செய்கிறார் என்பதன்று; கடவுளே அவர் என்ற கருத்தில் மெய் விளக்கே விளக்கு என்னும் சான்றோர் கொள்கை உண்டு என்றார்.

ஆனல், மனிதர்களுடைய கருவி கரணங்கள் பொய் விளக்கு எனப் பெற்றன. இயற்கையில் ஒளியற்றவைகளாய் இருந்து, பின்னர் நடை பெறுகின்ற வேதித்தல் என்னும் செயலால் வேதிக்கப் பெற்ற பொருளைப் போல நின்று விளக்கம் செய்கின்றன என்ற வகையில் அவை பொய் விளக்கு. ஆற்றுநீர் கடலில் கலந்து மீளும்போது, கடல் நீரின் தன்மையை வெளிப்படுத்துகிற ஆற்று நீர் போல, மனித நிலையிலுள்ள கருவி கரணங்களே அருள் தன்மையை வெளிப்படுத்தும். உள்ளே அனுபவிக்கப் பெற்றதை வெளியே பொழிந்து விளக்கும் தன்மையுடையது இவ்வுடல். உள்ளே அனுபவிக்கப் பெற்ற அருளமுதம் வெளியில் பொங்கி வழியும் நிலையை என் உடம்பிலேயே காணலாம். மனிதனுடைய கருவி கரணங்கள் இயற்கையிலேயே அருள் அல்ல. அருள் அனுபவப்படுகின்றபோது அருளை வெளிப்படுத்தும் தன்மை அவைகளுக்கு உண்டு. இதனை

''ஆற்றால் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை
மாற்றி அவ்வாற்றால் மறித்தாற் போல்-தோற்றிப்
புலன்களெனப் போதம் புறம் பொழியும் நந்தம்
மலங்கள் அற மாற்றுவிக்கும் வந்து''

என்ற திருக்களிற்றுப்படியார் 11ஆம் பாட்டானது தண்ணீர் மாறாமல் கடலின்தன்மையை வெளிப்படுத்துவது போல், அருளாளர்களின்கருவி கரணங்கள் புலன்களெனவே நின்று, உள் அனுபவிக்கப் பெறும் போகத்தை ஞானமாகப் புறம்பொழியும். அந்த ஞானம் நம் மலங்களைநீக்கும். இதனைத்தன்மூலம்விளங்கிக்கொள்ளலாம்என்றும், இதில் புதுமை ஏதும் இல்லை என்றும் கூறினார். ஒன்று ஒன்றிற் கலக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. திருவருட் சந்நிதி விசேஷம். திருவருளின் சந்நிதியில் தண்ணீர் விளக்கும் எரியும். நெய் விளக்கு எரிவது நமக்குத் தெரியும். உலகில் நாம் பார்ப்பது அதுவே. உலகில் பாராதது தண்ணீர் விளக்கு. நாம் பொதுவாகப் பார்க்கும் நெய் விளக்குப் போலவே, தண்ணீர்விளக்கும்எரியும். அவ்வாறு எரிவது தான்திருவருள் சந்நிதிப் பெருமை என்கிறார். இதன் அடிப்படையிலேயே திருவருள் சித்தியைப் பெற்றவன் முன்னிலையில் செத்தார் எழுவர்; செத்த பிணம் எழுந்து செயல்புரியும். அவர்கள் செத்தாரைச் சென்று எழுப்புவதின்று. அவர்கள் திருமுன் இவையெல்லாம் நடைபெறும். திருவருட் சோதிச் சந்நிதியின் முன் தண்ணீர் விளக்கும் எரிந்தது; நெய் விளக்கு எரிவதைப் போலவே இதுவும் எரிந்தது என்றார்.

இதை எடுத்துக் காட்டி, திருவருட்பாவின் சந்நிதி முன் நின்று தொழுதால் போதும்; திருவருட்பாவின் சந்நிதியில்வந்து நின்றவனின் உள்ளே இருக்கும் சிவம் பெருகும்; ஓங்கும். திருவருட் சந்நிதியில் தண்ணீர் விளக்கு எரிந்தது போல, திருவருட்பாமுறை என்னும் சந்நிதியில் துங்கம் உறும்; சிவம் விளங்கும்; ஓங்கும் என்று இயைபு படுத்திக் காட்டினார் சிதம்பர சுவாமிகள். மாந்தர்களை உத்தமர்களாக ஓங்குவிக்கும் என்பது பொருள். திருவருட் சந்நிதிப் பெருமை போலேயே திருஅருட்பாச் சந்நிதிப் பெருமையும் அமையும் என உணர்த்தினார்.

திருவருட்பாப் பாயிரத்தை அருளிய சிதம்பர சுவாமிகள் மதுரைத் திருஞான சம்பந்தர் ஆதீன மரபில் வந்தவர்கள். தம்மரபின் முதல்வர் திருஞான சம்பந்தர்,

''வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக''

என்ற வரியை, உடன்கொண்ட பாட்டினை ஏட்டில் எழுதி வையையாற்றில் இட்டார். தண்ணீர் அந்த ஏட்டினை எதிரேறச் செய்தது. அதே சமயம் கூன் பாண்டியன் கூன் நிமிர்ந்து ஓங்கு உத்தமனானான். திருஞான சம்பந்தர் சென்று அவன் முதுகைத் தொட்டு

நிமிர்த்தவில்லை. திருமுறை எழுதும் போது முன்னின்றான். வணங்கிநின்றான். அவ்வளவே, அவ்வாறே திருவருட்பாவின் சந்நிதிமுன் அனைத்தும் நிகழும். ''தண்ணீர் விளக்கும் எரிந்தது'' என்ற அருள் விளக்கத்தை, வள்ளலாரின் அருள் விளக்க மொழிகளையே முதன் மொழிகளாக்கி,

''தண்ணீர் விளக்கு எரிந்த தன்மை போல்''

திருவருட்பாவின் சந்நிதியில், மாந்தர் தம் உள்நின்ற சிவம் விளங்கும். விளங்கவே, அவ்விளக்கம் மாந்தர்களை ஓங்குமாறு செய்விக்கும் என்றார். 'ஓங்குவிக்கும்' என்ற செய்தியை வள்ளலார் அருளிய அருட்பெருஞ்சோதி அகவலில் ஆண்டவர் அருளியதாக வரும் மொழியால் உளங் கொளவேண்டும்.

''உத்தமன் ஆகுக ஓங்குக என்றெனை
அத்தக வருளிய அருட் பெருஞ்சோதி''

என்ற அகவல் வரிகளிலிருந்து எடுத்து இணைக்கலாம். இப்பாட்டு, **'சித்தி வளாகம்'** என்பதன் பெருமையை நேர் நிறுத்திக் காட்டியது. சித்தி வளாக்ம் எனப் பெறுவது திருவருட் சந்நிதி ஆகும். அங்கே நாம் தொழுதற்கென வள்ளலார் இறுதியாக அமைத்துச் சென்ற திருவிளக்குண்டு. திருவிளக்கை முன்னிட்டுச் சித்தி வளாகத்தை - திருவருட் சந்நிதியைத் தொழு; அதுவே திருவருட்பாச் சந்நிதி என விளக்கியருளிய நிலையில் மலர்ந்தது அப்பாயிரம். எனவே, ''தண்ணீர் விளக்கெரித்த தன்மை போல்'' என்பதனைத்

''தண்ணீர் விளக்கு எரிந்த தன்மை போல்''

என்ற பாட அமைப்பில் தான் அது அமைக்கப் பெற்றிருக்கும் எனக் கொள்ளல் வேண்டும்.

வள்ளலார் வாழ்வில் நிகழ்ந்த அருட்செயல்கள் பல. அவைகளை அவர் செய்தவரல்லர் என்பதை உளங்கொள வேண்டும். அவர்தம் திருமுன் அவைகள் நடைபெறும்; அவ்வளவே. அவர் நடத்தியதாக அமைப்பது திருவருட் சம்மதமன்று. மேலும், அற்புதங்கள் நடைபெற்ற போது, அவற்றைத் திருமுகங்களில் எழுதி விளக்கப் படுத்துதலும் அவர் மேற்கொள்ளாதவை. நரிபரியாச் செய்தல், வித்தின்றி விளைதல் என்பன போன்று தண்ணீர் விளக்கானது அருட் சந்நிதியில் எரிதல் என்பதும் திருவருட் பெருமையை உடன் கொண்ட குறியீட்டுச் சொல்.

## பாயிரம் உணர்த்தும் வேறு உண்மைகள்

திருவருட்பாவானது முதற் சுற்றில் நான்கு திருமுறைகளுடன் முடிந்து நிற்கிறது. ஆனால், இப்பாயிரம் நான்கை நோக்கியே அமைக்கப் பெற்றாலும், ஆறு திருமுறைகளுக்கும் அதுவே பாயிரம். அருள் நெறியில் வள்ளலார் ஐந்தாம் பிள்ளை; கடைப்பிள்ளை. ஆனால், அவர் நின்றது நான்காம் படியில். ஐந்தாம் படி என ஒரு தனிப்படி இல்லாமலேயே பின்வரும் அருளனுபவங்களெல்லாம் நாலாம்படியிலேயே வந்து நிறைவு பெற்று விடுகின்றன. நாலாம் படியில் நின்றமையாலேயே நாலாம்படி வரையிலும், அதற்கு முன் உள்ள படிகளிலும் வந்து நின்று விட்டவர்கள் - செத்தவர்கள் எழுகிறார்கள். எனவே, வள்ளலாரால் முதல் நான்கு படிகளும் விளக்கம் பெறுகின்றன. முன்னே செத்தவர்கள் எழுந்து வந்து பின் உள்ள பெருவாழ்வைப் பெறுகிறார்கள். ஆறாந் திருமுறை வரை அமைந்த பயனையும் நின்று விளக்கிய இடம் நாலாம்படியே; அதனாலேயே நான்காந் திருமுறையின் முதற்பதிகம் 'அன்பு மாலை; இரண்டாம் பதிகம் அருட் பிரகாசமாலை.

'அன்பு மாலை' என்ற பதிகம் எழுதத் தொடங்கினார். தொடங்கும் போது அமைத்த தலைப்பு அன்பு மாலை. அப்பதிகம் முடியும் போது அவர் அருளிய குறிப்பு, ''இதுவரை அற்புதம், இனிமேல் அருட்பிரகாசம்'' என எழுதிவிட்டு, அடுத்த பதிகம் ''அருட் பிரகாச மாலை'' என அமைக்கிறார். தொடக்கம் அன்பு; முடியும் போது அற்புதம். அத்தகைய அனுபவமாற்றம் அவர்களுக்கு அன்பு மாலை, பத்தாம் அருட்பா எழுதும் போது வாய்த்து விடுகிறது. எனவே, நாலாம் படியிலேயே பின் உள்ள படிகளின், திருமுறைகளின் பயன் அமைக்கப் பெற்று விடுகிறது. அதனாலேயே நாலாந் திருமுறை வரையில் உள்ளவைகளை விளக்கும் முறையில் அமைந்த பாயிரப் பாட்டே ஆறாந் திருமுறை வரை அமைந்த முழுமைக்கும் உரிய பாயிரமாக அமைந்தது.

## பாயிரம் உறுதிப்படுத்தும் பயன்

''துங்கமுற மாணா தொழு''. என்பது பாயிரம். ''துங்கமுறல்'' என்றால் என்ன ? சிதம்பர சுவாமிகள் கூறிய இப்பயன் என்ன ? அதன் விளக்கம் என்ன ? என்ற வினாக்களுக்கு விடை காண வேண்டுமாயின், அதற்கும் வள்ளலார் தான்.

ஆறாந் திருமுறையில், ''இனித்த வாழ்வு அருள் எனல்'' என்ற பெயரில் ஒரு பதிகம் உண்டு. அதன் ஒன்பதாம் அருட்பாவாகிய

''பங்கமோர் அணுவும் பற்றிடா அறிவால்
பற்றிய பெற்றியோர் உளத்தே
தங்கும் ஓர் சோதித் தனிப்பெருங் கருணைத்
தரந்திகழ் சத்தியத் தலைவா
துங்கம் உற்று அழியா நிலைதரும் இயற்கைத்
தொன்மையாம் சுத்தசன் மார்க்கச்
சங்கம் நின்று ஏத்தும் சத்திய ஞான
சபையவா அபயவாழ் வருளே''

என்பதனை நோக்கியே விடை காணவேண்டும்.

சுத்த சன்மார்க்கத்தின் பயன் இரண்டு பகுதிகளாக அமைந்த ஒன்று. மரணம் இன்மை முதற்பகுதி; பெரு வாழ்வு இரண்டாம் பகுதி. இரண்டற்கும் இடையே தடையேதும் இல்லை. கணுவற நின்றவை. முதற்பகுதியை நினைவுபடுத்தி, இரண்டாவது பகுதி தாமே வந்தமைவது என்றார்.

இருபகுதிப்பட்டு நின்ற ஒருமைப் பயனை அடைதற்குச் செய்ய வேண்டுவது என்ன ? தான் எனும் அகந்தை அற்றுத் திருவருட்பா முறைக்கு முன் நின்றாலே போதும். திருவருள் தாமே வெளிப்படும். அதன் முன்னால் எல்லாம் நடைபெறும். இது உபதேசப் பகுதியில் வள்ளலாரால் குறிக்கப் பெறும் உபாயமாகும்.

எல்லா வகையானும் தத்துவ நெறியையும் முன்பின் நின்ற பயன்களையும் இணைத்து நின்ற அருட்பாவை நம் சிதம்பர சுவாமிகள் விளக்கும் முறையைத் திருவருள் விளக்கம் எனக் கொள்ளல் வேண்டும். பாயிரத்தை விளங்கிக் கொள்வதே அருட்பாவை அனுபவிக்கும் முறையாகும். இது பொதுவாகப் பாயிரத்துக்கே உரிய சிறப்பு. ஆனால், சிதம்பர சுவாமிகள் மூலம் பாயிரம் வெளிப்படும்போது மேலும் பல உண்மைகள் விளங்குகின்றன.

## பாயிரம் காட்டும் 'நல்ல அருட்பா முறை'

அப்பரடிகள் நல்லூர் என்ற தலத்துக்கு வருகிறார். அங்கே அப்பரடிகள் தொழுது வணங்கும் போது, அவர் தம் திருமுடியில் இறைவன் தம் திருவடிகளை வைத்துத் தீட்சை செய்கிறார். அப்பரடிகள் தொழுகிறார். தொழுகிற அந்த ஒன்றற்கே இறைவன் அவர் உள்ளத்து விருப்பமாகிய திருவடி சூட்டுதலைச் செய்தளிக்கிறான். அந்நிகழ்வை உளங் கொண்டு சிதம்பர சுவாமிகளும் 'தொழுக' என்பது ஒன்றே போதும் என்று முடித்து விடுகிறார். ஏன் ? அருள் நெறியானது நன்மையை மேல் மேல் பெருகவைப்பது. அதனால் அருட்பாவை ''நல்ல அருட்பா'' என்று இனம்சுட்டிக் காட்டுகிறார்.

''நன்மை பெருகு அருள் நெறியே வந்து
அணைந்து நல்லூரில்
மன்னு திருத் தொண்டனார் வணங்கி
மகிழ்ந்து எழும் பொழுதில்
உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்
என்று அவர்தம்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான்
சிவபெருமான்''

என்பது சேக்கிழார் வாக்கு. நன்மை பெருகு அருள் நெறி என்ற தெய்வச் சேக்கிழார் வாக்கை அடிப்படையாக்கி ''நல்ல அருட்பா முறை'' என்றார்.

இனி, 'முறை' என்பதனுள் இரண்டு கருத்துகள் உண்டு. அருட்பா முறை என்பதைச் சந்நிதி முறை எனக் கொள்வது ஒரு கருத்து. இரண்டாவதாக, அருட்பா முறை நான்கா, ஆறா என எண்ணற்க. பன்னிரு திருமுறைகளையும் தன்னுள் அடக்கிய நிலையில் விரிந்த பெருமையுடையது, என்பதைக் குறிப்பிடவே, 'தண்ணீர் விளக்கு' என்பதன் மூலம் ஏடு எதிர்வு அமைத்த திருஞானசம்பந்தர் திருமுறை முதலாக, திருநாவுக்கரசருக்குத் திருவடி சூட்டப் பெறுதல் என்பதை விளக்கும் சேக்கிழார் வாக்கு இறுதியாக நின்ற பன்னிரு திருமுறைகளின் சந்நிதிப் பெருமையை உட்கொண்டதே திருவருட்பா என அமைத்தார்.

முன்னது ஞானசம்பந்தர் வாக்கு; பின்னது சேக்கிழார் வாக்கு. முன்னவர் குருவாக நின்ற காரணத்தால் முன்னது குருவாக்கு. பின்னது பராகாச, பரநாத ஒலியால் விளைந்த திருவருள் மெய்ம் மொழி. இரண்டையும் இணைத்து நின்ற பெருமையே திருவருட்பா முறை என்ற திருவருட் சந்நிதிப் பெருமை எனக் கொள்க.

## நான்காந் திருமுறையின் உட்கிடை

திருவருட்பாப் பதிப்பு என்ற வரலாற்றில் நான்கு திருமுறைகளாலியன்ற ஒரு நூல் என்ற ஒன்றே முதன் முதல் வெளி வந்தது. நான்கு திருமுறைகளையும் முடித்து வைக்க வேண்டியவர்கள் என்ற வரிசையில் ஞானசம்பந்தர் முதலாக நின்ற நால்வர் பெருமக்களுக்கும் அருள்மாலை என்ற பெயரில் நான்கு பதிகங்கள் எழுதப் பெற்றன. அவையே நாலாந் திருமுறையின் இறுதியென நின்றவை.

அருளாட்சி யேற்று அரசு புரிந்தவர்களில் முதல்வர் என்ற வகையில் திருஞான சம்பந்தர் அமைகிறார். அவரே வள்ளலாரின் குருவாகிறார். கொள்கைகளை வரையறை செய்தல் என்ற அடிப்படைத் தொண்டுக்குத் திருஞானசம்பந்தரையே மூலமாகக் கொள்கிறார். இக்கொள்கையானது எந்த அளவுக்குப் பெருமையும் உயர்வும் உடையது என்பதைக் கணித்தறிவதற்கு மாணிக்க வாசகரை மூலமாகக் கொள்கிறார்.

திருவருட்பா நான்காந் திருமுறை வரை அமைந்த வளர்ச்சியின் எல்லை, அதன் அமைப்பு ஆகியவைகளை விளக்க முற்படும் வள்ளலார் மணிவாசகப் பெருமானையே மூலமாகக் கொள்கிறார்.

## இருவர் மொழியை ஒருமைப்படுத்தியது

திருஞான சம்பந்தரை முதற் குருவாக, மாணிக்க வாசகரை உலகமெல்லாம் துதித்துப் பரவி வணங்கி ஏற்றுக் கொள்ளும் ஒரே குரு என்ற வகையில் உலக குருவாக ஏற்றுக் கொண்டு சன்மார்க்க நெறிகளை ஒழுங்கு படுத்துகிறார்.

அருநெறி, பெருநெறி என உலகிடைப் பரந்து கிடந்த எல்லா நெறிகளையும் ஒருநெறிய மனம் வைத்து உணர்ந்து, அவைகள்

எல்லாம் அடங்கி நிற்கும் வகையில் ஒரு பொதுநெறி, திருநெறி, திருநெறிய தமிழ் நெறியை அமைக்கிறார் திருஞான சம்பந்தர். திருஞான சம்பந்தரின் கொள்கையை உடன் பட்ட நிலையிலேயே சன்மார்க்கத்தையும் பொது நெறி, திருநெறி, திருநெறிய தமிழ்நெறி என விளக்குகின்றார் வள்ளலார்.

''இருமையின் ஒருமை
ஒருமையின் பெருமை''

என்பன திருஞான சம்பந்தர் கொள்கையிணைப்புக்கென அமைத்துக் காட்டிய அளவையியல் நெறி. இதே அளவையியல் ஆய்வு முறையையே தாமும் அடிப்படையாகக் கொண்டு பல்வேறு கொள்கைகளை இணைக்கிறார்.

கொள்கைகளை இணைத்து விடுதல் மட்டும் சமரசம் ஆகாது. எல்லாக் கொள்கைகளையும் இணைக்கும் பொதுமை என்பது நடு நிற்பது என விளக்கம் கண்டார். 'நடுநின்ற நடுவே', பொதுநின்ற பொதுவே எனப் பொதுமை என்பது எல்லாத் தனிமைகளையும் இணைத்ததாய், வாழவைப்பதாய், எல்லாத் தனிமைகளையும் தொட்டு வளர்ந்ததாய், எல்லாத் தனிமைகளையும் தன்னுள் அடக்கி உயர்ந்ததாய், எல்லாத் தனிமைகளுக்கும் நடுவில் நிற்பதாய் அமைவதே திரு-பொது-செம்மை என விளக்கம் கண்டது அப்பரடிகள் திருவாக்கில்.

''திருநின்ற செம்மை''

என்ற குறியீட்டு மொழியே பெருநெறி எனத் தம் நெறியை விளக்க நின்ற அளவையியல் நெறி.

இருமை நிலைகளைக் கலக்கச் செய்து ஒருமை அமையும் என்பதற்கு மூலமாகிய 'கலப்பு' என்பது எவ்வாறு அமைய வேண்டும் என்பதைத் திருநாவலூரார் தம் அனுபவ மொழிகளிற் காணுகின்றார்.

பரவை-கடல். தனிமைகள் பலவற்றையும் இணைத்து அடக்கும், அடக்கி மேலெழும் சமரசப் பொதுமை - பரவையார்.

''பொங்கு பல சமயம் எனும் நதிகள் எல்லாம்
புகுந்து கலந்திட நிறைவாய்ப் பொங்கி ஓங்கும்
கங்கு கரை காணாத கடலே''

என்ற வகையில் அமையும் பொதுமை - சமரசப் பொதுமை. அது பரவயையாரை உட்கொண்டது. ஒற்றியூர்ச் சங்கிலியார் நாலாங்குலத்து உதித்தவர். கடந்த நிலையில் வரும் சுத்தம் என்னும் பொதுமை.

பரவையார் பொதுமை மகளிர் எனப் பெறும் பதியிலார் மரபு. சங்கிலியார் தவமரபு. இருவகைப் பொதுமையையும் இணைத்த பெருமை சுந்தரருக்கு உண்டு.

இணைத்து ஒருமைப்படுத்துதல் என்பதற்குச் சுந்தரர் வாழ்வியல், அருளுரைகள் ஆகியவை வள்ளலாரால் கொள்ளப் பெறுகின்றன.

## இருத்தலுக்கு முன்னுரிமை

வள்ளலார் சத்திய ஞான சபையை அமைக்கும்போது அச்சபை அமையும் இடம் திருமண்டபம் எனப் பெற்றது. அதற்கு முன் அமையும் இடம் 'அகவல் மண்டபம்' எனப் பெற்றது. அகவல் மண்டபத்து அனுபவம் முதலில், பின்னர் அமைவது பெருவாழ்வு. அது திருமண்டபத்தில் கருவாதை நீக்கவென்று குரு மொழி அருளிய திருமொழியே 'இரு' என்பது. இரு என்ற மெய்ம்மொழியைத் தன்னுள் கொண்ட காரணத்தால் திருஅண்டப் பகுதி என்னும் அகவலுக்குத் திருஅகவல் என்பது பெயர். திருஅகவல் தனக்கென ஒரு மண்டபம் கட்டிக் கொண்டது. அதுவே அகவல் மண்டபம்.

> ''உரு அண்டப் பெருமறை என்று உலகமெலாம் புகழ்கின்ற
> திரு அண்டப்பகுதி எனும் திரு அகவல் வாய் மலர்ந்த''

குருவே மாணிக்கவாசகர். அருட்பெருஞ்ஜோதி அகவல் படிக்கப் பெறல் வேண்டும்; அதற்குரிய மண்டபம் எனப் பெயர் அமைந்தது என்று கொண்டாலும், வள்ளலார் தமக்கெனக் கொண்ட திரு அகவல்; அதற்குரிய மண்டபம் என்பன திருஅண்டப்பகுதியும் சத்திய ஞான சபையில் திருமண்டபத்துக்கு முன்னுள்ள அகவல் மண்டபமுமே எனக் கொள்க.

தமிழில் தன்மை, முன்னிலை, படர்க்கை என்ற மூவிட வேறுபாடுகள் உண்டு.

தன்மை - பண்பு நிலை, செயற்பாடு இல்லை. முன்னிலை முன் நிற்றல். நிற்றலாகிய செயல்; பண்பு தெரியவில்லை. இவ்விரண்டும்

நேர் நிற்பன. எதிர்நிலைகள். இவ்விரண்டன் இடையில் இருதிணை ஐம்பால் என்றெல்லாம் பிரிந்து சென்று விட்ட நிலைகளாகிய படர்க்கை. முன்னிரண்டு நிலைகளிலும் செல்லுதல் இல்லை. செல்லுதலே பிரிவுகளுக்குக் காரணம். இறத்தல் - கடத்தல் - செல்லுதல் - படர்தல் என்பன ஒரு பொருளன. இறத்தலை இருத்தலாக்குதல் வேண்டும். இறத்தலாயினும், இருத்தலாயினும் தன்மை, முன்னிலை, படர்க்கை என்ற மூன்றையும் உள்ளடக்கியதே. எனவே, ஆன்மா ஜீவன் என்ற இரண்டையும் தன்மை முன்னிலைகளாக்கி, அவற்றுக்கு அப்பால் விரிந்தவைகளைப் படர்க்கையென ஒன்றாக்கி, இம்முன்றையும் இணைக்கும் அமைப்புடைய கொள்கையை நான்காம் நிலையில் நின்றது என்று அமைத்தார். எனவே, சன்மார்க்கம் என்பதற்கு முதல் மூன்று மார்க்கங்களையும் கடந்த நாலாவது நெறி என்றார்.

அடுத்து, ''சத்'' என்ற சொல்லின் அடியில் சன்மார்க்கம் என்பதற்குச் சத்திய நெறி அல்லது இருத்தல் நெறி என்று விளக்கம் காட்டினார். இருத்தல் என்பது நெறியாகவும், சாகாதிருத்தல் என்ற பயனாகவும், பசித்திரு தனித்திரு விழித்திரு என்னும் மூன்றாய் நின்று இணைந்த ஒருமை அனுபவமாகவும் விளங்குவது எனத் தெரியும் வகையில், இருத்தல் என்பதன் அடையாளமாக அமைக்கப் பெற்றதே 'அகவல் மண்டபம்'.

''என்னையும் இருப்பதாக்கினன்''

என்று கூறியது மணிவாசகரது ஆசகன்ற அனுபவம்.

''இரு'' என்ற குருமொழியின் விளக்கமாகவே சாகாக்கல்வி, இறவாமை, மரணமிலாமை முதலிய விளக்கங்களை அமைத்துக் கொள்கிறார்.

## வள்ளலார் மேற்கொண்ட அளவையியல் நெறி

'சன்மார்க்கம்' என்ற அடிப்படைக்கலைச் சொல் ஒன்று. அதனோடு இணைக்கும் சமரசம், சுத்தம் என்பனவாகிய சொற்கள். இத்தகைய சொற்களை வள்ளலார் உண்டாக்கவில்லை. இவைகளையெல்லாம் வடமொழி எனத் தள்ளிவிட்டு, பழகு தமிழில் இக்கொள்கையை அமைத்திருக்கலாமே என்பது சிலரின் அடிப்படை

ஆசை. வள்ளலார் 'தமிழ்' என்ற சொல்லுக்கு அமைத்த விளக்கம், அம்மொழியின் இயல்பாக அவர் எழுதியவை ஆகியவைகளைப் படித்த அறிஞர்கள் இவ்வடமொழிச் சொற்களைத் தவிர்த்திருக்கலாமே என்று எண்ணுவதில் தவறில்லை.

மெய்ப்பொருளியற் கலைச்சொற்கள் மக்களாலோ, ஒரு இனத்தாராலோ உண்டாக்கப் பெற்றவை அல்ல. பரநாதத் தலத்தே விளங்கும் பரநாதம் - பரவிந்து என்ற இரண்டும் இணைய; அவ்விணைப்பின் மூலம் (அனந்த தாத்பர்யங்களை உள்ளடக்கி) பல்வேறு பொருள் நிலைகளை உள்ளடக்கி எழுந்த சொற்களே அவை. ஆதலின், அவைகளை மாற்றுதல் இயலாது என்று குறிப்பிடுகிறார். அவைகள் வடமொழிச் சொற்கள் அல்ல; வடலுறு சொற்கள் என்பது வள்ளலார் வழக்கு.

***நால்வகை இணைப்பு :*** எந்த ஒரு பொருளும் நால்வகை இணைப்புகளுடன் கூடியது. அவை அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்பன. புறப்புறத்துக்கு மேல் நின்றதே பொதுமை. எனவே இடை நின்ற பகுதிகளில் இணையும்போது மற்றவற்றின் தாக்கம் வரும். ஒரு தனிமனிதன் தான் இருந்த இடத்திலேயே இந்த நான்கு நிலையாலும் தாக்கம் பெறுகிறான். எனவே, நான்கு நிலைகளிலும் இணைய நிறுத்தி, அங்கங்கே விளையும்தாக்குதல்களை முறியடிக்கும் வகையில் தயாராதல் வேண்டும் அதை முழுமையாக விளக்குவதே சாகாக்கலை.

***நால்வகை நிலைகள் :*** எந்த ஒரு கருத்தும் கொள்கை என்ற ஒரு அமைப்பினைப் பெறும் போது

மருவி நின்று மேலேறுதல்
மறுத்து நின்று கடத்தல்

என இரு அளவையியல் நெறிகளை மேற்கொள்கிறது என விளக்கினார். மருவி நின்று மேலேறியதைப் பூர்வமாக்கி உத்தரம் என மருவியது என விளக்கினார். மறுத்து நின்று கடந்ததைச் சுத்தமாயிற்று என்றார். இவைகளை விளக்கவே 'பூர்வம், பூர்வ பூர்வம், உத்தரம் உத்தரோத்தரம்' என்று நான்கு பொருள் நிலைகள் உண்டு என்றும், முன்னிற்கும் இரண்டும் மருவி நின்று மேலேற்றும் சமரசம் என்றும், பின்னது இரண்டும் மறுத்து நின்ற கடக்கும் சுத்தம் என்றும் அளவை நெறி அமைத்துக் காட்டினார்.

**பொருள் முடிவு காணல் :** பல்வேறு கருத்துகளை இணைத்துப் பொருள் செய்து, இதுதான் இது என்று முடிவு செய்யும் நிலை நேரும் போது அதற்குரிய அளவுகோல் யாது என்பதைத் தெளிவாக்கி விடுகின்றார்.

உபாய மார்க்கம், உண்மை மார்க்கம் எனப் பொருள் முடிவு செய்தற்கு வழிகள் இரண்டு. பொருளினுடைய புற அமைப்புகளைக் காண உபாய மார்க்கம் துணை செய்யும். உபாயமார்க்கமாவது காட்சி, கருதல், உரை என்ற அளவை முறைகளால் அறிதல். ஆனால், பொருளின் சொருபம் எனப் பெறும் உண்மை நிலையை உண்மை மார்க்கத்தால்தான் அறிய முடியும். உண்மை மார்க்கம் என்பது அனுபவவழி, ஆன்ம ஞானம் எனப்பெறும் அறிவானது கடவுளறிவு என்பதைத் துணையாகப் பெற்று - அனுபவ அறிவு என்பதைத் துணையாகப் பெற்று - உண்மை தெரிதல் வேண்டும். இந்திரிய, கரண, ஜீவ அறிவுகள் துணைநிற்க, ஆன்மஅறிவு அறியின் அது உலகியற் செயல்களுக்கு உதவும். அனுபவ அறிவின் மூலம் பொருளின் உண்மைத் தன்மையை அறிதலே சிறந்தது. சன்மார்க்கத்துக்கு உரியது உபாய மார்க்கமன்று; உண்மை மார்க்கமே.

முதன்மை வாய்ந்த சில அளவையியல் முறைகள் இங்கே அமைக்கப் பெற்றன. பிற அங்கங்கே விளக்கப் பெறும்.

மனுமுறை கண்ட வாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம், சில விண்ணப்பங்கள் என்பவை திருவருட்பாவில் உள்ள செய்திகளை விளக்கும் வகையில் எழுதப் பெற்றவை. அவைகள்

1. மனுமுறை கண்ட வாசகம்
2. ஜீவகாருண்ய ஒழுக்கம் (முழுமை பெறாத உரைநடை என்பது பொதுக்கருத்து)
3. சன்மார்க்க விண்ணப்பங்கள்

மூன்றாம் பகுதியில் சிறு விண்ணப்பம், பெரு விண்ணப்பம், ஞான விண்ணப்பம், சங்க விண்ணப்பம் என்ற நான்கு பிரிவுகள் உள்ளன.

வள்ளலார் தம்மிடம் வந்தவர்களுக்கு வழங்கிய திருநெறிக் கொள்கை விளக்கங்கள், அவ்வப்போது கேட்டவர்களால் குறிக்கப் பெற்ற குறிப்புகளாய், 'உபதேசம்' என்ற ஒரு பகுதியாக அச்சாகி வந்துள்ளது.

## வள்ளலார் எழுதி வெளியிட்டவை

வள்ளலார் அன்பர்களுக்கு எழுதிய திருமுகப் பகுதி. அவைகளும் ஆய்வுக்குரிய மூலச் செய்தியைக் கொண்டுள்ளன.

## வள்ளலார் எழுதிய சில உரை விளக்கங்கள்

திருவருட்பாவை வழங்கினார்கள்; திருமுகம் எழுதினார்கள். அவை வேறு. தம்முடைய கொள்கைக்கு அரண் செய்வதாக அல்லது விளக்கம் அமைவதாக அல்லது தம் கருத்தை வெளிப்படுத்துவதற்கு உரிய சாதனமாகச் சில விளக்கங்கள் எழுதியுள்ளார்கள். இவைகள் பிறரால் கேட்டு எழுதப் பெற்றவைகளல்ல. மேற் போக்காக நோக்கினால் இது ஏன் எழுதப் பெற்றது என்பதே தெரிந்து கொள்ள இயலாது. நுட்பமாகச் சிந்தித்தால்தான் காரணம் தெரியும். அவைகள் கீழே கொடுக்கப் பெற்றுள்ளன.

### 1. பொன் வண்ணத்து அந்தாதியில் ஒருபாட்டின் உரை

சேரமான் பெருமாள் நாயனார் இயற்றிய 'பொன் வண்ணத்து அந்தாதி' என்ற நூலில் 'வேதியன்' எனத் தொடங்கும் 22-ஆம் பாட்டுக்கு மட்டும் விளக்கவுரை எழுதியுள்ளார்கள். இதன் காரணம் உரிய இடத்தில் விளக்கப்பெறும்.

### 2. வேதாந்த தேசிகர் குறட்பா உரை

''மூன்றில் ஒருமூன்று மூவிரண்டு முந்நான்கும்
தோன்றத்தொலையும் துயர்''

இது வேதாந்த தேசிகரின் குறட்பா. இதற்குப் பௌராணிய மதசித்தாந்த அடிப்படையில், அத்துவைதம், விசிட்டாத்துவைதம், சிவாத்துவைதம் என்ற நான்கு கொள்கைகளின் அடிப்படையில் எழுதிய உரை.

இதன் காரணமும் உரிய இடத்தில் விளக்கப் பெறும்.

### 3. 'உலகெலாம்' என்ற மெய்ம் மொழிப் பொருள் விளக்கம்

பரநாதத் தலத்தில விளங்கும் உயர் ஞான மெய்யொலியானது எவ்வாறு கேட்கப் பெறும் (அசரீரி) எனவும், மெய்ம் மொழிப் பொருள்'

என அது விளக்கப் பெறுவது ஏன் எனவும், பரநாதத் தலத்து விளங்கும் மூலவொலிக்கு நம்மனோருடைய மொழியால் விளக்கம் சொல்ல இயலுமா எனவும் அமைந்த செய்திகளை விளக்குவதற்காக எழுதப் பெற்றது.

**4. 'தமிழ்' என்பதன் உரை**

உரிய இடத்தில் இது விளக்கப் பெறும்.

## நூற்பதிப்புகளின் மூலம் எழுதியவை

***1. ஒழிவிலொடுக்கம்.*** இது சீகாழிக் கண்ணுடைய வள்ளல் என்பவரால் எழுதப் பெற்று, திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகளால் உரையும் எழுதப் பெற்ற நூல். இந்நூலாசிரியர் திருஞானசம்பந்த சுவாமிகள் அருள் பெற்றவர்.

இந்நூலில் ''ஒழிவிலொடுக்கப் பாயிர விருத்தி'' என்ற தலைப்பில் ''வள்ளல் குருராயன்'' என்ற பாயிரச் செய்யுளுக்கு மட்டும் விளக்கவுரை எழுதியுள்ளார்கள். பதிப்பித்த ஆண்டு 1851. வள்ளலாருக்கு அப்போது வயது 28.

**2. தொண்ட மண்டல சதகம்.** படிக்காசுப் புலவர் இயற்றியது. நூற்பெயரை விளக்கு முகமாக இவருரை அமைகிறது. இதை எழுதியமைக்கு உட்காரணம் உண்டு. உரிய இடத்தில் அமைக்கப் பெறும்.

**3. சின்மய தீபிகை.** இந்நூல் விருத்தாசலம், வீரசைவ மரபுக் குமாரதேவர் திருமடத்தில் மரபின்வழி வந்த சந்நிதானங்களுள் முத்தைய சுவாமிகளால் இயற்றப் பெற்றது. இதற்குக் குறிப்புரை எழுதியுள்ளார்கள். காரணம் உரிய இடத்தில் அமைக்கப் பெறும். பதிப்பித்த ஆண்டு 1857.

## முன்னுரையின் தொகுப்புரை

கி.பி.1823 முதல் 1874 வரை உள்ள ஐம்பத்தோராண்டுகள் இந்நிலவுலகில் யாவருங்காண வாழ்ந்த வள்ளலார் உத்தர ஞான சிதம்பரம் என்னும் பார்வதிபுரத்தில் வடலூறு பெரு வெளியில் சமரச சுத்த சன்மார்க்கக் கொள்கை விளக்க நிலையங்கள் நான்கை

அமைத்தும் தம்மைச் சிதம்பரம் இராமலிங்கம் என்ற கொள்கைத் தொடரால் புறங்காணச் செய்தும் தொண்டாற்றிய அருளாளர்.

இரண்டு வயதுக் குழந்தையாக இருந்தபோது அமைந்த தில்லைத் தரிசனமும் அதன் பின்னர் நிகழ்ந்த அருள் விளக்கங்களும் தமக்கு மூன்று முறை மெய்ம் மொழிப் பொருளை உணரத் துணை செய்தனவாதலின் 'பிழைபடாத தெய்வமறை' இது என உணர்ந்தார் என்ற செய்திகள் விளக்கப் பெற்றன.

பூர்வம் உத்தரம்; தனிமை பொதுமை என்ற கொள்கை அமைப்புகள் விளக்கம் பெற எழுதப் பெற்ற மூல ஆவணமே 'மனு முறை கண்ட வாசகம்' என்பதும் ஆரூரும் தில்லையும் இணையும் அடிப்படை உண்மையும், பூர்வ சிதம்பர ஞானத்தின் முடிவில் தம் வாழ்வு தொடங்கி உத்தர ஞான சிதம்பரம் நோக்கிய நிலையில் தம் வாழ்வுப்பணி அமைகிறது என்பதன் விளக்கமாகவே சிதம்பரம் இராமலிங்கம் என்ற கையெழுத்து அமைகிறது என்ற இணைப்பும் விளக்கப் பெற்றன.

'திருஅருட்பா' நான்கு திருமுறைகளாக முதன்முதல் அச்சாகி வெளி வந்தது. அதில் அமைந்த சிதம்பர சுவாமிகள் பாயிரம் விளக்கும் நுட்பங்கள் வெளிப்படுத்தப் பெற்றன.

''நன்மை பெருகு அருள் நெறி'' என்ற சேக்கிழார் வாக்கின் பெருமை, அவ்வாக்கு வெளிப்பட்ட காலத்து நிகழ்ந்த அருட் செயல்களின் அடிப்படையில் ''நல்ல அருட்பா முறை'' என்ற பாயிரத் தொடரை அமைக்கும் சிதம்பர சுவாமிகள் 'துங்கமுறுதல்' என்பதை முதற்பயனாகவும், சித்தி வளாகம் என்பது திருவருட் சந்நிதி எனவும் உணரக் கிடந்த செய்திகளின் அடிப்படையில், துங்க முறுதலே இருத்தல் கலை எனவும் சாகாக்கலை எனவும் விளக்கப் பெற்றன எனக் கொள்கை விளக்கம் செய்து கொள்ளல் வேண்டும் என்பது விளக்கப் பெற்றது. 'இரு' என்ற தனி அகவலைக் குரு மொழியாகக் கொண்டு முதற்பயனுக்கு வடிவமைப்புச் செய்து நிலை நிறுத்திய இடமே அகவல் மண்டபம் என்பதும் அதனை அடுத்து வரும் இரண்டாவது பயனே திருமண்டபம் என்பதும் இவற்றின் இணைப்பே 'சத்திய ஞான சபை' எனவும் இணைப்பு விளக்கம் அமைக்கப் பெற்றது.

தமிழின் இடநிலை விளக்கங்களாகிய தன்மை, முன்னிலை, படர்க்கை என்பவைகளை முதல் நிறுத்தி, அவைகளை இணைத்து

நிறுத்திய களமே சன்மார்க்கக் கொள்கை பிறந்த களம் எனக் காட்டி, கொள்கையை நிலைநாட்டுதற்கு வள்ளலார் மேற்கொண்ட அளவையியல் நெறிகள் இவை என விளக்கம் அமைக்கப்பெற்றது.

உலகப் பொருள்கள் நால்வகை இணைப்புகளின் அடிப்படையில் தாக்கம் பெறுகின்றனவாதலின் நால்வகை இணைப்புகளின் அடிப்படையில் நால்வகைக் காட்சியறிவு முதலியன உளவாகின்றன என்பதும் நால்வகை அறிவு விளக்கம் பெறும் இடங்கள் நான்கு என்பதும், நால்வகை நிலைகள் இணைத்துப் பொதுமை காண முற்படும் போது மருவிநின்று மேல்நின்றது சமரசம் எனவும் மறுத்து நின்று கடந்தது சுத்தம் எனவும் இரு நியாயங்களிற் பொதுமை அமைகிறது என்பதால் இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும் என்ற ஞான சம்பந்தர் திருவாக்கே பொதுமை நெறியின் மூலவிளக்கம் என்பதும் காட்டப் பெற்றன.

சன்மார்க்கம் என்ற தன்னுடைய நெறியானது உண்மை விளக்கம் செய்வதற்குக் காட்சி, கருதல், உரை என்பவைகளின் அடிப்படையில் எழும் உபாயமார்க்கத்தைக் கொள்ளாமல் உண்மை ஞானத்தைப் பெறுதற்குரிய மூலமாக, பொருளின் உண்மைத் தன்மையை நுகர்ந்து பெற்றுத் தெளிவு பெறும் முறை எனப் பெறும் அனுபவமார்க்கம், உண்மை நெறி என்பதையே கருவியாகக் கொள்ளும் என்பதை வகுத்துக் காட்டினார் வள்ளலார் என இவ்வாறு அளவையியல், அறிவாராய்ச்சியியல், மெய்ப் பொருள் இயல் ஆகிய மெய்ப் பொருள் விளக்கத் துறை விளக்க மூலங்கள் காட்டப் பெற்றன.

'திருவருட்பா' என்பதேயன்றி, கொள்கை விளக்கம் செய்யும் நோக்கத்தில் வள்ளலார் எழுதி வெளியிட்ட உரைநடைகள் பதிப்புரைகள் சுட்டிக் காட்டப் பெற்றுள்ளன.

நன்மை பெருகு அருள் நெறியில் மலர்வது சன்மார்க்கம் என்பதால் பழைமையையும் அது ஒரு பொதுமை நெறி என அமைப்பதால் விளையும் புதுமையையும் இருவகை மரபுகள் எனக் கொண்டார் வள்ளலார். வழி வழி வந்த திருக் கூட்ட மரபையும் புரட்சி எனப் பூத்த சன்மார்க்க மரபையும் இணைத்து நிறுத்திய வள்ளலார் அருள் நெறியில் நடு நாட்டுப் பொது நாட்டி நடுநின்ற நடுத் தெய்வமாகிறார்.

# 2. இராமலிங்கரின் இருவகை மரபு

## முன்னுரை

சிதம்பரம் இராமலிங்கம் என்றே கையெழுத்திடும் வள்ளலார் அருளிய, 'அருட் பெருஞ்ஜோதி அகவல்' ஆறாந் திருமுறையில் உள்ளது. அதன் இறுதிப் பகுதியே கீழே கொடுக்கப் பெற்றுள்ளது.

''சுத்த சன்மார்க்கச் சுகநிலை பெறுக
உத்தம னாகுக ஓங்குக என்றனை
போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ் ஜோதி
அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி
அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி''

மேலே கூறப்பெற்ற அகவலைத்தனித்தனி வரிகளாகக்கொண்டு பதிப்புச் செய்த முறையையும் இரண்டிரண்டு வரிகளாக இணைத்துக் கண்ணியெனக் கொண்டு பதிப்புச் செய்த முறையையும் நாம் காண முடிகிறது. வரிகளாகக் கொள்ளும் போது 1596 வரிகளாகவும், கண்ணிகளாகக் கொள்ளும்போது 798 கண்ணிகளாகவும் அமைகின்றன.

இனி, வள்ளலார் அருளிய அகவல் பாராயண நூலாக விளங்குகிறது. அதுவே, வள்ளலார் தம் கொள்கையை விளக்கும் 'தத்துவ விளக்க நூலாக' அருளியது என்ற கொள்கையும் உண்டு. அருட்பெருஞ் ஜோதி அகவலுடன், அருட் பெருஞ் ஜோதி அட்டகம், என்ற எட்டு அருட்பாக்களைக் கொண்ட ஒரு பதிகமும் பாராயண நூலாக, அகவலின் முன்னோ பின்னோ அமையப் பெற வேண்டும் என்ற கருத்து மரபு வழியில் கூறப் பெறுகிறது.

அருட் பெருஞ்ஜோதி அகவல், அருட் பெருஞ்ஜோதி அட்டகம் என்ற இரண்டையும் இணைத்துச் சிந்தித்தால் அகவலுக்குப் பாயிரமாக அட்டகத்தைக் கொள்ள இடந்தருகிறது. மேலும், இவ்விரண்டற்கும் மூலமாக வேறொரு உண்மையை வள்ளலார் கொண்டிருக்கிறார் எனவும் எண்ணத் தோன்றுகிறது.

மாணிக்க வாசகர் தம் திருவாசகத்தில் சிவபுராணம் கலிவெண்பா. அடுத்துள மூன்றும் அகவற் பாக்கள். நெடும்பாட்டாக இருத்தலின்

நான்கையும் ஒன்றாகவே அகவல் என்று சொல்லும் வழக்கு அமைந்து விட்டது. அவை சிவபுராணம், கீர்த்தித் திருவகவல், திரு அண்டப்பகுதி, போற்றித் திருவகவல் என்பன.

வள்ளலாரைப் பெரிதும் ஈர்த்தது 'திரு அண்டப் பகுதி' என்ற மூன்றாவது அகவலே. இதனை,

''உரு அண்டப் பெருமறை என்று உலகமெலாம் புரக்கின்ற
**திரு அண்டப் பகுதி** எனும் திரு அகவல் வாய் மலர்ந்த
குரு என்று எப்பெருந்தவரும் கூறுகின்ற கோவே நீ
**இரு என்ற தனி அகவல்** எண்ணம் எனக்கு இயம் புதியே'

என்று வள்ளலார் ஆளுடைய அடிகள் அருள் மாலையில் 4-ஆவது பாவில் கூறுவதால் தெளியலாம். அடுத்து, மாணிக்கவாசகர் நாலாவதாகக் கூறிய போற்றித் திரு அகவலை வள்ளலார் ஒரு வகை வாழ்த்து நிலை அகவல் எனக் கொள்கிறார் எனத் தெரிகிறது. முதல் மூன்று அகவல்களில் கூறிய செய்திகளை எடுத்துக் கூறி வாழ்த்துகின்ற அகவலே போற்றித் திருவகவல் என்றும் வள்ளலார் கருதியிருக்கிறார். முதன் மூன்று அகவல்களாகிய சிவபுராணம், கீர்த்தித் திருவகவல், திருவண்டப்பகுதிச் செய்திகளை வள்ளலார் முறையே அவன் அருள் நிலை, அவன் சீர்நிலை, அவன் ஆற்றலின் ஓங்கிய நிலை எனக் கொண்டு

''போற்றிநின் பேரருள், போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலின் ஓங்கிய அருட் பெருஞ் ஜோதி''

என்று அமைப்பதால் முதன் மூன்று அகவற் பொருள்களையும் அவைகளைப் போற்றியுரைக்கும் போற்றித் திருஅகவல் அமைப்பையும் வள்ளலார் கருதிய கருத்தின் மூலம் அறியலாம்.

திருவாசக அகவல்களில் உள்ள மூன்று நிலைகளை அப்படியே அமைத்துக் கொண்ட வள்ளலார் அருட்பெருஞ்ஜோதி அட்டகத்தில் அவைகளையே ஒரு மாற்றத்தோடு அமைக்கிறார். திருவாசக அகவலிலும், அருட்பெருஞ்ஜோதி அகவலிலும் மூன்றாவதாக நின்ற ஆற்றலின் ஓங்கியநிலையை இரண்டாவதாக - இடை நிலையில் நிற்பதாக அமைக்கிறார். அவ்வகையில் *1.* விளங்கும் நிலை *2.* ஓங்கும் நிலை *3.* அமர்ந்தருள்புரியும் நிலை என அட்டகம் அமைத்துக் காட்டுகின்றது.

1. திருவாசகத்தின் சிவபுராணமும், அருட்பெருஞ்ஜோதி அகவலில் அமைத்த போற்றி நின்பேரருள் என்பதும் ஒன்றே. இதனை அட்டகத்தில் விளங்கும் நிலை என்றார். விளங்குதல் என்பது அவன் தனிப் பெருநிலை.

2. திருவாசகத்தின் கீர்த்தித்திருவகவலும், அருட் பெருஞ் ஜோதி அகவலில் அமைந்த 'போற்றி நின் பெருஞ்சீர்' என்பதும் ஒன்றே. இதுவே, அவன் அமர்ந்து அருள் புரியும் நிலை. இது அவன் செயற்பாட்டு நிலை.

இவ்விரண்டாலும் அவனுடைய தன்னுண்மை நிலையும் அவன் செயற்பாட்டு நிலையும் கூறப்பெற்றன. இவையிரண்டும் அனைவர்க்கும் பொது.

இனி, திருவாசகத்தின் திருவண்டப் பகுதியும் அருட்பெருஞ்ஜோதி அகவலில் அமைந்த ''ஆற்றலின் ஓங்கிய'' என்ற பகுதியும் இணைகின்றன. இந்த ஒரு பகுதியில் மரபு நிலையிலிருந்து தான் வேறுபடுவதை உணர்த்துகின்றார். அவைகளை - முற்பகுதியையும் வள்ளலார் பிரிந்து வேறுபடும் பகுதியையும் - 'போற்றி' எனத் தொடங்கும் வரிகளுக்கு மேல் உள்ள இரண்டு வரிகளில் அமைத்துக் காட்டியிருப்பதை உணர்ந்து தெரிந்து கொள்ளலாம்.

''சுத்த சன்மார்க்கச் சுகநிலை பெறுக
உத்தமன் ஆகுக ஓங்குக என்றனை''

என்பவைகளே அவ்வரிகள். இவ்வரிகளைப் பொருள் விளக்கத்துக்காக

சுத்த சன்மார்க்க நிலை பெறுதல்

ஒரு வகை என்றும்; அது முதல் வகை என்றும்,

சுத்த சன்மார்க்கச் சுக நிலை பெறுதல்,
உத்தமனாகுதல்
ஓங்குதல்

என்பவைகளைக் கொண்ட இரண்டாவது வகையை ஒரு சிறப்பு வகை என்றும் கொள்ளுதல் வேண்டும்.

சன்மார்க்க நிலை என்பது நாலாம் நிலை. இது பின்னர் விளக்கப் பெறும். நான்காம் படிநிலையில் நின்றவர்கள் பலர். பரம்பொருள் தன்னளவில் விளங்கியும், அமர்ந்து அருள் புரிந்தும் துணைநின்ற பொதுவகையில் எனக்கு முன்னே பலர் சன்மார்க்க நிலை பெற்றார்கள். நான் (வள்ளலார்) அதே நிலையில் தான் நின்றேன். சன்மார்க்க நிலை எனப் பெறும் நான்காம் படி நிலை.

நான்காம் படியில் நின்ற வள்ளலார் சுகநிலை, உத்தமனாம் நிலை, ஓங்கிய நிலை ஆகியவைகளைப் பெறுகிறார். அவை அவரைச் சேர்ந்த தனி நிலைகளே. சுத்த சன்மார்க்க நிலை வரை அனைவர்க்கும் (வள்ளலாரையும் உள்ளிட்டது) பொது. சுகநிலை பெறுதல் என்பது நான்காம்படியில் நின்ற மற்றவர்களுக்கும் வள்ளலாருக்கும் மட்டுமே அமைந்த நிலை. அடுத்த இரண்டு நிலைகளாகிய உத்தமனாகுதல், ஓங்குதல் என்பன வள்ளலாரை மட்டுமே உடன்கொண்ட நிலைகள்.

சன்மார்க்கம் என்ற நான்காம் நெறியில் முதன் மூன்று நெறிகள் இணையும் முறை காட்டப் பெற்றது. முதன் மூன்று நெறிகளை இணைத்த பொதுமை நெறி என்ற சன்மார்க்கம் என்பதைப் பெயரளவிலாவது இங்கே வேறுபடுத்திக் கொள்ளுதல் தேவையாகின்றது.

சற்புத்திர மார்க்கம், தாசமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்பதில் சன்மார்க்கம் முதன் மூன்றையும் கடந்த ஒருவகை மார்க்கம். அவ்வகையில் சன்மார்க்கம் நான்காவது மார்க்கம்.

இனி, நாலாவதில் நான்கு படிகள். அவை சற்புத்திர சன்மார்க்கம், தாச சன்மார்க்கம், சக சன்மார்க்கம், சுத்த சன்மார்க்கம். இவ்வாறு, சன்மார்க்கத்தின் முதல் மூன்று படிநிலைகளைக் கடந்து வள்ளலார் நின்ற இடம் சுத்த சன்மார்க்கமாம் நான்காம் படிநிலை. முதல் மூன்று சன்மார்க்கப் படிகளில் நின்று சன்மார்க்கத்தை வளர்த்த பல அருளாளர்கள் உண்டு. வள்ளலார் நாலாம் படியில் நின்றார். நாலாம் படியில் இரண்டு பேறுகள் உண்டு. சுத்த சன்மார்க்கம் என்ற முதல் நிலையை இவ்வுலகில் நிலைநாட்டிய அருளாளர்களின் பணி நிறைவுற்றபின், சுத்த சன்மார்க்கச் சுகநிலை என்ற ஒரு சிறப்புப் பகுதி உண்டாகிறது. இது நான்காம்படியிலேயே உள்ள சிறப்புப் பகுதிதான். நான்காம் படியின் சிறப்புப் பகுதியில் அமைந்த கொள்கையை நிலைநாட்டுபவராக வள்ளலார் அமைகிறார்.

சுகநிலை பெறுதல் என்பதை முதன் மூன்று படிநிலைக் கொள்கைக்கும் உரியதாக ஆக்கி அந்த மூன்று படிநிலைகளையும் விளக்கம் செய்கிறார். அடுத்து உத்தமன் ஆகுதல், ஓங்குதல் என்ற இரு வகைத் தனி நிலைகளையும் விளக்குகிறார்.

எனவே, சன்மார்க்கப் படிகள் நான்கு. பேறுகள் ஆறு. முதன் மூன்று படிகளில் அமைந்த பேறுகள் மூன்று. அவற்றுடன் சுகநிலைபெறுதல், உத்தமன் ஆகுதல், ஓங்குதல் என நின்ற மூன்று பேறுகளையும் இணைத்தால் மொத்தம் ஆறு பேறுகள் சன்மார்க்கப் பேறுகள் ஆகின்றன.

நான்கு சீர்கள், நான்கு படிகள் நான்கு பேறுகள் என்ற வகையில் நாற்சீர் அடிகள் அமைகின்றன. எனவே, அருட் பெருஞ் ஜோதி அகவல் அவ்வகையிலேயே அமைய வேண்டும் என்ற வகையில்

ஒன்றென இரண்டென ஒன்றிரண் டெனவிவை
அன்றென விளங்கிய அருட்பெருஞ் ஜோதி

என்ற நாற்சீர் வரிகளாக அமைத்துப் பதிப்பித்தது ஒருவகை.

பேறுகள் ஆறு என்ற வகையில் ஆறு சீர்கள் அமைய வேண்டும் எனவும் அவைகளை முடிக்கும் சொல்லாக அருட் பெருஞ்ஜோதியை இணைக்க வேண்டும் எனவும் கருதி இரண்டிரண்டு அடிகளாக - ஒரு கண்ணியாக அமைத்துப் பதிப்புச் செய்து அமைத்தது மற்றொரு வகை.

திருநிலைத் தனிவெளி சிவவெளி எனுமோர்
அருள்வெளிப் பதிவளர் அருட்பெருஞ் ஜோதி

என அந்த இரண்டாவது வகை அமைகிறது.

இரண்டு வகையான பதிப்புகளும் உண்மையை உளங் கொண்டவைகளே.

சுத்த சன்மார்க்கம் தொன்மையானது. தொன்மையாம் சுத்த சன்மார்க்கத்தின் படிநிலைகளை நின்று விளக்கியவர்கள் வேறு; சென்று பேறு பெற்றவர்கள் வேறு, நின்று விளக்கியவர்கள் வரிசை நிலையில் வந்தவர் வள்ளலார். அதுவே திருக் கூட்ட மரபு. சுத்த சன்மார்க்கத்தின் சுகநிலையில் - நான்காம் படியின் சிறப்பு நிலையில்

நின்றவர் வள்ளலார்; அதனால் ஐந்தாவது பிள்ளையாகிறார். சுபானு ஆண்டு, புரட்டாசித் திங்கள், 21-ஆம் நாள் (5-10-1823) ஞாயிற்றுக்கிழமை, பூர்வபட்சம், துவிதியை திதி, சித்திரை நட்சத்திரம், நாலாம் பாதம், உதயாதி இருபத்தொன்பதே முக்கால் நாழிகை, மாலை 5.30 மணியளவில் ஐந்தாவது மகவாக அடிகள் பிறந்தருளினார்கள்.

படிகள் நான்கு; பேறுகள் ஆறு. பேறுகள் ஆறும் இரண்டாகும். முதல் மூன்று ஒருவகை; பின் மூன்று ஒருவகை. இவ்வகையில் பேறுகள் இருபகுதியாக - ஆறு என நின்ற நிலையை அருட் பெருஞ் ஜோதி அட்டகத்தின் முதற்பாட்டு விளக்குகின்றது.

சுத்த சன்மார்க்க நிலை பெறுதல் வரையில் திருக் கூட்ட மரபு; சுகநிலை பெறுதல், உத்தமன் ஆகுதல், ஓங்குதல் என்ற மூன்றும் சுத்த சன்மார்க்க மரபு எனவும் என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம் எனவும் சொல்லப்பெறும் புதுமை மரபு. இரண்டையும் இணைத்தவர் வள்ளலார்.

எனவே, சுத்த சன்மார்க்கத் தொன்மை மரபு ஒன்று. அதனுடன் இணைவதாய் என் மார்க்கம் என வள்ளலாரால் குறிக்கப் பெறும் மரபு ஒன்று. இவ்வகையில் இருமரபு எனச் சுட்டி விளக்குகிறார். இரண்டும் தனித்தனியானவை அன்று. நாலாக வளர்ந்த படிநிலைகளில் நின்ற சன்மார்க்கமானது முதல் மூன்று படிநிலைகளில் வளர்ந்த வளர்ச்சியைப் பொதுநிலை வளர்ச்சி எனக் கொள்ளலாம். பொதுநிலையையும் புதிய ஒளியால் விளக்கி, வேறு இரண்டு பேறுகளையும் சன்மார்க்கத்தின் சிறப்பு நிலையாக இணைக்கிறார் வள்ளலார்.

''அருட்பெருஞ்ஜோதி அட்டகத்தை அருட்பெருஞ்ஜோதி அகவலுக்கு மூலமாகவும், அண்டப்பகுதி என்ற மாணிக்கவாசகரின் திருஅகவலை அனைத்திற்கும் மூலமாகவும் அமைத்து இருவகை மரபுகளை இயைத்துக் காணுமாறு நிறுத்தினார் வள்ளலார் எனக் கருதுதல் வேண்டும். இவ்வகையில் வள்ளலார்

'வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபில்
யான் ஒருவன்'

என வழி வழிவந்த திருக்கூட்ட மரபு என்பதையும் பின்னர்,

''என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம்''

என்று தன்னோடு இணைத்து நிறுத்திய ''சன்மார்க்க மரபு'' என்பதையும் இணைத்தநிலையில் இடைநின்று விளங்கும் உத்தமன் ஆகிறார்.

உத்தமனாக நின்ற நிலையே பூர்வ ஞானசிதம்பரத்தைச் சமரசமாக்கி மருவி உத்தரமாக நின்ற உத்தர ஞானசிதம்பரம் என்றாயிற்று. அது சித்திபுரமாக வளர்ந்து சத்திய தருமச் சாலை விளக்கம், சத்திய ஞானசபை விளக்கம், சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் என்ற முக்கிளைத் தொகுதியாக மலர்ந்து, சர்வசித்தி வளாகம் என ஓங்கியது.

எனவே, சிதம்பரம் இராமலிங்கம் என நின்ற வள்ளலார் தொன்மைச் சன்மார்க்க மரபு, வண்மைச் சன்மார்க்க மரபு என்ற இருவகை மரபு முறைகளை இணைத்து நின்ற வகையில், உத்தம சிதம்பர இராமலிங்கம் ஆகிறார். இருவகை மரபுகளை அவர் இணைத்து விளக்கிய அருமையை எடுத்து நிறுத்துவதே இத்தலைப்பு.

## உத்தமன் ஆதல்

மக்களாய்ப் பிறந்தவர் வாழும் வாழ்வு நிலைகளை இனம் பிரித்துக் கண்டு கொள்ளும் வகையில் நால்வகை நிலைகளை அமைப்பர். அதமாதமன், அதமன், உத்தமன், உத்தமோத்தமன் என்பன. இது ஒருவகையிற் பொதுவாய், நின்ற அளவையியல் முறைப்பாகுபாடு. வாமன அவதாரம் திரிவிக்கிரம அவதாரமாக வெளிப்பட்டபோது 'ஓங்கிஉலகளந்த உத்தமன்' என்று பாராட்டுவார் ஆண்டாள் நாச்சியார். வாமனன் என்பான் குள்ளன். அப்படியொரு தனிநிலை இல்லை. வளர்ச்சியை நோக்கும் போது குள்ளன் என உணர்கிறோம். வாமனனின் இடப்பக்கம் வலப்பாகம் என்ற இருமரபினுள் வாமனன் முதல் மரபினன். உத்தம நிலையாகிய வலப்பாகம் ஒடுங்கியிருந்த இடமாகிய இடப்பாகம் எனக் கொள்ள வேண்டும். ஓங்குதல் ஓர் ஒப்பற்ற நிலை. அதில் உள்ளடங்கிய வேறு இருநிலைகள் உண்டு. விரிந்த உலகின் அளவுக்குப் பெரியதாகியும், அளந்தும் நிற்றல். இவ்விரண்டையும் கடந்த நிலையே ஓங்குதல். எனவே உத்தமனாம் நிலையில் சாதாரண நிலைக்கு மேல் வளர்ந்த மூன்று நிலைகள் உண்டு. எனவே மொத்த வளர்ச்சியில் நான்கு

நிலைகள். ஆனால், நான்காவது நிலையே 'உத்தமன்' என்ற நிலை. இவ்வாறு வைணவம் விளக்கம் கொள்கிறது. ''ஓங்கி உலகளந்த உத்தமன்'' என்பது ஆண்டாள் அருள்மொழி.

சென்னை, கந்த கோட்டத்தில் வள்ளலார் ''தெய்வமணிமாலை'' அருளுகிறார். அதன் எட்டாவது பாட்டினில்

> ''ஒருமையுடன் உனது திரு மலரடி நினைக்கின்ற
> உத்தமர்''

என்று குறிப்பிடுகின்றார். இங்கே ''ஒருமையுடன் நினைத்தல்'' என்று குறிப்பிடப் பெறுவதே உத்தமனாதற்கு வழி என்பதும், அவ்வாறு நினைந்தவர்களே ''உத்தமர்'' என்பதும் வள்ளலாரால் தெளிவு செய்யப் பெறுகின்றன.

வள்ளலார் வாழ்வில் ஒற்றியூரில் நடைபெற்ற வரலாறு ஒன்று உண்டு. திருவொற்றியூர்த் தேரடித் தெருவில் ஒரு திண்ணையில் நிர்வாணத் துறவி ஒருவர் தங்கி இருந்தார். அவ்வழியே போவார் வருவார்களை நாய் போகிறது, கழுதை போகிறது என்று சொல்லிக் கொண்டே இருப்பார். வள்ளலார் ஒற்றியூர்த் திருக்கோயிலுக்குப் போகும்போது தேர்த்தெரு வழியாகப் போவதில்லை. ஒருநாள் இயல்புக்கு மாறாக, தேர்த் தெரு வழியாகச் சென்றார். அப்போது, வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருந்த நிர்வாணத் துறவி ''இதோ ஓர் உத்தமன் போகின்றான்'' என்று சொல்லியதோடல்லாமல், தம் நிர்வாண நிலையை உணர்த்தாதவாறு, தம் கைகளால் அப்பகுதியை மறைத்துக் கொண்டார். பின்னர் வள்ளலார் அவருடன் சென்று உரையாடிக் கொண்டிருந்தார். அன்றிரவே, அவர் அவ்விடம் விட்டுச் சென்று விட்டார். எனவே, நிர்வாணத் துறவி ஒருவரால் 'உத்தமன்' என்று சுட்டப் பெற்ற வரலாற்றுப் பெருமையுடையவர் வள்ளலார். இவ்வரலாற்றின் அடிப்படையில் வள்ளலாரும் ஒருமையுடன் முருகன் திருவடியை நினைந்த தன்மையால் உத்தமனாகும் வரலாற்றுப் பெருமையுடையவர் எனக் கொள்ள வேண்டும்.

வள்ளலார் தம் வாழ்வின் பெரும்பகுதியைச் சென்னையில் தான் கழித்தார். சென்னை வாழ்க்கை என்றாலே திருவொற்றியூர் வாழ்க்கை தான் எனக் கொள்ளவேண்டும். திருவொற்றியூரில், மூலட்டானத்தை ஒட்டிய திருச்சுற்றில் உள்ள திருமுருகன் திருமுன் நின்று ஒருமையுடன் நினைத்தலே வள்ளலார் செயல்.

நினைவின் தொடக்கம் கந்தகோட்டம், நின்றது ஒற்றியில், கண்ணாடியிற் கண்டது தணிகை முருகனை.

கந்த கோட்டத்து முருகனை வள்ளலார் நினைக்கும் முறையானது கந்தகோட்டத்துள் வளர் கந்தவேளாக, தண்முகத் துய்யமணியாக, உண்முகச் சைவமணியாக, சண்முகத் தெய்வமணியாக அமைகிறது. சண்முகம் என்பது தெய்வமணி. அதுவே தண்முகம் கொண்ட தூய்மைமணி. அதுவே, உண்முகம் கொண்ட சைவமணியும் தண்முகமும் சண்முகமும்.

எனவே, கந்தவேள் என நினைவது ஒன்று. அதனையே மும்மணியென நினைவது பிறிதொரு முறை. தண்முகம், சண்முகம், சைவமுகம் என மூன்றாய் மலர்ந்தது ஒருபரம் பொருளே. மந்திர எழுத்துகளை எழுதுவதன் மூலம் வள்ளலார் பரம்பொருள் அனுபவம் பெறுவார். அவ்வாறு காணப் பெறும் மந்திர எழுத்து, ''ஓம்சிவ சண்முக சிவஓம் ஓம்சிவாய'' என அமைப்பது அவர் மரபு.

அடுத்து, விநாயகர், முருகன், சிவன், உமை, திருமால் ஆகியவர்களையெல்லாம் தனித்தனியே பதிகங்கள் மூலம் பாராட்டியிருப்பினும், ஒருவகைப் பொதுமை நிலையில் அனைவரையும் இணைக்க வேண்டும் எனக் கருதியிருக்கிறார். அவ்வகையில் 'ஓம்' என்ற ஒலியை ஒரே அக்கரமாகக் கொள்வதும், சி, வ என்பவைகளுக்கேற்ப அ, உ எனப் பிரிப்பதும் ஆகிய இரண்டு முறைகள் அவரிடம் காணப் பெறுகின்றன.

1. பேசா எழுத்தாகிய 'ஓம்' ஒரு முடிநிலைப் பொருள்.
2. அதுவே, பேசும் அக்கரமாக, அ, உ, ம எனப் பிரிந்த அக்கரமாக அமைகிறது. இந்நிலையில் 'அ' என்ற தனி எழுத்தும், அகரத்துடன் இணைந்த மகரம் என்ற எழுத்தும் முறையே சுத்தமாயை அசுத்தமாயை எனப் பிரிந்து நிற்க, அதன் இடையில் நிற்பது உகரம் என்ற அருள் நிலை எனக் கொண்டு அப்பனும் அம்மையும் என நிறுத்தி இடை விளங்கும் விநாயகப் பெருமானைப் பேசும் ஓரக்கரம் என்ற பிரணவப் பொருளாக்கி நிறுத்துகிறார்.
3. பேசா எழுத்துப் பிரணவம் ஒன்று, பேசும் எழுத்துப் பிரணவம் ஒன்று என நின்ற இருபகுதிகள் முன்னே காட்டப் பெற்றன.

பேசா எழுத்துப் பிரணவம் அகர, உகர, மகர, நாதம், விந்து என ஐந்தாக விரிந்தது. அவை 'சிவயநம' என்ற ஐந்தெழுத்து ஆயின. இங்கே நிலை மூன்று என்றாலும் ஒரெழுத்தின் விரிவே. இந்த ஐந்து எழுத்தின் விளக்கமாகவே சதாசிவம் அமைகிறது.

ஈசானம், தற்புருடம், வாமம், அகோரம், சத்யோஜாதம் என ஐந்து முகங்களாக விரிகின்றன. ஐந்து என நின்ற எல்லாமே ஐந்து ஐந்தாகப் பிரிவுறும். இவ்வகையில் 36 தத்துவங்கள் தோற்றம் ஒடுக்கம் அமைந்துவிடும்.

ஐம்முகச் சிவன் எனச் சிவம் நிற்கும்; ஐந்து சக்திகளாகச் சத்தி நிற்கும். பின்னர்ச் சிவம், சக்தி என நின்று; அவையும் இணையவே 'சிவம்' தனிநிலை பெறும். இவ்வகையில் 36 தத்துவங்களும் அடங்கிவிடும்.

ஆயினும், பேசும் எழுத்து என்ற 'ஓம்' என்பதன் விரிவே எல்லாம். பேசும் எழுத்தானது செயல்படுதற்குப் பேசா எழுத்தாகிய ஓம் இணையவேண்டும். அது அதோமுகம் என நின்று ஐந்தையும் இணைக்கும்.

அதோமுகம் (ஓம் பேசா எழுத்து) வெளிப்பட்டு நிற்க, அதன் பேசும் பகுதி எனப் பெறும் ''ஓம்'' - பேசும் பிரணவம் ஒன்றே ஐம்முகங் கொண்ட சிவம் என விரிகிறது. இவ்வகையில் முழுமைப் பரம் பொருள் ஒன்றும் ஐந்தும் என விரிவு பெறுகிறது. இவ்வகையில் 'ஆறுமுகம்' அமைகிறது.

இதனை ஒருமுகம் மேல் அமைய, ஐந்துமுகம் அதன்கீழ் அமைய அதன்கீழே பன்னிரு கைகள் அமைய, அடியில் இரண்டு திருவடிகள் அமைய நிறுத்தி வழிபடுதல் ஒருமுறை.

வேறு ஒருமுறை. ஆறுமுகங்களையும் வரிசையில் நிறுத்தி, அவ்வாறே பன்னிரண்டு கைகளை நிறுத்தி, இரண்டு திருவடிகள் என அமைத்தல். எவ்வளவு விரிவுகளையும் முடியாக நின்ற பேசா எழுத்து ஆகிய ஓம் என்பதும், கீழே திருவடியாக நின்ற பேசும் எழுத்தின் பிரிவு - 'ஓம்' - ஆகிய அ, உ என்ற இரண்டும் இணைய நினைத்துப் பார்த்தல். இதுவே அடிமுடி இணைப்பு. இடையில் நின்ற பிரிவுகள் எல்லாம் திருவடியையும் முடியையும் இணைத்த நிலையில் அமைந்த வேறுபாடுகளே.

முருகனின் விரிவை ஆறாக நின்ற எல்லா விரிவுகளுக்கும் இடமானவன் என்று கொள்ளுதல் வேண்டும். உண்முகம் என்பதே அதோமுகம் எனப் பெறும். இதனையே 'நீலகண்ட முகம்' என்பர். இதுவே, உலக நன்மைக்கென ஆலகால நஞ்சினை உண்டு தன்னுள் அடக்கிய அருள் திருமுகம். நீலகண்ட முகம் செய்த செயல்கள் இரண்டே என்றும் ஒன்று நஞ்சுண்டது, மற்றது சூரபதுமனை அழித்தது என்றும் திருமூலர் 'அதோமுக தரிசனம்' என்ற பகுதியிற் கூறுகிறார்.

ஆறுமுகக் கடவுளை நேர்நிறுத்தி அவர்தம் திருவடி முதலாகத் திருமுடி இறுதியாக ஒருமையுடன் நினைக்கின்றார். ஆறுமுகம் ஆன பொருள் என்றே கூறுவார் அருணகிரியார். எல்லாவற்றையும் இணைத்த ஒரு முழுமை எனக் கொள்ளுதற்குரிய 'சமரசக் கடவுள்' என்று முருகனைக் கொள்ளலாம். இதுவும் ஒருவகைப் பொதுமையே. பொருள் ஒன்றாயினும் வேறுபாடுகளும் தெரியவே செய்கின்றன.

ஆறாகியும் அவைகளை இணைத்துச் சமரசம் செய்து நின்ற ஒன்று என அப்பெருமானை நிறுத்தி ஐந்து வகை விளக்கங்களைக் காண்கிறார்.

1. சண்முகம் என்பது ஆறுபட்டை வடிவாய் உருட்சியாயமைந்து ஒளி வீசும் ஒருமணி. அது நம் புருவமத்தியில் உள்ளது. முகமணி.

2. மனித உடம்பில் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்கள் உண்டு. இவற்றுள் விசுத்தி என்ற நாலாவது ஆதாரமாகிய இருதயத்தானத்தில் இடது பக்கத்தே ஆறு பிரிவுடைய நாடி ஒன்று உண்டு. அதனையும் சுப்ரமணியம் என்பர்.

3. மனித உடம்பில் உள்ள ஆறறிவும் ஒருங்கே இணைந்தபோது அமையும் சுத்த விவேகமே ஷண்முகம்.

4. ஆறு ஆதாரங்களில் உள்ள ஆறு ஒளியும் ஷண்முகம்.

இங்கே கூறப் பெற்ற நான்கு விளக்கங்களும் பெரியோர்களால் அமைக்கப் பெற்ற விளக்கங்களே. இவைகளை வள்ளலார் ஏற்றுக் கொள்கிறாரா என்று கேட்பதைவிட அவர் இவைகளைப் பொய் என மறுக்கவில்லை, என்று கொள்ளலாம்.

5. எல்லாத் தத்துவங்களினது அந்தத்தில் உண்மணிக்கு அப்பால் சாந்த நிறைவாக உள்ள ஆறுதல் - சுத்த ஆன்ம அறிவு எனப் பெறும் உள்ளமே சுப்பிரமணியம். இதனையே அறுமுகப் பொருளின் விளக்கம் என்று கொள்கிறார்.

ஆறுமுகப் பெருமானை எப்படி ஒருமையிற் காணவேண்டும் என அமைக்கிறார்.

சகல கேவலம் - நினைப்பு மறப்பு - இரவு பகல் என்பவற்றிற்கு இடையில் அமையும் விவேகம் எனவும்;

| | |
|---|---|
| பாதம் முதல் நாபி வரையில் உஷ்ணஉருவாயும், | நால்வகை உருவம் |
| நாபி முதல் கண்டம் வரையில் ஆதாரநாடி உருவாயும் | |
| கண்டம் முதல் புருவமத்தி வரை மணி உருவாயும் | |
| உச்சியில் ஒளி உருவாயும் | |

என்ற நான்காய் அமைந்த உருவம் எனவும்;

புத்தியில் சுத்த அறிவாகவும் அனுபவத்தில் நித்தியமாகவும், எங்கும் நிறைவாகவும் கோணத்தில் ஆறாகவும்; எக்காலங்களிலும் மதங்களில் ஆறாகியும், சமயங்களில் ஆறாகியும்; சாதியில் ஆறின் கூட்டமாயும் விளங்கும் **உண்மைக் கடவுள்** எனவும், மேலும்

| | |
|---|---|
| இருதய.ஆகாச அறுகோண வடிவம் - | யந்திரம் |
| அங்க வேறுபாடு | 43 கோணம் |
| உப அங்கம் | 9 நிலைகள் |

உண்மை ....................................ச

விஷயநீக்கம் ................................ர

நித்ய திருப்தி ..............................அ

நிர் விஷயம் ................................ண

பாபநீக்க ஏது ................................ப

ஆன்ம இயற்கைக் குணம் ............வ

எனவும் அமைக்கிறார். இவைகளை இரண்டாக்கி ஒருமை காணலாம். முத்தியும் சித்தியும் எனப் பிரித்தல்.

மேலே கூறிய மந்திர உண்மைகளை வேறு ஒருவகையில் இணைக்க வேண்டும்.

விஷயநீக்கம் என்பது முத்தி, நிர்விஷயம் சித்தி - ச

பாபநீக்க ஏதுவால்

பாசநீக்கம் முத்தி நித்யதிருப்தி சித்தி, - வ

மேலே கூறிய வகையில் ச, வ என நிற்கும். இவை இயற்கை உண்மையும் இயற்கை விளக்கமும் ஆகும். இங்கே குறிப்பிடப் பெறும் சகரம் திருவைந்தெழுத்தில் 'சி' என நிற்கும். பொருள் ஒன்றே. இவையனைத்தையும் பிரணவத்தில் இணைக்கும் போது, சி, வ இரண்டும் உகரம் என்ற ஒன்றிலேயே இணையும். அகரம் தனிநிற்கும்.

இனி, சி, வ இணைந்த உகரமும்; அகரமும் இணைந்த ஓம் என்பது பேசும்எழுத்தாகிய ஓம். இதனை

| | | |
|---|---|---|
| இருமையின் இணைப்பாம் | உகரம் | ஓம். இது |
| அதன் மேல் | அகரம் | அபரம். |

உபயநிலை என்பது இரண்டு நிலையும் உண்டு எனக் கொள்வது. ஆதலின் இவற்றின் இணைப்பு எனப்பெறும் 'ஓம்' அபரம் ஆயிற்று. பின்னர், அபர ஓம்; ஓம் என்ற பேசா எழுத்து என்ற இரண்டையும் மறுக்கச் சுத்த ஓம் வரும். அது 'ஓம்' என்ற ஓரக்கரம்; பேசா எழுத்து. இவ்வமைப்பே அந்தணர்க்குரியது என்றார். இத்தகைய ஒரெழுத்து அனுபவமே மனுமுறைகண்ட வாசகத்துள் அமைந்த உத்தரபாகத்து நீதிக்குரியவர்களின் அனுபவ நிலைக்குஎன அமைந்த மந்திரம். இதனைச்

''சிகரமும் வகரமும் சேர்தனி உகரமும்

அகரமும் ஆகிய அருட்பெருஞ் ஜோதி

உபரச வேதியின் உபயமும் பரமும்

அபரமும் ஆகிய அருட்பெருஞ் ஜோதி

மந்தணம் இதுஎன மறுவிலா மதியால்

அந்தணர் வழுத்தும் அருட்பெருஞ் ஜோதி''

என்ற பகுதியை உணர்வதன் மூலம் அறியலாம். இது ஒருவகை அனுபவம்.

இரண்டாவதாக, நாதமந்திரம், புனிதமந்திரம், வாய்மைமந்திரம், முறைமொழியும் மந்திரம், ஓங்கு மந்திரம் என ஐந்தாக அமைத்துச் சிந்திக்கலாம் எனவும் கூறுகிறார்.

மேலே கூறிய ஐந்தையும் முறையே ஞானசக்தி, யோகசத்தி, கிரியா சத்தி, பொருட்சத்தி, அருட்சத்தி என ஐந்தாக நிறுத்தி அவற்றின் இணைப்பாக இருப்பது இவ்வுலகம் என்று கருதி, உலகம் என்பது ஐஞ்சத்திகளின்மயம் எனக்கண்டு, அக்காட்சிக்குரிய சிந்தனையாக ''ஓம் சிவாயநம'' என்பதைச் சிந்திக்க வேண்டும். இதைக் குறிப்பிட்டவுடன் ''இவ்வகையில் யோகம் செய்ய வேண்டாம், அதில் அழுந்தினால் மீளமுடியாது என்றும்; உலகைப் பஞ்ச சத்திகளின் கூட்டமாகக் கருதும் போது ''சதாசிவ அனுபவம்'' வந்துவிடும். ஆகையால் சதாசிவக் கலப்பாகக் கிடந்தாலும் மீளுதல் அருமை; மூடம் உண்டாகும்; உண்மை'' என்றும் அமைத்துள்ள உபதேசப் பகுதியை நோக்குக.

தியானத்திற்கு இது தேவையே யொழிய, அதனுள் அமிழ்ந்து சமாதி அடைதல் கூடாது. ''சமாதிப் பழக்கம் பழக்கமல்ல, சகஜப் பழக்கமே பழக்கம்'' என்ற உபதேசப் பகுதியை நோக்குக.

இனி, அறுமுகவனை லட்சியார்த்த அனுபவமாகக் கொள்ளும் போது வேல் என்ற சத்திநிலை அனுபவமாகும் என்றார். அதுவே முடி நிலை அனுபவம் என்றார். அது இயற்கை உண்மை என்ற 'சத்' என நிற்கும். சத் என நிற்றல் என்பது இயற்கைக் குணமும் அதன் இருப்பும் என நிற்றல். சிகரமும் வகரமும் சேர்ந்த 'உ' கரம் போல. எனவே 'சத்' என்ற சொல்லின் பொருள் ''அருள் என நின்ற இயற்கை உண்மை நிலை'' என்றும் விளக்கினார். இயற்கை உண்மை என்பதே அருள்; இயற்கை விளக்கம் என்பதே உண்மை ஞானம். இங்கே ஒரு வேறுபாட்டினைக் காண வேண்டும்.

தன்தருமம், தருமி என இரண்டு சொற்கள் - அன்பு முதலிய பண்புகள் தத்தம் தனிநிலையில் இருத்தல் என்ற பொருட்டன்மை அமையும் போது பொருளுக்கும் பண்புக்கும் என்ன உறவு என்றால் தன்தருமம் அதன் தருமம் என்பதே. அருளாய் உள்ளது, அன்பாய் உள்ளது என்றாற்போல. அதன்பின்னர் - அருள் என்ற பண்பே ஒரு பொருளென நின்றபோது அதற்கு அறிவு முதலியன பண்புகளாக அமையும். அப்போது அறிவு என்ற பண்பினை உடையது என்ற வகையில் பொருள் தருமியாகவும் பொருளின் பண்பு தருமமாகவும்

அமையும். இப்பகுதியானது சத்திய தருமச்சாலை விளக்கத்தில் விரிவாக விளக்கப் பெறும்.

முருகனுடைய வேலானது அருள் என நின்று அறிவு என்ற விளக்கத்தைக் கொடுக்கும் என ஒருமை கண்டார்.

இத்தகைய ஒருமை நிலையில் திருக்கூட்ட மரபும் சன்மார்க்க மரபும் எவ்வாறு காட்டப் பெறுகின்றன என்பதைக் காணவேண்டும்.

பரம்பொருளைக் குறிப்பிடும் ஒரு தொடர் சத், சித், ஆனந்தம் என்பது. 'சத்' என்றால் உள்ளது அல்லது சத்தியம் என்ற பொருளைக் கொண்டது. சித் என்றால் ஞானம்; ஆனந்தம் - இன்பம். எனவே, பரம்பொருள் ஞானமாய், இன்பமாய் உள்ள பொருள். ஞானமாய் இருப்பது என்பதால் ஞானத்தால் அதை அடைய முடியும்; அடைந்தவர்களுக்கு அது ஆனந்தமாய் அனுபவமாகும். அருள் என்பது அப்பரம்பொருளின் சத்தியாகும் என்பது திருக்கூட்ட மரபின் விளக்கம்.

பரம்பொருள் அருள் என நிற்பது. எனவே சத் என்றால் அருளாய் நிற்றல் என்பது பொருள். சித் என்றால் அறிவாய் விளங்குவது. அருளின் நிறைவும் அறிவின் நிறைவும் இணைய நிற்பதே ஆனந்தம் என்பது சன்மார்க்க மரபு.

நிறை ஞானமாய் நிற்றல் பரம்பொருள் என்பதால் உயிரும் ஞானமே. பரம்பொருள் நிறைஞானம்; உயிர் சிறுஞானம், குறைந்த ஞானமாக நின்ற உயிர் ஞானத்தால் பரம்பொருளை அடைந்து நிறை ஞானமாக நிற்றல் வேண்டும். உயிர் ஞானத்தின் ஏகதேசம், சிறிய ஞானம் பெரியஞானத்தை அடைந்து முழுமையாதல் என்பது திருக்கூட்ட மரபு விளக்கம்.

அருள்பெரியது; கருணை சிறியது. அருளாய் நிற்பது பரம்பொருள். கருணையாய் நிற்பது உயிர், அருளின் ஏகதேசமே கருணை. சிறியதாற் பெரியதை அடைதல் என்ற முறைப்படி, சீவகருணையானது முழுமைபெற்று அருள் என நிற்பதே உயிரும் பரம்பொருளும் இணையும் முறை எனக் கூறுவது சன்மார்க்க மரபு.

வள்ளலார் நந்தியாசிரமத்தில் தமக்குச் சிதம்பர முனிவர் முதலில் அமைத்துக் கொடுத்த மந்திரம் 'நமசிவய' என்ற தூலபஞ்சாக்கரம்.

திருவொற்றியூரில் 'சிவசண்முக' என்ற பகுதி அதிகமாக அனுபவப் படுகின்றது. முருகனின் எழுத்தாயின் ஆறு எழுத்து என அடக்குவது இயல்பு. வள்ளலார் ஒன்பது நிலைகளை அடக்கி, மந்தணமாக்கி, அனுபவப்படுத்துகின்றார். ''ஓம் சிவ சண்முக சிவ ஓம்'' என்பது ஒற்றுநீங்கிய ஒன்பதெழுத்து உரு. இதனுள் ''சிவ, சண்முக, சிவ'' என மூன்றாகக் கொண்டால் மூன்று பெயர். அடுத்து 'சிவ' என்பதற்கு இருவகை விளக்கம் அமைப்பது அவர் கொள்கை.

சிகரமும் வகரமும் சேர்தனி உகரமும்
அகரமும் ஆகிய அருட்பெருஞ் ஜோதி
உபரச வேதியின் உபயமும் பரமும்
அபரமும் ஆகிய அருட்பெருஞ் ஜோதி
மந்தணம் இதுஎன மறுவிலா மதியால்
அந்தணர் வழுத்தும் அருட்பெருஞ் ஜோதி''

என்றும் முதலிற் கூறிப் பின்னர், மந்திர வகைகளாகவே

''வான்பெறற்கு அரிய வகையெலாம் விரைந்து
நான்பெற அளித்த **நாதமந் திரமே**
கற்பம் பலபல கழியினும் அழியாப்
பொற்புற அளித்த **புனித மந்திரமே**
அகரமும் உகரமும் அழியாச் சிகரமும்
வகரமும் ஆகிய **வாய்மைமந் திரமே**
ஐந்தென எட்டென ஆறென நான்கென
முந்துறு மறைமுறை **மொழியு மந்திரமே**
வேதமும் ஆகம விரிவுகள் அனைத்தும்
ஓதநின் றுலவாது **ஓங்கு மந்திரமே''**

என்றும் அருட்பெருஞ்ஜோதி அகவலில் (87-89; 656-660) அமைத்துக் காட்டுகின்றார்.

வள்ளலார் பொதுவாக மந்திர எழுத்துகளையும் இடையிடையே ஊர்ப் பெயர்களையும் அமைத்துச் சிந்திக்கத் தொடங்குவார். அச்சிந்தனை வழியிலேயே சென்று திருவருளனுபவம் பெறுவது வழக்கமாதலின், மந்திர எழுத்துகளை எழுதிய அந்நிலையை வள்ளலார் 'சந்நிதி' என்று குறிப்பிடும் கொள்கையுடையவர். மந்திர எழுத்துகளே திருச்சந்நிதியாக அமையும். திருச்சந்நிதிமுன் எழுதப்

பெற்ற எழுத்துகள் அனுபவப் பொருளாக அமையும். மந்திர எழுத்துகளை முன்னும் பின்னும் மாற்றியமைத்து, அவ்வழியிற் சென்று அடையும் அனுபவப்பபயனை நுட்பமாக அளந்து வரையறை செய்யும் வழக்கம் உடையவர். இந்நிலையில் 'அம்பலமே' இறுதிநிலை என்றும், அருள் என்னும் பிரசாதம் அவனால்தான் கொடுக்க இயலும் என்றும், அது ஒன்றுதான் உயர் மருந்தாய் அனைத்துப் பயனையும் தரும் என்றும் இவ்வகையான மூன்று கொள்கைகளையும் இங்கே வரையறை செய்து கொள்ளுகிறார்.

திருஞானசம்பந்தர் தம்மை ''ஒருநெறியமனம் வைத்து உணர் ஞானசம்பந்தன்'' எனத் தோடுடைய செவியன் என்ற முதற் பதிகத்துத் திருக்கடைக் காப்பில் குறிப்பிட்டது போலவே வள்ளலாரும் 'ஒருமையுடன் உனது திருமலரடி நினைக்கின்ற உத்தமர்' என்று குறிப்பிடுகின்றார்.

தண்மை முகம், உண்முகம் ஆகிய இரண்டற்கும் நடுவே சண்முகம் அமைத்தார். ''ஓம் சிவ சண்முக சிவ ஓம்'' என மந்திரம் அமைத்தார். இவைகளுக்குப்பின்னே ''ஓம் சிவாய'' என அமைத்தார்.

முதலில் நிறுத்திய 'ஓம் சிவ' என்பதில் 'ஓம்' பேசா எழுத்து; ஓரக்கரம்; அதுவே 'சிவ' என்ற ஈரக்கரம் என நின்றது. இதனைத் தண்முகத் துய்யமணி என்றார்.

இறுதியில் நிறுத்திய 'சிவ ஓம்' என்பதில் அகரம், உகரம், இவையிரண்டும் இணைந்த சிகரம், வகரம், 'ஓம்' என்ற ஐந்து நிலைகள் அமைகின்றன. இங்கே உண்முகச் சைவமணி என்றார்.

இடையில் நின்ற 'சண்முக' என்பது எழுத்து நிலையால் மூன்று, குறிக்கும் பொருளால் ஆறுமுகம்; ஆயினும் ஆறும் இணைந்த ஒருமை; அதுவே 'தெய்வம்' என நின்றது. தெய்வம் என்பது உயிர்கள் மேற் கருணை கொண்டு வந்து உயிர்களைக் காத்தநிலை.

இவ்வாறு விளக்கம் அமைத்த காலையில் எண்கள் ஒன்று முதல் ஒன்பது வரையில் அமைக்க இயலும் எனக் கொண்டு, ஒன்பது வகையான அருள் விளக்கம் காண்கின்றார் வள்ளலார்.

ஒன்பது வகையான அனுபவ நிலைகள் வாய்த்தன என்றும், அவ்வனுபவங்களின் அடிப்படையில் ஒருவகை முழுமையுணர்வு

பெற்றேன் என்றும், அவ்வுணர்வை 'ஒற்றியூர் நியமம்' எனக் கொள்ளலாம் என்றும் கூறுகிறார்.

## ஒற்றியூரும் பொதுமையும்

மனுமுறை கண்ட வாசகம் எழுதப்பெற்றதன் காரணம் முன்பே விளக்கப் பெற்றது. அறமுறைகளைக் கையாளும் வகையில் பூர்வம் உத்தரம் என்பவைகளை விளக்கிய வள்ளலார் ஒற்றியூரில் பொதுமையை அறியும் அனுபவம் பெறுகிறார்.

திருவாரூரைப் போலவே திருஒற்றியூரும் பெருமைகள் பல கொண்டு விளங்குவது. நந்திஓடை, நந்திஆசிரமம் முதலியன உள்ளன என்பது ஒருவகை. ஒற்றியூரில் தியாகேசர் உண்டு. தியாகேசர் இருக்கும் தலங்களுக்கு அமையும் சிறப்புப் பெயராகிய விடங்கத்தலம் என்ற பெயர் ஒற்றியூருக்கு இல்லை.

திருவொற்றியூரில் முற்காலத்தே கோயில் இருந்ததாகத் தெரியவில்லை. ஆனாலும் ஒற்றியூர் ஒரு தலம். 'படம் பக்க நாதன்' என்ற பெயர் இறைவனுக்குண்டு. படம் என்பது வாசுகி என்னும் பாம்பு. அது இறைவனை நோக்கித் தன்னை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கேட்கவே, அவ்வாசுகியை ஏற்றுக் கொண்ட இலிங்கம், வாசுகியின் படத்துடன் விளங்கிக் கொண்டிருக்கிறது என்பதே விளக்கம்.

திருவொற்றியூர்ப் பெருமானுக்கு 'எழுத்தறியும் பெருமான்' என்ற பெயரும் உண்டு. அரசன் ஒருவன் தன் ஆட்சிக்குட்பட்ட கோயில்களின் நாட்செலவுக்குரிய பொருள் அளவைக் குறைக்க எண்ணி, அவ்வளவை நியமனம் செய்து ஆவணம் அமைத்தான். அடுத்த நாள் காலையில் அந்த ஆவணத்தில் 'ஒற்றியூர் நீங்கலாக' என்று வரியின் நடுவே பிளந்து எழுதப் பெற்றிருந்த காரணத்தால் எழுத்தறியும் பெருமான் என்ற பெயர் வந்தது.

மேலும் ஒரு விளக்கம். இவ்வூர் இறைவனுக்கு ஒரு நாளில் சைவர், வைணவர், ஆதிசைவர், மலையாளத்து நம்பூதிரியார், ஸ்மார்த்தர், உவச்சர் என அறுவர் பூசை செய்யும் வழக்கம் இருந்ததாகவும், பின்னர், சைவர் வீரபத்திரரையும், வைணவர் திருமாலையும், நம்பூதிரியர் அம்மனையும், ஸ்மார்த்தர் சுற்றுக்

கோவில் மூர்த்தங்களையம், உவச்சர் வட்டப் பாறை அம்மனையும் பூசிக்கும் மரபு இருந்ததாகவும் கூறுவர்.

மேலே கூறப் பெற்றவைகளை இணைத்துப் பார்த்தால் இங்கே ஒரு பொதுமை இருக்கிறது என்பதை உணரலாம். இத்தகையபொதுமைகளையெல்லாம் வள்ளலார் எடுத்து மொழியவில்லை. ஆனால், இங்கே பொதுமை அனுபவத்தைத் தாம் பெற்றதாக அமைத்துக் காட்டுகின்றார். முதலில் அவர் ஒன்பது உருவில் விளங்குபவன் ஒற்றிப் பெருமான் எனக் கூறுவதைக் காணலாம்.

''துன்ப வாழ்வினைச் சுகம் என மனமே
சூழ்ந்து மாயையுள் ஆழ்ந்து நிற்கின்றாய்
வன்பதாகிய நீயும் என்னுடனே
வருதியோ அன்றி நிற்றியோ அறியேன்
**ஒன்பதாகிய உருவுடைப் பெருமான்**
**ஒருவன் வாழ்கின்ற ஒற்றியூர்க்கு இன்றே**
இன்ப வாழ்வுறச் செல்கின்றேன் உனக்கும்
இயம்பினேன் பழி இல்லை என்மீதே''

என்பது 'நெஞ்சறிவுறூஉ' என்ற பதிகத்தின் இரண்டாம் அருட்பா.

வள்ளலார் ஒற்றியூரில் அருளிய அருட்பாக்கள் அல்லது சென்னையில் அருளியவை எல்லாமே பெரும்பாலும் ஒற்றியூரில்தான் அமைந்தன. அவர் தணிகையைப் பற்றிப் பாடிய போதும் தணிகை சென்றதாகத் தெரியவில்லை. ஒற்றியூரில் அம்பலக் கூத்தன், சிவன், முருகன், விநாயகர், வடிவுடை மாணிக்கம்மை என இவ்வாறு தனித்தனித் தெய்வங்களை நோக்கி அமைக்கப் பெற்றன போக, பொதுப் பதிகங்கள் பலவும் அமைந்துள்ளன. வாழ்க்கையின் இறுதியில் உள்ள பதினாறு ஆண்டுகளைத் தவிர ஏனைய ஆண்டுகளைச் சென்னையில் கழித்த வள்ளலார் அந்நாட்களைப் பெரிதும் திருஒற்றியூரிலேயே கழித்திருக்கிறார். இவ்வகையில் திருஒற்றியூர்க் கோயிலை ''ஒற்றியூர் நியமம்'' எனக் குறிப்பிடுவதாகக் கொள்ளும் தொடர் உண்மையில் ஒருவகைக் கொள்கை விளக்கத் தொடராகவே அமைகிறது எனக் கொள்ளவேண்டும்.

**ஒற்றியூர் நியமம்**

உடம்புடன் இணைந்து இவ்வுலகில் வாழ்கிற எந்த ஓர் உயிரும் ஒற்றியூர் என்பதே. ஒன்று எனத் தோற்றும் உயிர் உடம்பு என்ற இரண்டையும் இணைத்து நிறுத்தி, அந்த இரண்டையும் ஒற்றி, ஊர்ந்து மேல் சென்று தங்கியிருப்பவன் என்பதே ஒற்றியூரான் என்பதன் பொருள். எடுத்துக் காட்டாகப் படம்பக்கநாதன் என்பதைக் கொள்ளலாம்.

வாசுகி என்னும் பாம்பு ஒரு புற்றில் இருந்தது. வாசுகி இலிங்கத்தோடு இணைந்தது என்றால் அது ஏனைத் தலங்களில் உள்ளது போலப் பலராலும் வழிபட்டு வந்த தல இலிங்கம் அன்று. வாசுகி என்ற பாம்பின் உள் இருந்த பரம் பொருளே வெளிப்பட்டுப் பெருகி, வாசுகியைத் தன்னுள் இணைத்துக் கொண்டது. எனவே, வாசுகி என்ற பாம்பின் உள் தங்கியிருந்த பரம்பொருளே தான் அவ்வாறு செய்தது எனக் கொள்ளவேண்டும்.

திருவொற்றியூருக்கு ஆதிபுரி என்ற பெயரும் உண்டு. ஊழிக் காலத்திலும் அழியாத ஊர் என்பது விளக்கம். இங்கே உயிர்களிற் கலந்திருக்கும் இறைவன் என்ற கருத்தே 'ஆதிபுரி' என்பதன் விளக்கம். உயிர்களை இடமாகக் கொண்டு பரம்பொருள் தங்கியது; உயிரல் பொருள்களையும் இடமாகக் கொண்டு பரம்பொருள் தங்கியது; உயிரல் பொருள்களையும் இடமாகக் கொண்டு தங்கியது அப்பரம் பொருள். இவ்வுண்மையை வேறு ஒரு வரலாற்றாலும் அறியலாம். வந்திக்குக் கூலியாளாக வந்தவன் பிரம்பால் அடிபட்டான். அவ்வடி அனைத்துயிர்கள் மேலும் பட்டது என்ற வரலாறு எதனை உணர்த்தியது ? எல்லா உயிர்களிலும் கலந்துள்ளவனே இப்போது அடிபட்டவன் என்பதே. அவ்வாறே எல்லாப் பொருள்களையும் உயிர்களையும் ஒற்றி - இணைந்துநின்று தனக்கெனத் தனியே ஊர் இல்லாமல் ஒற்றிய அந்த இடத்தையே ஊராகக் கொண்டு வாழ்கிறான் என்பதே. எல்லா உயிர்களும் இறைவன் உறையும் இடங்களே என்னும் உண்மையை உணர்த்த அமைந்த தலமே ஒற்றியூர்.

அப்படியானால் கோயில் ஏது ? தனிக் கோயில் உண்டா ? எனில் இல்லை. வழிபாட்டுப் பொது இடம் ஒன்று அமைந்திருக்க வேண்டும். அங்கே யார் சென்று நிற்கிறார்களோ அவர்கள் உள்ளே இருக்கும் பரம்பொருள் வெளிப்பட்டுச் செயற்பட வேண்டும் என்பதே அந்த இடத்தில் அமையும் தத்துவம்.

எழுத்தறியும் பெருமான் எனப் பெற்றதும் இக்காரணத்தாலேயே. அந்த அந்த உயிரின் உள்ளே இருந்து, அவ்வவற்றின் வரலாற்றை உண்மையாக அறிந்த பிரான் என்ற வகையில் அமைந்த பெயரே எழுத்தறியும் பெருமான் என்பது. ஆனால், தலத்தை அடிப்படையாகக் கொண்டு எந்த ஒரு மூர்த்தியும் இருந்திருக்க இயலாது. அவ்வாறே, ஒற்றியூரில் அவ்வூர்ப் பெருமானுக்கெனத் தனியாகச் சொத்து, பொருள் வருவாய் இல்லை. ஏனெனில், பொதுமையில் நின்ற தெய்வம், கோயில் என ஏதும் இல்லை. ஒற்றியூர்ப் பெருமான் அந்தந்த உயிரை ஒற்றித் தங்கியிருக்கிறான். அதனால் அங்கே வரிவிதிக்கவோ விலக்கவோ, செலவுக்குப் பொருள் கொடுக்கவோ தேவையில்லை.

படம் - திரை : பக்கம் - அயல், எனவே திரையின் பக்கத்தே இருப்பவன் என்பது பொருள். யார் ஒருவர் வருகிறாரோ அவரிடத்திலேயே மறைந்து தங்கியிருக்கும் பரம்பொருள் தான் இங்கேயும் வெளிப்பட்டு எதையும் செய்யும் எனக் கொள்ள வேண்டும். அதனாலேயே திருவொற்றியூரில் 27 நட்சத்திரங்கள் எனப் பெறும் விண்மீன்களுக்கு இலிங்க வடிவம் அமைக்கப்பெற்றுள்ளன. நவக்கிரகச் சுற்று இல்லை.

திருவொற்றியூரில் வட்டப்பாறை என்றொரு இடம் உண்டு. இந்த இடமே முன்னர்த் தெய்வம் வெளிப்படும் இடமாக இருந்திருக்கலாம். எல்லாத் தெய்வங்களும் - சென்று நிற்பவர் எந்த எந்தத் தெய்வத்தை விரும்பினாரோ அந்தத் தெய்வமெல்லாம் வருதற்குரியது ஆதலின் வட்டப் பாறை என்பது பெயராக அமைந்திருக்கலாம். சிலப்பதிகாரத்தில் எல்லாத் தெய்வங்களும் வந்து வளைவாக நின்ற இடம் சக்கரவாளக் கோட்டம் என்ற பெயரைப் பெற்றாற் போல. இதனை,

''வெள்ளத்தைச் சடையில் வைத்த
வேதகீதன் தன்பாதம்
மெள்ளத் தான் அடைய வேண்டில்
மெய்தரு ஞானத் தீயால்
**கள்ளத்தைக் கழிய** நின்றார்
**காயத்துக் கலந்து நின்று**
**உள்ளத்துள் ஒளியு மாகும்**
ஒற்றியூ ருடைய கோவே''

என்ற அப்பரடிகள் திருநேரிசையை நோக்கி உணர்க. அப்பரடிகள் பதிகம் முழுதும் இக்கருத்தை வலியுறுத்துவதேயாயினும் ''மண்ணல்லை'' என்று தொடங்கும் திருத்தாண்டகம் செவ்விதின் உரைப்பதாகும்.

இனி, மயிலையில் அப்பர்சாமிக் கோயில் என்பதொன்றுண்டு. அப்பரடிகள் திருவொற்றியூர் சென்றாராக, அங்கே திருக்கோயில் இல்லாமல் வெறும் தருக்கள் முதலியனவே உள்ளன. அன்றிக் கோயிலைக் காணாதவரானார். அருகிருந்தோரைக் கோயில் எங்கே என்று கேட்கலாம் எனில் யாரும் இல்லை. அப்போது அப்பரடிகளைப் போலவே உருவமுடைய ஒருவர் வந்து என்ன வேண்டும் என்று கேட்க, திருவொற்றியூர்த் திருக்கோயில் எங்கே என்று கேட்க, வருக என அழைத்துச் சென்று மறைந்து விட்டார் எனவும் அவ்வாறு வந்தவரின் கோயிலே அப்பர்சாமிக் கோயில் என வழங்குகிறது என்றும் கூறும் செவிவழி உண்டு. ஒற்றியூர் அம்மன் கோயில் போன்றவை பின்னே அமைக்கப் பெற்றிருக்கலாம் என்பர்.

### பொதுமை எது ?

ஒற்றியூர் நிகழ்ச்சியை உளங்கொளும் வள்ளலார் 'அம்பலமே பொது' என இறைவன் அளித்த பொருள் மொழியையும், அதே சமயத்தில் ஒற்றியூர் விளக்கும் பொதுமையையும் இணைத்துக் காணுகின்ற சிந்தனையில் பொதுமை என்பது ஒற்றியூர்ப் பொதுமையா அம்பலப் பொதுமையா என்ற ஐயம் மேலிடுகின்றது என்ற வகையில் என்னை ஆள்வது ஒற்றியிலா தில்லையிலா என்று வினவும் வினாவை மேற்கொண்டார் எனக் கொள்ளுதல் வேண்டும்.

### மரபினில் யான் ஒருவன்

சிதம்பரம் - இராமலிங்கம் எனத் தம் பெயரை அமைத்துக் கொள்வதன் மூலம் தம் கொள்கையை விளக்கிய தன்மையைப் போலவே தம் கொள்கையை விளக்கும் போக்கில் வள்ளலார் இருவகை மரபுகளை இயைத்துக் காட்டுகின்றார்.

''வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட
மரபினில் யான் ஒருவன்''

என்றும்,

''என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம்''

என்றும், வள்ளலார் அமைத்துக் காட்டும் தொடர்களின் மூலம் மரபு வழியில் வந்த பெருமையுடையவர் வள்ளலார் என்பதும் புதுமை நெறியைத் தம்முடைய மரபு எனப் போற்றும் வகையில் வெளிப்படுத்தியவர் என்பதும் இவ்வகையில் பழமையும் புதுமையும் இணைந்த ஒருமை நெறி வள்ளலாரால் அமைக்கப் பெற்றது என்பதும் உணரலாம்.

## திருக்கூட்ட மரபு

வள்ளலார் எடுத்தியம்பும் மரபானது 'திருக்கூட்ட மரபு' எனப் பெறுகிறது. 'திருக்கூட்ட மரபு' என்பது மட்டுமன்று; தம் குடிப்பெருமை கூடப் பேசுகின்றார்.

''வயந்தரும் இந்திரர் பிரமர் நாரணர் காரணர்கள்
மற்றையர்கள் மற்றையர்கள் மற்றையர்கள் எவர்க்கும்
பயந்தகுடி அல்லடி நான் திருச்சிற்றம் பலத்தே
பதிநடஞ் செய் அடிப்பணிக்கே பதித்தகுடி அறியே''

என இவ்வாறு பயந்தகுடி அல்லடி நான் பதியின் அடிப்பணிக்கே பதித்தகுடி என்றும்,

''நடுங்குடி அல்லடி நான் நடஞ் செய் அடிப்பணிக்கே நாட்டிய நற்குடி'' என்றும்,

''அடங்குகுடி அல்லடி நான் ஆடல் அடிப்பணிக்கென்றே அமைத்தகுடி'' என்றும் பேசுகின்ற குடிப்பெருமையையும் நாம் காணுதல் வேண்டும்.

இனி, வள்ளலார் தம்முடைய மரபினைத் தாம் திட்டமிட்டு எழுதத் தொடங்கி, ஆனால் இரண்டே பிரிவுகள் மட்டும் எழுதி நிறுத்தப் பெற்று விட்டதாகிய 'குடும்ப கோஷம்' என்னும் பகுதியில் 'சஞ்சலன்' என்ற பாத்திரமாக நிற்கிறார். திருவொற்றியூரில் நந்தியோடைக்குப் பக்கத்தே உள்ளது நந்தியாசிரமம். அங்கே ஞானமும் இன்பமும் இணைந்த உருவம் எனத்தக்க தேசிகர் - சிவகுரு

எனத்தக்க தேசிகர் இருந்தார். சஞ்சலன் தன்னுடைய 16-ஆவது வயதில் கல்வி கற்கப் புகும் நிலைமை. மூன்று வேளை ஒற்றியப்பனை வணங்குதல், திருப்பணி செய்தல், பிச்சையெடுத்து உண்ணுதல், படிப்பு ஒரு நாழிகை மட்டுமே. அங்கே இருந்த சிதம்பர முனிவர்தான் - சிவகுரு எனப்பெற்ற தேசிகர் அல்லர் - வெண்ணீறு தந்து, தூலபஞ்சாக்கரம் உபதேசம் செய்கிறார். சஞ்சலன் பாத்திரத்தில் கூறப்பெறும் இச்செய்திகள் வள்ளலாரையே நமக்கு அவர்தம் குடிப்பெருமையுடன் தெரிவிக்கும் செய்திகளே. இவைகள் அவர் திருக்கூட்ட மரபில் வருந்தகுதியுடையர் எனக் கொள்ளுதற்குச் சான்று ஆவனவே. ஆயினும், சமரச சுத்த சன்மார்க்க நெறியினை வள்ளலார் தம்முடைய வாழ்வுடன் இணைத்து, அந்நெறியுடன் அவர்க்கு உண்டாம் உரிமையை அளவிட்டுரைக்க முற்படும் போது ''திருக்கூட்ட மரபில் யான் ஒருவன்'' என்று கூறிய அவர்தம் அறிமுக உரையை மேலும் நன்கு சிந்தித்தல் வேண்டும்.

வள்ளலார் தாம் வகுத்த கொள்கைக்குரிய மூலநூலாகத் திருமூலர் திருமந்திரத்தை அடிக்கடிக் குறிப்பிடும் வழக்க முடையவர். திருமூலர் நந்தி மரபினர். அவ்வாறே தாமும் நந்திமரபினர் எனப் புகன்றார். சிதம்பரனார் என்ற குருவின் உபதேசம் காரணமாகச் சிதம்பரம் என அமைத்துக் கொண்டார் எனவும் கொள்ளத் தகும் என்பது முன்னுரையிற் காட்டப்பெற்றது. நந்திமரபையும், சிதம்பரத்தையும், தம்பணியையும், தாம் முப்போதும் வணங்க வேண்டிய திருவுருவ இயல்பையும், உணவும் அதற்குரிய தொழிலும் உற்ற முறையையும் திருஒற்றியூரில்தான் அமைய வேண்டும் என்று குறிப்பிடுகின்றார்.

'பிரியேன்' என்ற தலைப்பில் வள்ளலார் ஒருபதிகம் அருளியுள்ளார். இது பின்னர் ஆறாந்திருமுறையில் இணைத்து வெளியிடப் பெறுகிறது. இப்பதிகத்து நாலாந் திருஅருட்பாவில்

> ''வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபில்
> யான் ஒருவன்''

என்ற மரபுப் பேச்சினைத் தொடங்கும் வள்ளலார் குறிப்பிடும் திருக்கூட்டம் எது ?

சேக்கிழார் அருளிய தொண்டர்மாக்கதையில் பேசப் பெறும் திருக்கூட்டமானது 'புனிதர் பேரவை' எனப் பெறும். திருவாரூர்ப்

பூங்கோயில் - தேவாசிரிய மண்டபத்தில் இருப்பது. இப்பேரவையானது மேன்மைகொள் சைவநீதியை வகுக்கவும் செயற்படுத்தவும் வல்லதாயிருந்தது. திருஞானசம்பந்தர் இத்திருக்கூட்டத்தைச் சார்ந்தவரே. நம்பியாரூரர் இக்கூட்டத்தினரிடம் சரணடைகிறார். தனியாக அன்று; தம்மைத் தம்பிரான் தோழன் என நிறுத்திய ஆரூர்ப் புற்றிடங்கொண்ட பெருமானையும் உடனழைத்துக் கொண்டு வந்து நிறுத்தி, இருவருமாகச் சரணடைகிறார்கள். ஆனால், நம்பியாரூரர் தம்முடன் வந்த தோழனார் தம்மை அறிமுகப்படுத்திக்கொள்ளும்போது ''தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்'' என்று அறிமுக உரையையும் அடிமையுரையையும் இணைத்துக்கூறுகிறார். தேவாசிரிய மண்டபத்துப் புனிதர் பேரவையின் உறுப்பினர்கள் தில்லைவாழ் அந்தணர்தம் அடியவர்கள் என்ற இணைப்பை எடுத்துக் காட்டுகிறது நம்பியாரூரரின் தோழர் அளித்த ஆவண உரை. நந்திமரபு என்று தம்மை அமைத்துக் கொள்ளும் திருமூலரும் திருவாரூரையும் தில்லையையும் இணைத்த புனிதர் பேரவை உறுப்பினர் என்றே நம்பியாரூரர் அமைக்கிறார்.

'கமலாலயம்' என்ற திருக்குளத் தீர்த்தம் திருவாரூரின் அடித்தளம். நந்தியோடையும் அதைத் தழுவிய நந்தியாசிரமமும் ஒற்றியூரின் அடித்தளம். இங்கே தலைமை பூண்டவர் திருவொற்றிப் பூங்கோயில் தலைவர் அல்லர். ஆயினும், அந்த சற்குருவின் மரபு நெறி பேணுபவராக அமைபவர் சிதம்பர முனிவர். இவர் தில்லையுடன் தொடர்புடையவரே.

நந்தி ஆசிரமத்திலும் அடியவர்கள் பலர் உண்டு. அவர்தம் பணி ஒற்றியூர்க் கோயில் சென்று ஒரு நாளைக்கு மூன்று முறை திருப்பணியும் வழிபாடும் செய்ய வேண்டும். உணவு பிச்சை யெடுத்து உண்பது. ஆசிரமத்தில் படிப்பு ஒருநாளைக்கு ஒருவேளை; அதுவும் ஒரு நாழிகை அளவே.

ஒற்றியூரில் நந்தியாசிரம மரபைப் பேணினாலும் சிதம்பர முனிவர் மூலம் தில்லையுடன் இணைகிறார். தில்லையில் வெளிப்பட்ட பரநாத வயிந்துவப் பெருவொலி எனப் பெறும் மூல ஒலியின் மூலம் வெளிப்பட்ட பெரியபுராணத்தின் மூலமாகவே இராமலிங்கரும் மக்களுக்கு அறிமுகப்படுத்தப் பெறுகிறார். பெரிய புராணமே வள்ளலாரை முதன்முதலில் உலகுக்குக் காட்டிய முதல் நூல். திருஞான சம்பந்தர் புராணமே அவர் திருவாய்மலர்ந்த முதன்மை வரலாறு.

சேக்கிழாரைப் போலவே தில்லையிலிருந்துதான் திருக்கூட்ட மரபு விளக்கம் அமையவேண்டும் என்ற குறிப்பினராய் வந்தாலும், தமக்கெனத் தனியிடம் அமைத்து, அதற்கு 'உத்தர ஞானசிதம்பரம்' என்ற புதுப்பெயர் அமைக்கிறார். திருவாரூர்ப் புனிதர் பேரவையானது தில்லையையே முடிவிடமாகக் கொள்கிறது. ஆனால், சிதம்பரத்தை மூலமாகக் கொண்டு, திருஞானசம்பந்தரைக் கொள்கை வழியில் முதற்குருவாகப்பெற்று, உத்தர ஞானசிதம்பரத்தை முடிவிடமாகக் கொண்டதோடு மட்டும் அமையாமல் தமக்கெனத் தனிமையில் ஒரு திருக்கூட்டம், சங்கம் ஒன்றையும் அமைக்கிறார். புனிதர் பேரவைக்கு ஒரு கொடி உண்டு. அது அப்பேரவைத் தலைவரின் ஊர்தியும் கொடியும். நந்திக் கொள்கைதான் புனிதர் பேரவைக்கு அடிமுடி என நின்றது.

ஒற்றியூர் நந்தியாசிரமம் தமக்கென ஒருபேரவை அமைப்பினை உருவாக்கிக் கொள்ளவில்லை. ஆயினும், விதிமுறைகள் இருந்தன. ஒரேயொரு விதிதான் மிகக் கடுமையாகப் பின்பற்றப் பெற்று வந்துள்ளது. அது என்ன ? மூன்று வேளை ஒற்றியூர் இறைவனுக்கு வழிபாடும் திருப்பணியும் செய்ய வேண்டும். பசி வந்த போது ஒரு வேளை பிச்சையெடுத்து உண்ணுதல் வேண்டும். உண்ணுமுன் அவ்வுணவை, நீலகண்டப் பெருமானே! நீ தந்த அமுது என இறைவன் திருவடிக்கு இணைத்து, இறைத்தொடர்பு உண்டு என்ற நிலையில் அந்த அமுதைப் பிரசாதமாக உண்ணவேண்டும். இவ்வாறு ஒரேயொருமுறை செய்யாமைக்காக, உடல் அணு அணுவாக நொறுங்கும் அளவுக்குத் தண்டணை கொடுக்கப்பெற்றிருக்கின்றார். அவ்வாறே உணவில்லாது பசித்துத் தூங்கிய போது, பசித்தனையோ என எழுப்பி, கேட்டு, உணவும் கொடுக்கப் பெற்றுள்ளது.

ஒற்றியூர் நந்தியாசிரம நெறிகள் அகஅனுபவ நிகழ்வுகள். புனிதர் பேரவையின் கொடி அடியையும் முடியையும் இணைக்கிறது. அறமே புனிதர் பேரவையின் விதி; அதுவே மேன்மை கொள் சைவநீதி.

நந்தியாசிரம வழியில் வரும் கொடி அகத்தையும் புறத்தையும் இணைப்பது. திருவாரூர்ப் புற்றிடங் கொண்டான் எவனோ அவனே தில்லைப்பதியில் ஆகாயத்தை இடம் கொண்டவனாக அமைகிறான். மண்முதல் ஆகாயம் வரை உள்ள இடத்தில் அமையும் உயிர்கள் எல்லாவற்றுக்கும் பதியென அமைந்து, அடிமுடி இணைத்த அம்பலத்தான் ஆகிறான்.

ஒற்றியூர்ப் புற்றுத்தான் இங்கே இடம். அதன் பக்கத்தே வாசுகியும் வாசுகியை இடமாகக் கொண்ட இலிங்கமும். புற்றுக்கும் வாசுகிக்கும் என்ன உறவு ? புற்று ஒருவகை வாழ்விடம். அதை இடமாகக் கொண்டு வாழும் வாசுகி என்னும் பாம்புக்கு, பாம்பு உடல் என்ற ஒரு வாழ்விடமும் உண்டு. அந்த உடம்போடு இணைந்தமையால்தான் அவ்வுயிரானது பாம்பு இனத்தைச் சார்ந்ததாகவும், வாசுகி என்ற பெயரினதாகவும் கருதப் பெறும். எனவே, உயிர் உடல் என்ற இணைப்பு, உடல் நின்று வாழும் புற்றிடம் என்ற இரண்டாவது இணைப்பு, இந்த இரண்டையும் இணைக்கும் வகையில் இறைவன் ஒற்றியூர்க் கோவாகவும் இருந்தான், ஒற்றியூர் உடைய கோவாகவும் இருந்தான். ஒற்றி என்பதே இரண்டையும் இணைக்கும் பொதுமைப் பெயராயிற்று.

புற்றுடன் பாம்பு இணைந்து வாழவேண்டும். அதைவிட மிகத் தேவை பாம்பு என்ற உடலுடன் இணைந்த உயிர். இந்த இரண்டும் இணைந்து வாழ வேண்டும். வாசுகி என்ற உயிர் உடலுடன் இணைந்தும் புற்றுடன் இணைந்தும் வாழவேண்டுமானால் எத்தகைய நெறிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். வாசுகி என்ற உயிரானது உடலுக்கேற்ப இணைந்து வாழ்வதோ அல்லது அந்த உயிரானது தன்னையும் தன் உடலையும் புற்றின் நிலைமைக் கேற்ப இணைத்து வாழ்வதோ செய்யுமானால் வாழ இயலாது. எனவே, வாசுகி என்ற உயிரானது தன்னுள் இருக்கும் இன்னொரு இணைப்பை உணர்தல் வேண்டும். அப்பொருளோடு இந்த வாசுகி உயிர் தொன்மைக் காலந் தொட்டே அமைந்த ஓர் இணைப்பைப் பெற்றிருக்கிறது. அந்தத் தொன்மையாம் இணைப்புடன் இருக்கும் பொருளே முதன்மையாக நம்முடன் இணைந்த பொருள். அந்த இணைப்பை நினைக்க வேண்டும். அது தன்னுடன் வந்து இணைந்தது என்ற நன்றியுடன் அதை நினைக்க வேண்டும். தாமே வந்து நம்முடன் இணைந்த அப்பொருள் நமக்காக உடல் ஒன்றை இணைத்தது, பின்னர், புற்றை இணைத்தது. இவ்விணைப்பினையெல்லாம் இணைய நினைத்து, நம் உணவு இத்தகைய இணைப்பினால் வந்த விளைவு. இதற்கு உடையவன் முதன்முதல் வந்து நம்மோடு இணைந்தவன். அவனை நினைந்து அவன் தந்த பிரசாதமாக - அருள் வழக்கமாக எதையும் துய்க்க வேண்டும். நன்றி மறவாமை ஒன்றே அறம். சேரிடம் அறிந்து சேர்தல் என்பது போல, உடலைச் சார்தலோ, உடல் வாழும் புற இடத்தைச் சேர்தலோ அன்றி மூலப் பொருளுடன் இணைதலே, சேர் இடம் அறிந்து சேர்தல் என்ற செயல் முறையாகும். இதனை அப்பரடிகள்

''செம்மையில் நிற்பராகில் சிவகதி விளையும்''

என்றார். செம்பொருள் காணுதல் என்பார் திருவள்ளுவர்.

பரம்பொருளும் உயிரும் இணைந்த இணைப்பு அக இணைப்பு; உயிரும் உடலும் இணைந்த இணைப்பு அகப்புற இணைப்பு; உடலும் உலகமும் இணைந்த இணைப்பானது புற இணைப்பு எனப்பெறும். அதற்கும் மேல் அமைந்தது புறப்புற இணைப்பு. அதனையும் கடந்த இணையில் இணைப்பும் உண்டு. இனி, கலப்பினால் மூவகை உயர்வு அமைந்துள்ளது. இவைகளை விளங்கிக் கொள்ளும் முறை.

ஓரடி அகலம், ஐந்தடி நீளம், மூன்றடி உயரம் அமைந்தது புற்று என்பது கணக்கு. ''ஒன்பது ஆய உருவுடைப் பெம்மான்'' என்பது குறியீடு. இதனை விளக்குவது கொடி. அக அனுபவம் புறத்தே கொடியாக அமைக்கப் பெறுகிறது. மூன்று இணைப்பைக் கொண்ட துணி. இணைப்பைத் தெரிவிக்காத இணைப்பு. கணுவற்ற கலப்பு. கீழுள்ள இரண்டு பகுதிகள் தூய வெள்ளை. மூன்றாம் பகுதி மேல் பகுதி. அது மஞ்சள். இரண்டை இடமாகக் கொண்டு எழுந்த மூன்றாவதாகிய மேல்நிலையானது மங்கலமானது. இதனைச் சுத்தந் தோய்ந்த அத்துவித ஆனந்தப் பெருவாழ்வு நிலை என்பது வழக்கு.

ஒற்றியூருக்கு வந்துவிட்டால் அனுபவம் அனைத்தும் அவன் -பரம்பொருள்- அளித்தவையே. மாற்றி நினைந்து, அனுபவம் தன் முயற்சியால் விளைந்ததெனின் ஒறுத்தல் கிடைக்குமேயன்றி, உண்மை கிடைக்காது. பசியுடன் தூங்குவோர் இருப்பின் எழுப்பி உணவளிக்கப் பெறும். மேலும், இங்கே புற்றுக்கும் வாழ்வு உண்டு. வாசுகியின் முயற்சியால் விளைந்த பயன் புற்றுக்கும் உண்டு. புற்றுத்தான் திருவருள் விளக்கம் நிகழும் இடமாக அமைகிறது. வாசுகி என்ற பாம்பின் உடல் இலிங்கமாகிறது. அருள் ஒளியானது உயிரை விளக்கமடையச் செய்கிறது; உயிர் வாழும் உடம்பை விளக்கமடையச் செய்கிறது. இதுவரை அக இணைப்பே. இவற்றிற்கெல்லாம் முற்றிலும் புறமாக இருக்கும் புற்றும் அருள் ஒளி வழங்குகின்றது. திருவருட் சந்நிதிமுன் ''தண்ணீர் விளக்கும் எரிந்தது'' என்றார்.

இதுவே ***''ஒற்றியூர் நியமம்''***. இதனை நெறிப்படுத்த முனையும் வள்ளலார் திருவாரூர் மரபு என்றும் தில்லையில் முடியும் மரபென்றும்

சொல்லப் பெறும் புனிதர் பேரவை உறுப்பினரே. புனிதர் பேரவைக்கு உரிய மூத்த உறுப்பினருள் ஒருவர் திருஞானசம்பந்தர். அவரே குரு. தில்லையில் சேக்கிழாருக்குக் கிடைத்த மெய்ம்மொழிப் பொருளே இவருக்கும். இவ்வாறாக, மரபுப் பெருமை திகழவரும் சிதம்பரம் இராமலிங்கம், ஒற்றியூர் நியமத்து உறுப்பினராகிறார். பிறந்த இடத்திலிருந்து எடுத்துப் பிறிதோர் இடத்தே நடப்பெறும் வாழையைப் போல.

## வாழையடி வாழையென

வள்ளலார் தம்மை இணைத்துக் கொள்ளும் மரபு திருக்கூட்ட மரபு. அந்தத் திருக்கூட்டத்தின் தன்மையை விளக்குகிறார் ஓர் உவமையின் மூலம். அவ்வுவமையே **''வாழையடி வாழையென''** என்பது.

வாழையடி வாழை என்ற உவமையால் திருக்கூட்ட மரபானது பலவகை விதிமுறைகளுக்குள் கட்டுப்பட்டு இயங்கி வரும் மரபு என்று கொள்ள வேண்டியுள்ளது.

வாழையின் செயல் இரண்டு. குலையீனுவதும், தன்னுடைய அடியில் உள்ள கிழங்கிலிருந்து தன் இனக் கன்றினைத் தோற்றுவிப்பதும். இத்தகைய இருசெயல்களையும் மாற்றமின்றிச் செய்து வருவதே வாழையின் செயல்.

வாழையானது தாய் என நின்று செய்த இரண்டு செயல்களையும் அதன் அடிவாழையும் செய்கிறது. அடிவாழையானது தாய்வாழையாக வளரும் அளவுக்குக் கால இடைவெளி உண்டு. இவ்வுவமையின் மூலம் ஒரு தெளிவைப் பெற வேண்டும்.

இனம் ஒன்று; விளைவித்துக் கொடுக்கும் பயன் ஒன்று. எனினும், கால இடைவெளி உண்டு. திருவாரூர் மரபில் - புனிதர் பேரவையில் ஒரே காலத்தில் பலர் அமைந்திருக்கலாம். ஒரு செயலையன்றி வெவ்வேறு செயல்களின் அடிப்படையில் அவர்கள் புனிதப் பேரவைத் தொண்டராக - உறுப்பினராக அமைந்திருக்கலாம்.

எனவே, அன்பு நெறியில் நின்று இறைவனுக்குத் தொண்டாற்றி அவ்வகையில் மக்களுக்குத் தொண்டு புரியும் புனிதர் பேரவை மரபில் வந்தாலும், உபதேசமுறையை மூலமாகக் கொண்டு பயன்தர விரும்புகிறார். எடுத்துக்காட்டாக,

நால்வர் பெருமக்களாலும் பிற அருளாளர்களாலும் அருளனுபவ அடிப்படையில் எழுந்தவைகளே பன்னிரு திருமுறைகள். இது அன்புறு நல்வழி. ஆயினும், பன்னிரு திருமுறைகளை மூலமாகக் கொண்டு சிவஞான போதம் முதலிய சாத்திர நூல்கள் அமைகின்றன. பன்னிரு திருமுறைகளைப் படித்து, அதன் சாரமாக எழுதப் பெற்றவைகளே சாத்திரங்கள் என்று எண்ணலாகாது. பன்னிரு திருமுறைகள் அருள் அனுபவப் பிழிவுகள். அருளனுபவத்தைத் தம் இயல்பாற் பெற்று, அனுபவ வெளியீடுகளாகத் திருமுறைகள் வந்தன. ஆனால், குருவின் மூலமாக உபதேச நெறியில் நின்று, கேட்டு உணர்ந்து, அருளனுபவம் பெற்று, அவ்வருளனுபவப் பிழிவுகளாகக் கொள்கைகளை வரையறுத்து வெளிப்படுத்துவது இன்னொரு வகை. இவ்வகையில், குருவாக நின்றவர் தமக்குக் கீழ்க்கன்றாக ஒருவரை அமைக்க, கீழ்க்கன்றாக நின்றவர் அக்குருமொழியை நீண்ட நாள் அனுபவமாக்கி, பின், தம்முடைய குருவின் செயலைப் பின்பற்றித் தாமும் தம்கீழ்க்கன்றைத் தோற்றுவிப்பதும், அனுபவப்பயனைப் பிறருக்கும் அளித்தலும் ஆகிய செயல்களைமேற் கொள்வார். அவ்வகையில் குருவின் செயலை அவரின் சீடர் பின்பற்றுவதற்குக் கால இடைவெளி அமையும்.

திருவாரூர்த் திருக்கூட்ட மரபில் அன்பின் பெருக்கால், தொண்டின் வழியால் ஆறேநாளில் ஒரு கண்ணப்பர் தோன்றிவிடலாம். அவர்கள் வாழ்ந்த வாழ்வியற் கூறுகளே போதுமானவை. ஆனால், உபதேச முறையில் மேலே சொன்ன தொண்டினையே மக்கள், மற்றையவர்கள் அறிந்து கடைப்பிடிக்கும் வகையில் - அவர்களைச் செயற்படுத்தும் நிலையில் அவர்கள் உணர்ச்சியையும் அறிவையும் இணைத்துப் பண்படுத்த வேண்டும். திருவாரூர்த் திருக்கூட்டம் தன்வெற்றி. தன்வெற்றியாயினும் அவர்தம் வாழ்வியற் கூறுகள், அருளிப்பாடுகள் மற்றவர்களையும் வளப்படுத்தின. உலகத்துயிர்களை முன்னேற்றுவது என்பதை நோக்கமாகக் கொண்டும் வாழ்ந்தார்கள். ஆனால், அவ்வாறு தன்வெற்றியை மற்றவர்களையும் இணைய நிறுத்துவதன் மூலம் மற்றவர்களும் பெற விழைவார்களாயின் அதுவே உபதேச முறை. இது அடிவாழையைப் பெயர்த்து வேறோர் இடத்தில் நடுவதைப் போன்றது.

இடம் பெயர்த்து நடப்பெற்ற வாழை போன்றவனும் அல்லன் என்று கூறுகிறார் வள்ளலார். எனக்கு உபதேச முறையுங்கூட, ஆரூரும் தில்லையுமே. அதே வழியை, அங்கேயே இருந்த திருமூலர்

வழியை விரிவாகச் சிந்தித்தும் செயல்பட்டும் அமைந்தால் பரிணாம வளர்ச்சியில் முன்னே அருகிக் கிடந்தவைகள் வெளிப்பட்டுச் சிறக்கின்றன, அவைகளை முற்றாகவே புதுமைகள் என்று சொல்லமுடியாது. ஆனால், இன்று வெளிப்பட்டுப் பயன் தரும் அவைகள் முன்னே விதையெனக் கிடந்து அருகி, மறைந்து, தண்ணீர் இல்லாத பாலைவனத்து நல்வித்துக்களாகக் கிடந்தவை.

வழிவழிமரபு என்பதற்காக வாழையை அமைத்துக் கொண்டாலும் வள்ளலார் சில புதுமைகளைத் தொண்டு என்ற அடிப்படையில் நின்று பரம்பொருளிடம் கேட்டுப் பெறுகிறார். தாம் கேட்பவைகளுங்கூட முன்பே உள்ளவைகளே என்றும் சுட்டிக் காட்டிக் கேட்கிறார். அப்படிப்பட்ட சில புதுமைகளால் தொன்மையாகிய தன்னுடைய மார்க்கத்தை மேலும் மேலும் விளங்கச் செய்யும் முறையையும் வள்ளலார் பின்பற்றுகிறார்.

'ஒற்றியூர் நியமம்' என்பது கோயிற் பெயரே. அவ்வழக்கை வள்ளலார் கொள்கைக் குறியீட்டுப் பெயராகவே கொள்கிறார். சிதம்பரம் இராமலிங்கம் என்ற பெயரில் முன்னிணைப்பாக நின்ற 'சிதம்பரம்' என்பது கொள்கை விளக்கக் குறியீடாக நிற்பது போலவே 'ஒற்றியூர் நியமம்' என்பதையும் கொள்கை விளக்கக் குறியீடாகக் கொள்ளவேண்டும்.

ஒற்றியூரான் நின்ற நிலையைப் 'படம் பக்கநாதன்' என்ற பெயரமைப்பிற் காணவேண்டும். படம் என்பது பாம்பைக் குறிக்கிறது. பாம்பை இடமாகக் கொண்ட பெருமான் என்பது படம்பக்கநாதன் என்பதன் பொருள்.

பாம்பின் உடல், உயிர் என்ற இரண்டன் கூட்டைப் போலவே, பாம்பின் உயிருடன் பரம்பொருள் கலந்திருக்கிறது என்பதை இங்கே நாம் உணர்கிறோம். பாம்பு என்ற உடலின் உள்ளே அந்த உயிர் இறைவனுடன் ஒற்றிக் கலந்துள்ளது. இதனைச்

''சுத்தந் தோய்ந்த அத்துவித ஆனந்தப் பெருநிலை''

என்று குறிப்பிடுவார் வள்ளலார்.

''தன்இயல் என்இயல் தன்செயல் என்செயல்
என்ன இயற்றிய என்தனித் தந்தையே
தன்உரு என்உரு தன்உரை என்உரை
என்ன இயற்றிய என்தனித் தந்தையே''

என, இறைவன் இயலும், செயலும், உருவும், உரையும் என்ற நான்கும் பாம்பு என்ற உயிரின் செயல்களாகி அமைந்தன. இந்த அத்துவிதக் கலப்பில் பாம்பின் உயிர் அழிந்து விட்டதா என்றால் இல்லை. பாம்பானது அக்கலப்பில் தன்னைத் தனித்துக் காணவில்லை. பெருமானில் ஒன்றிய நிலையில்,

''தன்னையும் தன்அருட் சத்தியின் வடிவையும்
என்னையும் ஒன்று என இயற்றிய தந்தையே''

என்று எண்ணுகிறது; பேசுகிறது; செயற்படுகிறது. இதனைத்தான் வள்ளலார் **சதுரப் பேரருள்** என்றும், **ஒற்றியூர் நியமம்** என்றும் குறிப்பிடுகின்றார். சதுரம் என்பது நான்கு என்பதைக் குறிக்கும். 'சதுரப்பாடு' என்ற வழக்கும் உண்டு. நாற்பக்க எல்லைகளையும் தமக்கே உரிமையாக்கி, தம்முடைய கொள்கையையே நாற்பக்க, நற்காவல் கோட்டையாக்கி எவராலும் அணுக முடியாதவாறு அக்கோட்டைக்குள் வாழ்பவர் என்பது பொருளாம். இங்கே இறையும் உயிரும் நால்வகை நிலைகளில் அருள்கோட்டை எனச் சுத்தந் தோய்ந்த அத்துவிதம் பெறுகிறது. பாம்பின் உயிருக்கு, தான் என்ற நினைவு அழிந்து விட்டது அவ்வளவே. இது அகநிலையாயினும், புறநிலையிலும் அந்தக் கலப்பை நாம் அறிகிறோம். படம் இருப்பதால் பாம்பு எனப் பெறும் உயிர் இருக்கவும் இலிங்கம் இருப்பதாகவே கொண்டு வழிபடுகிறோம். அகத்தே உள்ள அத்துவிதக்கலப்பினைப் புறத்தேயும் காண்கிறோம். இதனை வள்ளலார்,

''உணர்ந்து உணர்ந்து, உணரினும் உணராப் பெருநிலை''

என அமைந்த துரிய வாழ்வென எடுத்துக் காட்டுகிறார். அறியும் நிலையில் அறியும் பொருள் அறியப்படும் பொருள் ஆகிய இரண்டும் இணைகின்றன. அவ்வகையில் நனவு, கனவு, உறக்கம் பேருறக்கம் என நான்கு நிலைகள் பேசப் பெறும். அவைமுறையே சாக்கிரம், சொப்பனம், சுழூத்தி, துரியம் என்ற கலைச்சொற்களால் சுட்டப் பெறும். உணர்ந்து, உணர்ந்து, உணரினும் என்ற மூன்று நிலைகளிலும் அறியும் நிலை வந்து மேலும் அறிய முற்படும் போது துரிய நிலையை அறிந்து முடிக்க முடியவில்லை என்பது பொருளே யொழிய அறியும் அறிவும் அழிந்து விட்டதாக எண்ணுதல் கூடாது. அறிவு தொழிற்படுகிறது. ஆனால், தன்னை இழந்து, தான் அறிவது பெருமான் அறியப் பெறுவது என்ற நிலை இல்லாமல், பெருமான் அறிவில் இணைந்து இருக்கிறது. இதனையே,

''வலம்உறு சுத்த சன்மார்க்க நிலை''

என்பார். துரியநிலை வரை சென்ற உயிரானது தான் அறிய முடியாமையால் கரைந்து, சிவத்துள் தன்னை இழந்து விடுமானால், அதுவும் செத்துப்போன நிலை என்று குறிப்பிட்டு, அங்கேதான் எனக்கு வலம் உறு சன்மார்க்கம் வாய்த்தது - வெற்றியை உடைய சன்மார்க்கம் வாய்த்தது என்று குறிப்பிடுவார். இதனையே

''சிறுநெறி செல்லாத் திறன்அளித்து அழியாது
உறுநெறி உணர்ச்சி தந்து ஒளிஉறப் புரிந்து
சாகாக் கல்வியின் தரம்எலாம் உணர்த்தி
சாகா வரத்தையும் தந்து''

என்பார். துரியநிலையிற் சென்று நின்றபோது அறியும் ஆன்மாவானது அறிய முடியாது என அழிந்தது. இங்கே வந்த பின்னும் செத்துப் போதல் வரும் என்பதை உணர்த்தி, இங்கேயும் சாகாதிருக்குமாறு செய்தான். இதுவே, சாகாமையின் உயர் நிலை. இதனைச் 'சாகாவரம்' என்பார். சாகாக்கல்வியின் தரம் என்ற மேலாம் நிலை. இதனை வள்ளலார் ''வரநிறைநிலை'' எனவும் குறிப்பார். சாகாமையின் உயர்நிலை என்பதே ''வரநிலை'' எனப்பெறும். சாகாமை என்பது முழுமை பெற்ற உயர்நிலை. இதனை,

''வரநிறை பொதுவிடை வளர்திரு நடம்புரி
பரமசித் தாந்தப் பதி''

என்று குறிப்பிடுவார். சாகாநிலையை முழுமையாகப் பெற்றவனின் **உள்ளம்** என்பதே இங்கு ''வரநிறை பொது'' என்பதாயிற்று. உள்ளம் இடமாக அமையும். இதனை மேலும் விளக்கமாக,

''சமரச சத்தியச் சபையில் நடம்புரி
சமரச சத்தியத் தற்சுயஞ் சுடரே
**சபை எனது உள்ளம்** எனத்தான் அமர்ந்து எனக்கே
**அபயம்** அளித்தருள் அருட்பெருஞ் ஜோதி''

என எடுத்துக் கூறுவார். இங்கே நாம் காணவேண்டியது, துரிய நிலையிலும் உணராமை என்பது உயிர் தனிநின்று அறிய முடியாமல், உயிர் பரத்துடன் இணைந்து அறிகிறது என்றநிலை. அதுவே வரநிலை. அவ்வாறு அறியும் அறிவு நிலையில் முழுமையான

சித்தியும் பெறுவதனால் அந்நிலையை வள்ளலார் ''வரம் நிறைநிலை'' என்றார். அப்போதும் ஆன்மா இருக்கிறது; அறிகிறது. இதுவே சாகாமையின் வரநிலை - மேல்நிலை.

'வரநிலை' என்ற வழக்காறு வள்ளலாருடையது. இதனையே மாணிக்கவாசகரிடத்தில் ''வருமொழி செய் மாணிக்கவாசக'' என்பதில் அமைத்து

''**வருமொழி** செய் மாணிக்கவாசக நின் வாசகத்தில்
ஒருமொழியே என்னையும் என் உடையனையும் ஒன்றுவித்துத்
தருமொழியாம் என்னில் இனிச் சாதகமேன் சஞ்சலமேன்
குருமொழியை விரும்பி அயல் கூடுவதேன் கூறுதியே''

என்ற ஆளுடைய அடிகள் அருண்மாலை 8-ஆம் அருட்பாவில், வருமொழி என்று குறிப்பிட்டு வரம்நிறைநிலை - சாகாமையில் உயர்நிலை எனப்பெறும் அத்துவித நிலையை அடைவிக்கும் மொழி என்பதாகக் காட்டினார். இதுவரையில்,

சதுரப்பேர் அருள்நிலை

எனப்பெறும். இதுவே வலமுறு சுத்த சன்மார்க்கம் எனவும் துங்கமுறு சுத்த சன்மார்க்கம், சுத்த சன்மார்க்கச் சத்தியநிலை எனவும் பேசப் பெறும். இதன்மேல் வருவது 'சுகநிலை'. இங்கேதான் 'ஓம்' என்ற ஏகாக்கரப் பொருள் அனுபவம் எய்தும். அதுவே, பெரும்பிரிவு; சாகாப்பெருநிலை. அங்கே பரம்பொருள் சற்குரு. அருட்சத்தியாம் அப்பரம்பொருள் தாயாக அமையும்.

''சாகாக் கல்வியின் தரம்எலாம் கற்பித்து
ஏகாக் கரப்பொருள் ஈந்த சற்குருவே
சீருற அருளாம் தேசுற அழியாப்
பேர்உற என்னைப் பெற்ற நற்றாயே
பொருந்திய அருட்பெரும் போகமே உறுக எனப்
பெருந்தய வால்எனைப் பெற்றநற் றாயே''

என்றும்,

''அன்பையும் விளைவித்து அருட்பேர் ஒளியால்
இன்பையும் நிறைவித்து என்னையும் நின்னையும்

ஓர்உரு வாக்கியான் உன்னிய படியெலாம்
சீர்உறச் செய்து **உயிர்த் திறம்பெற அழியா**
அருளமுது அளித்தனை அருள்நிலை ஏற்றினை
அருள்அறிவு அளித்தனை அருட்பெருஞ் ஜோதி''

என்றும் குறிப்பிட்டு, இன்பநிலை எய்திய போது, அந்நிலையைக் கொடுத்த நெறியை 'ஆன்ற சன்மார்க்கம்' என்றும் 'சுத்த சன்மார்க்கச் சுகநிலை' என்றும் குறிப்பிடுவார்.

''துரிய வாழ்வுடனே சுகபூரணம் எனும்
பெரிய வாழ்வளித்த பெருந்தனித் தந்தையே''

என்றும் விளக்குவார்

எனவே, ஒற்றியூர் நியமத்தில், பாம்பினுடைய உயிரும் இலிங்கமும் அத்துவிதக் கலப்பு எய்தி நின்ற நிலையில் நால்வகை நிலைகள் கலந்தன. அதுவே சதுரப் பேரருள் நிலை. நமக்குக் கூடியது படத்துடன் - பக்கத்துடன் இருந்த நாதனாம் நிலை.

உயிரும் பரம்பொருளும் அத்துவிதக் கலப்பை எய்தியது எங்கே? இங்கேயே, இப்பிறவியில். சான்றாக நிற்பது பாம்பின் உடல். அதுவே படம். இதனை இகத்தே பரத்தைப் பெறுதல் எனலாம்.

பாம்புப்பிறவி எடுத்த உயிர் கலப்பெய்துகிறது. உயிரும் பரமும் அத்துவிதநிலை பெற்றபோது, உடம்பும் அழியாது நிற்கிறது. உடம்பைத் தாங்கிய புற்றும் அருள்நிலை பெற்று, மற்றவர்களின் வணக்கத்துக்குரியதாகிறது.

புற்று எனப்பெறுவது வெறும் மண். உள்ளே பாம்பு என்ற உடல் அருட்பிரகாசத்துடன் பொலிகிறது. உடல் அருட்பிரகாசம் அளிக்கிறது. பிரகாசத்துக்குக் காரணமாகிய, பாம்பின் உள்ளம் சத்தியஞான சபை ஆகிறது. அங்கே வாசுகி என்ற பாம்புயிர் பேரொளியாக, உள்ளே பரம் உள்ளொளியாக நிற்க, சத்தியஞான சபையும் அருட்பெருஞ் ஜோதியாம் நிலையும் என அமைந்த தன்மையை, புற்றின் மூலமாகவே நாம் உணர்கிறோம். வணங்குகிறோம். தண்ணீர் விளக்கு எரிகிறது. அதுவே சித்தி வளாகம். ஒற்றியூர்ப் படம்பக்கநாதனைப் பார்க்க. அங்கே, புற்று, பாம்பின் உடல், பாம்பின் உயிர், இலிங்கப் பொருள் ஆகியவை

கலந்து புற்று முதலாக நின்ற நான்கும், ஒரேநிலையில் நிற்க, அது வழிபடப் பெறுகிறது. இதை வள்ளலார் வாக்காக உணர வேண்டுமெனில்

| | | |
|---|---|---|
| ஒற்றியூர்ப் புற்று | : | -சித்தி வளாகம் - திருமாளிகை. |
| | | தண்ணீர் விளக்கு எரிகிறது திருவருட் சந்நிதியில். |
| பாம்பு | : | சத்திய ஞானச் சித்திச் சபை. |
| வழிபடப்பெறும் இலிங்கமூர்த்தம் | | உயிரும் பரமும் அத்துவித நிலைபெற்ற அருட்பெருஞ் ஜோதி. |

என அமைத்துக் காணவேண்டும். வள்ளலார் அருள்வாக்கினால் ஒற்றியூர் நியமம்

''**உளம் பெறும் இடம்** எலாம் உதவுக எனவே
வளம்பட வாய்த்த மன்னிய பொன்னே
புடம்படாத் தரமும் விடம்படாத் திறமும்
வடம்படா நலமும் வாய்த்த செம்பொன்னே
மும்மையும் தரும்ஒரு செம்மையை உடைத்தாய்
இம்மையே கிடைத்துஇங்கு இலங்கிய பொன்னே
எடுத்தெடுத்து உதவினும் என்றுங் குறையாது
அடுத்து அடுத்து ஓங்கும்மெய் அருளுடைப் பொன்னே
நீகேள் மறக்கினும் நின்னையாம் விட்டுப்
போகேம் எனஎனைப் பொருந்திய பொன்னே''

என வாழ்த்தப் பெறுகிறது. ஆம். வாழ்த்து என்பதற்கு இயல்பைக் கூறுதல் என்பதே பொருள் என்பதைத் தொல்காப்பியத்தால் அறிக.

எனவே, நால்வகைப் படிநிலைகளில் உணர்ந்து வரும் சன்மார்க்கம் தொன்மையானதே. அதில் நாலாம்படி எனப்பெறும் சன்மார்க்க நிலையில் விளக்கம் அமைத்து, முன்னைய மூன்று நெறிகளையும் விளக்கமுறச் செய்தல் என்பது சன்மார்க்கம் எனப்பெறும் சத்திய நிலைபெறும் வழியை 'ஒற்றியூர் நியமம்' என்ற பெயரில் இணைத்து அமைத்தது வள்ளலார் வழங்கிய புதுமைத் தன்னிணைப்பு.

மகனாகவும், அடிமையாகவும், தோழமை எனப்பெறும் தொண்டனாகவும் வளர்ந்த நிலைகளை உட்கொண்டதாய் அமைந்த சன்மார்க்கம் ஞானத்தால் கடவுளை அடைதல் என்று உணரப் பெற்றதை, விரிவாக விளக்கிய வகையில் தொன்மை மரபைத் துங்கமுறும் சன்மார்க்கம் என விளக்கிக் காட்டினார். அந்நிலை பெற்றவர்களையும் இவ்வுலகில் 'உள்ளம்' என்ற ஒன்றைக் கொண்ட பொருள் எதுவாயினும் அதனைச் சத்தியப் பெருவாழ்வில் திளைக்கவைக்கத் தொண்டாற்றும் நிலை; செயல்முறை ஆகியவைகளை இணைத்த மரபே சன்மார்க்க மரபு என விளக்கிக் காட்டினார்.

பரம்பொருளை அடைந்து பேரானந்தப் பெருவாழ்வு வாழ்தல்என்பதே சன்மார்க்கம் என நினைந்து அவ்வாறு வாழ்ந்து வரும் தொண்டர்களை, அருளாளர்களை இணைத்தது **"திருக்கூட்டமரபு"**. சன்மார்க்கத்துடன் அனைத்து நெறிகளையும் இணைத்துச் சமரசம் செய்ததும், அனைத்து முடிவுகளையும் கடந்து சுத்தம் என நிறுத்தியதும் ஆக விளங்குவது சன்மார்க்கம் என்பதைக்காட்டி, அந்நெறி, இவ்வுலகில் அனுபவிக்கப் பெறுதற்கு வழிவகுக்கும் ஒரு நெறி என்றும், 'உள்ளம்' என்ற ஒன்று இருந்து விட்டால் போதும் அதனை இவ்வாழ்வுக்கு ஏற்றி விடுவோம் எனக் கங்கணம் கட்டிக் கொண்டு, இவ்வுலகில் தொண்டு செய்து கொண்டிருக்கும் சித்தவளாகங்கள் பலவற்றைத் தன்னுட் கொண்டது சமரச சுத்த (சன்மார்க்க) சத்தியப் பெருவாழ்வுச் **சங்கத்தார் மரபு**. இரண்டும் ஒன்றின் முன்னுறு நிலையும் பின்னுறு நிலையும் எனக் கொள்ள வேண்டும் என நிறுத்தியவர் வள்ளலார். இதனை

''வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட
மரபினில் யான் ஒருவன்''

என்றும்,

''என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம்''

என்றும், பிரித்துக்காட்டியும், இணைத்து ஒன்றாக்கியும் அமைத்த நிலையே வள்ளலாரின் அருட்பணி.

தொன்மையாம் திருக்கூட்ட மரபுக்குத் துங்கமாம் நிலை உண்டு என விளக்கிய மரபுவழிவந்த சன்மார்க்கத்துக்கும் சமரச சுத்த சத்தியப்பெருவாழ்வு நெறிஎன நிறுத்திய சன்மார்க்க மரபுக்கும் இடை

நின்ற வள்ளலார் 'இடைநிலைத் தீவகம்'' என்ற அணி இலக்கணமானார்.

சிதம்பரம் இராமலிங்கம், ஒற்றியூர் நியமத்தைப் பேணிய போது உத்தரஞான சிதம்பரமாய், சத்திய தருமச்சாலையாய், சித்திபுரச் சத்திய ஞானசபையாய், சித்தி வளாகமாய் என்றும் நின்று அருள் ஒளி வீசுவதாயிற்று. அதுவே வடலூர் மேட்டுக்குப்பத்து வரலாறு.

அதுவே, 'திருஅருட்பா' என்னும் நூலாய் எங்கெங்கே உள்ளம் இருக்கிறதோ அங்கெல்லாம்

''தண்ணீர் விளக்கு எரிதல்''

என நின்று அருளொளி வழங்கிக் கொண்டிருக்கும் ''ஒற்றியூர் நியமம்'' எனக் கொள்க.

## வாழையும் வளாகமும்

வாழை என்பதையும் வளாகம் என்பதையும் இரண்டு மரபுகளின் குறியீட்டுச் சொற்களாக அமைத்துக் கொள்க. வாழை என்பது திருக்கூட்ட மரபைக் குறிக்கும் குறியீட்டுச் சொல். வளாகம் சன்மார்க்க மரபு பேசிய வள்ளலார் காட்டிய இறுதிநிலை. இவ்விரண்டும் ஒரே நெறியின் முன்னுறுநிலையும் பின்னுறுநிலையும் எனக் கொள்க. இவ்விரண்டையும் இணைத்து முழுமையாக்க வள்ளலார் மேற்கொண்ட செயற்பாட்டு முறை யாது என்பதைக் காணவேண்டும்.

அடியவர் திருக்கூட்டமும் அதில் ஒருவனாக இணையவேண்டும் என விரும்புவதும் அருள் நூல்களிற் பேசப் பெறும் வழக்கமான செய்திகள். திருக்கூட்டத்தில் சேர விரும்புவதற்குக் காரணம் ஒன்று உண்டு.

''பத்துடையீர் ஈசன் பழஅடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மை தீர்த்து ஆட்கொண்டாற் பொல்லாதோ''

என்பது மணிவாசகரின் திருவெம்பாவையின் மூன்றாம் வாசகம். அருளனுபவத்தை அக்கூட்டத்தின் இடையில் இருந்தாலே பெற்று விடலாம். எளிய நிலையில் நின்றே அத்தகைய பெருவாழ்வைப் பெற்றவர்கள் பலருடைய வரலாறே பெரியபுராணம். அவர்தம் வரலாறுகளே திருவருட்பிரகாசம் ஆகும். அது வாழையின் அடி

வாழையானது குலை ஈனுவதைப் போன்றது. அருள் வாழ்க்கை இது என்ற அளவிற் காட்டுவதே அவ்வாழ்க்கையின் முடிநிலை.

அருள்விளக்கம் அளிப்பது பொதுமரபு. ஆயினும் அருள்விளக்கத்தைப் பெறும் முறை, தரும்முறை ஆகியவைகளில் வகையறியேன் என்று குறிப்பிடுகிறார். எனவே, வாழைக்கு இல்லாத பணி வள்ளலாருக்கு அமைகிறது.

இந்நிலையில் வள்ளலார் மன்றாடியிடம் மன்றாடுகிறார். பொது மன்றில் ஆடும் வள்ளால் நான் உனக்கு மகன் அல்லனோ நீ எனக்கு வாய்த்த தந்தை அலையோ என்று கேட்பதன் நோக்கம் மரபுமுறையிலும் மகன் முறையிலும் பணியாற்ற வேண்டும் என்பதே.

உலக மக்களுக்கு வாழ்வியற் குறிக்கோட் செய்திகளை எடுத்துச் சொல்லவும் வாழ்ந்து காட்டவும் வேண்டிச் சில அருளாளர்கள் இவ்வுலகிற்கு வருவிக்கப் பெறுகிறார்கள். அவர்கள் வந்ததன் நோக்கம் இறைவன் அருளாணை வண்ணம் தொண்டாற்றுவதற்கே.

இறைவன் ஆணையால் உலகத்துயிர்களுக்குத் தொண்டாற்று வதற்காகவே அவனால் வருவிக்கப் பெற்றவர்களையே வாழையடி வாழையென வந்த திருக்கூட்டம் என்று குறிப்பிடுகிறார் வள்ளலார். வருவிக்க வந்துற்றார் என்பதைத்தவிர அங்கேயே பணியின் திறம், செயற்பாட்டு முறைகள் ஆகியவை தெரிவிக்கப் பெற்றுவிடும் என்று கருதலாகாது. இங்கே வந்த பின்னர் அவர்கள் செயற்படும் நிலையும் வகையும் முறையும் உணர்த்தப்பெறும். இவ்வாறு ஒருசிலர் வர வேண்டும் என்பது ஏன் ? இத்தகைய அருளாளர்கள் இல்லாமல் இறைவனே இப்பணியை நிறைவேற்ற இயலாதா ? இவ்வினாக் களுக்கெல்லாம் உரிய விடை சிலவற்றை வள்ளலார் அளிக்கிறார். இத்தகைய பணிகளை இறைவனே செய்துவிடவும் இயலாது; வள்ளலாரைப் போல ஒருசிலர் தவிர வேறுயாராலும் செய்யவும் இயலாது. ஏன் ?

### உயிரிரக்கம்

உலகத்து உயிர்களுக்காக அவ்வுயிர்கள் படும் துன்பங்களைக் கண்டு இரங்கிக் கண்ணீர் வடிக்கின்றவர்களால்தான் இச்செயலில் ஈடுபட முடியும். உயிர்களுக்காக வருந்தி இறைவனை அழுது அழுது

கேட்டுத் துன்புற்றால்தான் இந்நிலையைப் பெற முடியும் எனத் தெரிகிறது.

''இந்த ஏழை படும் பாடு உனது திருவுளச் சம்மதமோ
இது தகுமோ இதுமுறையோ இது தருமந்தானோ''

என்று கூறிய வள்ளலார்

''கோழை உலகு உயிர்த் துயரம் இனிப் பொறுக்க
மாட்டேன்''

என்று கூறுவதைக் கருத வேண்டும். யான் வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினைச் சார்ந்தவன். உயிர்த் துயரம் பொறுக்க மாட்டேன் என்று குறிப்பிடுவதை நோக்குதல் வேண்டும்.

''படமுடியாது இனித்துயரம் பட்டதெல்லாம் போதும்
படமுடியாது அரசே''

என்று அவர் அழுவது அவருக்கு நன்மை உண்டாக்கிக் கொள்ளுவதற்காக அன்று. உலகத்து உயிர்களுக்காக வருந்தி அழும் உயிர் இரக்கம். உயிர்த்துயரம் உடையவர்களே இப்பணியை ஆற்ற முடியும். இறைவனிடம் இவ்வாறு அழுது அழுது வாங்குவது யாருக்காக, உலகத்துயிர்களுக்காகவே.

திருஞானசம்பந்தர் மூன்று வயதில் இறைவனை நோக்கி அழுதார். இறையருள் வண்ணம் தமக்குக் கிடைத்த சிவஞானத் தெள்ளமுதாகிய பாலைத் தானே குடித்துவிடாமல் தேவாரமாக உலகத் துயிர்களுக்கு வழங்கினார். உயிர்களின் மேல் வைத்த உயிரிரக்கம் காரணமாகவே அழுதார். அழுகையாற் கிடைத்த பயனை உயிர்களுக்கே வேறு வடிவில் வழங்கினார்.

''பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையின் இயற்
பாவான் மொழிஞானப் பாலுண்டு - நாவால்
மறித்துஎம் செவியமுதாய் வார்த்தபிரான் தண்டை
வெறித்தண் கமலமே வீடு''

என்று சிவப்பிரகாசர் நால்வர் நான்மணிமாலையிற் குறிப்பிடுகின்றார்.

''வேதநெறி தழைத் தோங்க மிகுசைவத் துறை விளங்க
பூதபரம்பரை பொலியப் புனித வாய் மலர்ந் தழுத''

என்று இதே கருத்தைச் சேக்கிழாரும் விளக்கியமை காண்க.

## ஐவகை உயிர்த்துயரம்

''அடித்தது போதும் அணைத்திடல் வேண்டும்'' என்று அழுது அழுது கேட்டதெல்லாம் உலகத்து உயிர்களுக்கு அருளமுதம் வழங்கத்தான். ஆயினும், வள்ளலார் வேறொரு நுட்பத்தையும் வெளியிடுகின்றார். தாம்படுகின்ற உலகுயிர்த் துயரம் ஐவகையானது என்று பட்டியல் தருகின்றார்.

''செய்வகை என் எனத் திகைத்தேன் திகையேல் என்றொரு நாள்
திருமேனி காட்டி எனைத் தெளிவித்தாய் நீயே''

என்று கேட்கத் தொடங்கிய வள்ளலார்,

''**ஐவகை இவ்வுயிர்த் துயரம்** இனிப் பொறுக்க மாட்டேன்
அருட் சோதிப் பெரும் பொருளே அளித்தருள் இப்பொழுதே''

என்று எண்ணிக்கையை உடன்கொண்ட பட்டியல் ஒன்றையும் தருகின்றார். 'பிரியேன்' என்ற தலைப்பில் ஐந்தாவது அருட்பாவில் இவ்வாறு அமைத்து, கணக்கிட்டுப் பேசும் வள்ளலார் உலகு உயிர்த் துயரம் ஐந்து ஆகையால் அவன் எனக்குத் தரும் அருட்சோதிப் பெரும் பொருளும் அந்த ஐவகைத் துயரங்களை நீக்குவதாக அமையும் என்றும் குறிப்பிடுகின்றார்.

மேலும், உலகுயிர்த் துயரம் ஐந்து வகைப்படும் ஆகையால் இறைவனும் செம்பொன் மணிப்பொதுவில் திருத்தொழில் ஐந்து இயற்றுவிக்கும் திருவிடை நாயகனாக அமைகின்றான் என்றும் கூறுகின்றார்.

திருவருட்பா, நான்காந் திருமுறை, அபராத மன்னிப்பு மாலையில் ''திறப்பட நன்குணராத'' எனத் தொடங்கும் எட்டாவது அருட்பாவில்

''சிறப்படை மாதவர் போற்றச் செம்பொன்
மணிப்பொதுவில்
திருத்தொழில் ஐந்து **இயற்றுவிக்கும்**
திருநட நாயகனே''

என்றும், திருவருட்பா, அருட்பிரகாச மாலையில், ''செய்வகை அறியாது'' எனத் தொடங்கும் 23-ஆம் அருட்பாவில்

''ஐவகையாய் நின்று மன்றில் ஆடுகின்ற அரசே
அற்புதத்தாள் மலர் வருத்தம் அடைந்தன என் பொருட்டே''

என்றும் வள்ளலார் ஐந்து என்னும் எண்ணிக்கையுடன் இணைத்துக் கூறுவதை ஆய்வுக் கண்ணோட்டத்துடன் இணைத்துச் சிந்திக்க வேண்டும்.

## ஐவகை அழுகை

வள்ளலாரின் தத்துவத் தோற்றம் அமைதற்குரிய சூழ்நிலையை நாம் நன்கறிதல் வேண்டும். தன்காலத்தில் தன்னுடன் உடனுறை மக்களைப் பார்க்கிறார். ஐவகை அறியாமைகளைக் காண்கிறார்.

1. செய்வகை அறியாது சில செயல்களைச் செய்கிறார்கள்.
2. மெய்வகை தெரியாது பொய் நெறிகளையே மேற்கொள்கிறார்கள்.
3. உய்வகை அறியாது உளறுவகை தேர்கிறார்கள்.
4. மெய்யான ஒன்றை மெய்யான அறிவால் உணர அறியாது மயங்குகின்றனர்.
5. மெய்யான ஒன்றை நுகர்ந்து மெய்யான இன்பம் பெறாது கெடுகின்றார்கள்.

எனவே, செய்வகை, மெய்வகை, உய்வகை, மெய்யுணர்வகை, மெய் நுகர்வகை என்ற ஐந்தும் தெரியாமல் கெடுகிறார்கள். ஐவகைத் துயரம் என்று கணக்கிட்டுக் கூறி, ஐவகை இவ்வுலகுயிர்த் துயரம் என்றும் கோழை உலக உயிர்த்துயரம் இனிப் பொறுக்கமாட்டேன் என்றும் கூறுவதை நோக்க வேண்டும்.

ஐவகை உயிர்த் துயரம் நீங்க, ஐவகை அருட் செயலை மேற்கொள்ள வேண்டும் என்று வேண்டி, ஐந்தாம் பிள்ளையாகிய இராமலிங்கர் ஐவகையாக அழுதார் எனக் கொள்க.

## உண்மை நெறி

உயிர்த்துயரம் ஐவகை; உணர்ச்சி மிகுந்த மெய் அழுகை ஐந்து வகை என்று குறிப்பிட்ட வள்ளலார் அந்த ஐந்து வகைகளையும் இந்த

உலகத்து உயிர்கள் அறியாமலோ செயல் படாமலோ இருக்க வில்லை, செய்ய வேண்டியவைகளைத் தேர்ந்து, அவைகளைச் செய்ய வேண்டிய முறைகளில் செய்யவில்லை என்பது மட்டுமன்று; செய்யக் கூடாதவைகளைச் செய்ய வேண்டியவைகளாக மாறுபட உணர்ந்து அமைத்துக் கொண்டவைகள்.

எனவே, மேலே குறிப்பிடப் பெற்ற ஐந்து நிலைகளிலும் உண்மையாம் நிலை அமைதல் வேண்டும்.

உண்மைச் செயல் செய்ய, அதனை உண்மை வழியில் செய்ய, உண்மை உயர்வை நாட, உண்மையை உண்மையாக உணரும் ஞானம் பெற, உண்மை இன்பம் துய்க்க என இவ்வாறு மேலே குறிப்பிடப் பெற்ற ஐந்து நிலைகளிலும் உண்மைத் தன்மையை நிலைநாட்ட வேண்டும்.

எனவே, ஐவகை உண்மை நிலைகளை எடுத்துச் சொல்ல வேண்டும் என விரும்பினார். பொய்யானவைகளையெல்லாம் மெய்யானவை என மாறுபட உணர்ந்து, பொய்யான வாழ்வில் கிடப்பவர்களுக்கு, அவர் தம் வாழ்வியல் நெறிகளுக்குரிய மெய்யான விளக்கம் தந்தார். அதுவே, வள்ளலார் மேற்கொண்ட தொண்டின் அடிப்படை.

## ஐந்தாம்பிள்ளை - கடைப்பிள்ளை

வள்ளலார் அவர்தம் தாய் தந்தையர்க்கு ஐந்தாவது பிள்ளை அதுவும் கடைப்பிள்ளை. குடும்ப கோஷத்தில் அவர்

''அண்ணுறும் என்தந்தை தாய்க்கு அடியனேன்
**கடைப்பிள்ளை** யான தொன்றோ
கண்ணுறு நற் கல்வியினும் **கடைப்பிள்ளை**
ஆனேன் பின் கருதும் வாழ்க்கை
நண்ணுறு பல் பண்டமெலாம் கொள்வதிலும்
கடைப்பிள்ளை நானே ஆனேன்''

என்று அமைக்கிறார். உலகுயிர்கள் படும் துயரம் ஐவகை ஆதலினால் அவற்றுக்காகக் கண்ணீர் வடிக்கும் வள்ளலாரும் ஐந்தாம்பிள்ளை. ஐந்தாவது பிள்ளை என்று மட்டும் கூறாமல், தம்மை அவர் ''கடைப்பிள்ளை'' என்றும் கூறுகிறார்.

மேலே சிந்தித்தவைகளைத் தெளிவுபெற அமைத்துக் கொள்ளுதல் என்ற வகையில் கீழ்க்கண்டவைகளைக் கொள்ளலாம்.

வாழையடி வாழையென வந்த திருக்கூட்டம் என்னும் மரபுப் பெருமை வாய்ந்த திருக்கூட்டத்தில் தாம் ஐந்தாவது என்கிறார் வள்ளலார்.

உலகுயிர்களின் ஐவகையான துயரம் தீர்க்க ஐவகை அழுகையை மேற்கொண்டவர் வள்ளலார்.

திருக்கூட்டம் வாழையடி வாழையென ஒரு படிமுறைப் பரிணாம வளர்ச்சியில் உலக உயிர்களின் துயர்தீர்க்கப் பணியாற்றிய பெருமையுடையது; அவ்வளர்ச்சிப்படியில் முன்னே நான்கு அருளாளர்கள் வளர்த்துச் சென்ற பின்னர் வள்ளலார் ஐந்தாமவராக வருகிறார்.

திருக்கூட்ட மரபில் ஐந்தாமவராக வரும் வள்ளலார் இக்கொள்கையை முழுமையும் நிறைவும் பெறுமாறு முடித்துவைக்கிறார். ஏனெனில், இவரே கடைப்பிள்ளை.

வள்ளலாருடன் நிறைவெய்தும் இக்கொள்கை தொன்மை வாய்ந்தது. வள்ளலாருக்கு முன்னே நான்கு அருளாளர்களால் வளர்க்கப் பெற்று வந்துள்ளது.

வள்ளலாருக்கு முன் உள்ள கொள்கையேயாயினும், முன்னுள்ள நால்வரும் தத்தம் தனித்தன்மை விளங்கும் வகையில் இக்கொள்கையை வளர்த்தது போலவே, வள்ளலாரும்

''என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம்''

என, **''என்மார்க்கம்''** எனத் தனித்துக் கூறும் வாய்ப்பினைக் கொண்ட முறையில் - முன்னை நான்கு படிகளில் அமையாத - ஆனால், அவற்றினை அடிப்படையாகக் கொண்டு வளர்ச்சியடைக் கூடியதாக இருந்தது எனக் கொள்ள வேண்டும்.

வள்ளலார் இணைத்த வளர்ச்சியானது அக்கொள்கையின் ஐந்தாம் நிலையில் அமைந்த வளர்ச்சியேயாயினும் அது ஐந்து பிரிவுகளைக் கொண்ட ஒருமை நிலையினது எனக் கொள்ள வேண்டும். ஆயினும், முன்நின்ற நான்காம் படியின் எல்லையிலேயே

நின்று கொண்டு, அந்த நான்காம் படியில் முன்னுள்ள வளர்ச்சியை மேலும் விளக்கம் செய்கிறார். முன்னமேயே அப்படி நிலை வரையில் வந்து இத்துடன் முடிந்தது என்று தூங்கியவர்களை - செத்தவர்களை - இறந்தவர்களை எழுப்பி, நாலாம்படியை முடிந்த கதை என்று கருதியவர்களை இது தொடர்கதை என்று விளக்கம் செய்கிறார்.

நாலாம்படி வரையில் வந்தவர்கள் அங்கேயே செயலின்றி ஒழிந்தார்கள். ஆகையால், முதல் மூன்று படிகள் விளக்கமின்றியே இருந்தன. வள்ளலார் நின்ற படி நான்காம் படியே. அப்படியின் இறுதி எனக் கொள்ள வேண்டும். அப்படியின் இறுதியிலிருந்து கொண்டு ஐந்து நிலைகளைக் கொண்ட ஒருமை வளர்ச்சியினை இணைக்கிறார். நான்காம் படிவரை வளர்ந்த வளர்ச்சியை மேலும் விளக்கம் பெறவைத்தார்.

## இருவகை மரபும் அறுவகைக் கொள்கையும்

''என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம்''

என்று இறப்பொழித்தலை, செத்தாரை எழுப்பிய அந்த ஒரு செயலை முதன்மைச் செயலாக நிறுத்தித் தன்னுடைய கொள்லகையை விளக்கினார். இறப்பொழிக்கும் சன்மார்க்கம் என்பதால் வள்ளலாரால். அருளப்பெற்ற கொள்கையானது 'இறப்பொழித்தல்' என்பதை மட்டுமே அடிப்படையாகக் கொண்டது என்று முடித்து விடலாகாது.

படிமுறை வளர்ச்சியில் வளர்ந்து வரும் இக்கொள்கையில் முன் இல்லாத கொள்கையாக ஐந்து கொள்கைகள் உள்ளன என்று வள்ளலாரே வரையறை செய்கிறார். ஆறாவதாகவும் ஒரு கொள்கை உண்டு. ஆனால் அது நான்காம் படியின் இறுதிக் கொள்கையாக - நான்கு படிகளில் வளர்ந்து வந்த அக்கொள்கையின் உயிர்நாடிக் கொள்கையாக அமைந்து விடுகிறது. இவ்வகையில் வள்ளலாரின் கொள்கை ஆறு பிரிவுபெற நிற்றலின் அவர் அருளிய அருட்பாக்களும் ஆறு திருமுறைகளாயின.

### சுத்த சன்மார்க்க மரபு

வள்ளலார் தாம்பெற்றதும் தம்மால் வெளிப்படுத்தப் பெற்றதும் ஆகிய சுத்த சன்மார்க்கத்தின் மரபு இன்னது என்பதை வெளிப்படையாக எடுத்தியம்புகின்றார்.

1. சாகாத கல்வியே கல்வி.

2. ஒன்றே சிவம் என்ற அறிவே அறிவு.

3. மலம் ஐந்தும் வென்ற வல்லபமே வல்லபம்.

4. வேகாத காலாதி கண்டு எப்பொருளும் விளைய விளைவித்த தொழிலே மெய்த் தொழில்.

5. மேலே கூறப்பெற்ற நான்கையும் ஒருங்கே அடைந்து உலகமெலாம் அந்நெறியையும் பயனையும் அடையுமாறு எல்லாம் வல்ல சித்தாகி நிறைவான இன்பமாக இருத்தல்.

மேற் கூறிய ஐந்துமே தாம்பெற்ற சுத்த சன்மார்க்கத்தின் மரபு என இறைவன் தமக்கு உணர்த்தியதாக வள்ளலார் குறிப்பிடுகின்றார். இதனை,

''சாகாத கல்வியே கல்விஒன்றே சிவம்
தான் என அறிந்த அறிவே
தகும் அறிவு மலம் ஐந்தும் வென்ற வல்லபமே
தனித்த பூரண வல்லபம்
வேகாத காலாதி கண்டு கொண்டு எப்பொருளும்
விளைய விளைவித்த தொழிலே
மெய்த் தொழிலதாகும் இந்நான்கையும் ஒருங்கே
வியந்தடைந்து உலகம் எல்லாம்
மாகாதலுற எல்லாம் வல்ல சித்தாகி நிறை
வான வரமே இன்பமாம்
மன்னும் இது நீபெற்ற **சுத்த சன்மார்க்கத்தின்**
**மர**பென்றுரைத்த குருவே''

என்ற நடராஜபதி மாலை 28-ஆம் அருட்பாவினால் உணரலாம். இதுவே வள்ளலார் பெற்ற சுத்த சன்மார்க்க மரபு இன்னது எனத் தெளிவுறுத்தும் அருட்பா.

வள்ளலாருக்கு இத்தகைய நெறி வந்து அமையக் காரணம் என்ன என்ற வினாவுக்கு விடை கூறும் வகையில் ஓர் அருட்பா அமைந்துள்ளது.

உலகவர் துன்பம் கண்டு அழுததும், உலகத்துயிர்கள் இப்படி இப்படி வாழவேண்டும் என்று நினைந்து நினைந்து அழுததும் காரணமாகவே இந்நெறி வழங்கப் பெற்றது என்றும், வள்ளலாரின் அழுகையும் நினைவும் காரணமாக விளைந்த நெறியானது அவருக்கே முதன்முதலிற் சுதந்தரமானது என்றும் அவர் உலகத்தவருக்காக நினைந்தும் அழுதும் கேட்ட நெறியே அது என்றும் இறைவன் தமக்கு விளக்கியதாக வள்ளலார் எடுத்தியம்புகின்றார்.

''துன்பெலாந் தீர்ந்தன சுகம் பலித்தது நினைச்
சூழ்ந்தது அருள்ஒளி நிறைந்தே
**சுத்த சன்மார்க்க நிலை அனுபவம் நினக்கே**
**சுதந்தரமானது** உலகில்
வன்பெலாம் நீக்கிநல் வழியெலாம் நீக்கி மெய்
வாழ் வெலாம் பெற்று மிகவும்
மன்னுயிர் எலாங் களித்திட நினைத்தனை உன்றன்
மனநினைப்பின் படிக்கே
அன்ப நீ பெறுக''

என்று இறைவன் இன்புறத் திருவாக்களித்து என்னுள்ளே கலந்து இருந்தனன் என்பது நடராஜபதி மாலை 26-ஆம் அருட்பாவாகும்.

சன்மார்க்க நெறியின் கூறுகளை வகுத்தும் நெறிப்படுத்தியும் அமைப்பவன் அல்லது அமைத்தவன் இறைவனே எனினும், உலகத்து உயிர்களுக்காக வாழ்வு வேண்டும் என்று நினைக்கவும் நினைந்து உருகவும் கூடிய ஓர் அருளாளர் மூலம்தான் அதனைச் செயற்படுத்த வேண்டியிருக்கிறது. அத்தகைய நிலையில் தம்மை வளர்த்துக் கொண்டவர் வள்ளலார் என்று நாம் கொள்ளுதல் வேண்டும். மேலும் வள்ளலாரேயன்றி, அவருக்கு முன்னேயும் இவ்வாறு அழுது வேண்டியும் அதற்காக இறைவனை மன்றாடியும் நின்று கேட்டுப் பெற்று, இந்நெறியின் மூலத்தைத் தொடங்கியவர்களும் உண்டு. பின்னர், அந்நெறியை மூன்று படிநிலைகளில் வளர்த்தவர்களும் உண்டு. எனவே வள்ளலாருடன் நிறைவெய்தும் இந்நெறியின் தொடக்கமும் வளர்ச்சியும் யார் யாரால் செயற்படுத்தப் பெற்றன என்பதையும் உணர்தல் வேண்டும்.

## சன்மார்க்கம் - தொன்மைநெறி

சன்மார்க்க நெறியில் இருவகை நிலைகள் உள்ளன. வாழையடி வாழை என வந்த திருக்கூட்டம் வளர்த்த மரபுநிலை ஒன்று உண்டு. அவ்வாறே வள்ளலார் தமக்கேயுரிய தனித்தன்மைகள் பலவும் அமையுமாறு வகுத்தும், வளர்த்தும், முடித்து நிறுத்திய நிலை ஒன்றும் உண்டு. அவ்வாறாயின், வள்ளலார் முற்றாகப் புதிய ஒரு நெறியை இவ்வுலகில் நிலை நாட்டினார் என்று கூறுதலும், முன்னோர் கூறியவைகளையே வள்ளலார் எடுத்து இயம்புகின்றார் என்று கூறுதலும் பிழையானவைகளே.

சன்மார்க்க நெறி என்ற முழுமைக்குரிய பலநிலைகளை இறையருள் துணைக்கொண்டு முயன்று வளர்த்தவர்கள் பலர். வளர்ந்த நிலைகளைப் பேணிக்காக்கவும் விளக்கமுறுத்தி நெறிப்படுத்தவும் வேண்டிய மனித முயற்சியின் தடையால் சன்மார்க்க வளர்ச்சி நிலையில் ஒரு வகைத் தேக்க நிலை உருவாயிற்று. நீண்ட இடைவெளியும் பிறசமயங்களின் தாக்கமும் இணைந்த நிலையில் சன்மார்க்க நெறியானது வளர்ச்சி பெறவில்லை என்பதைவிட, அது ஒருவகையான மரண நிலையைத் தழுவிவிட்டது போலும் என்று கருதுமளவுக்கு அது தேக்கநிலை பெற்றுவிட்டது.

அந்நிலையில், முதல் நான்கு படிநிலை வளர்ச்சியையும் அதன் இறுதிநிலைப் பெருக்கத்தையும் இணைத்து ஒருமையில் சிந்தித்து, முன்னே அமைந்த வளர்ச்சியை முற்றாக விழுங்கி விடக் கூடிய குறை என்ன என்பதைக் கண்டு, அக்குறையை நீக்க முயன்று, முன்னுள்ள வளர்ச்சியையும் பின்னுள்ள பெருக்கத்தையும் பெற்றுத் தழைக்கும் வகையில், பழைமையை எழுப்பியும் புதுமையை இணைத்தும் அந்நெறியை முதலிலிருந்து இறுதிவரை ஒருமையின் நோக்கி, முழுமையை உள்ளத்தே கருதி ஒப்பநிறுத்தும் பணியை மேற்கொண்ட காரணத்தால் வள்ளலாரே இந்நெறியின் முழு உரிமை உடையவர் என்று ஒருசில ஆய்வாளர்கள் கருதியது ஒருவகையில் ஏற்புடைக் கருத்தே எனத் தோன்றும். ஆயினும், வள்ளலார் பொது நிலையில் சன்மார்க்கம் என அமைக்காமல், இறப்பொழிக்கும் சன்மார்க்கம் என்றும் திருக்கூட்ட மரபில் யான் ஒருவன் என்றும் அருளிய உரைகளின் அடிப்படையில் சிந்தித்தால் இந்நெறிக்கு ஒரு தொன்மை உண்டு என்பதை நாம் உணரலாம். இதனை வள்ளலார்,

ஆறாந்திருமுறையில், 'இனித்த வாழ்வு அருள்' என்ற தலைப்பில், ஒன்பதாம் அருட்பாவில்,

''துங்கம் உற்று அழியா நிலைதரும் இயற்கைத்
**தொன்மையாம்** சுத்த சன்மார்க்கச்
சங்கநின் றேத்தும் சத்திய ஞான
சபையவா அபய வாழ் வருளே''

என்று எடுத்துக் காட்டும் பகுதியில் அமைந்த 'தொன்மை' என்ற ஆட்சியை நோக்கி அருள் நிலையில் நின்று உணர்தல் வேண்டும்.

## வள்ளலாரின் இருவகைப்பணி

சன்மார்க்கம் இருவகை மரபுகளை உடன்கொண்ட ஒரு தொன்மை நெறி. அதன் தொடக்கத்தையும் படிநிலை வளர்ச்சிகளையும் தெரிந்து கொள்ளுதல் நமது கடமை. அத்துடன் வள்ளலார் நெறி இருவகைப் பணிகளைக் கொண்டது எனவும் அறிதல் வேண்டும்.

1. வள்ளலார் பணிக்கு முன்னுள்ள வளர்ச்சியை முற்றாகத் தடுத்து நிறுத்திய குறை என்ன என்றறிந்து நீக்குதல்.

2. முன்னுள்ள வளர்ச்சியில் இல்லாத அல்லது இலைமறை காயாக இருந்த புதுமையைத் தேர்ந்து தெளிந்து இந்நெறிக்கு வழங்குதல்.

குறை நீக்கம் என்ற வகையில் செத்தாரை 'எழுப்புதல்' என்பது அமைகிறது; நிறைவுறுத்தல் என்ற வகையில் இது பேரானந்தப் பெருவாழ்வு என நின்று பிறஉயிர்களுக்கும் எல்லாச் சித்திகளையும் வரையாது வழங்குதல் என அமைகிறது.

வள்ளலார் வளப்படுத்தியும் நெறிப்படுத்தியும் வழங்கிய நெறி ஒரு செந்நெறி. இதுவரையிலும் சமயங்களும் மதங்களும் வகுத்த பன்னெறிகளும் இறப்பை ஒழிக்காமல், பிறவியைக் கொடுக்கும் பவநெறிகள். ஆகையால், சாகாமையை - செத்தாரை எழுப்புதலை மூலமாகக் கொண்டு விளங்கும் இந்நெறியைப் பொதுநெறி என்றும், வான்புத்தமுது அருள்கின்ற சுத்த சன்மார்க்கத் தன்னெறி என்றும், அருட்பொதுநெறி என்றும், உத்தரஞான சிதம்பரநெறி என்றும் விளக்கியருளுவதை ஆய்வுமுறையிற் கண்டு தெளிக.

## 3. சன்மார்க்கமும் சாகாக்கலையும்

### முன்னுரை

வள்ளலார் அமைத்த 'சன்மார்க்க மரபு' என்பதன் விளக்கமும் வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபு என்பதன் விளக்கமும் இருவகை மரபு என்ற தலைப்பில் எழுதப்பெற்றன. இனி, வள்ளலார் என்மார்க்கம் எனத் தனித்துக் கூறும் வழியில் இருவகை அடிப்படைப் பேறுகள் உள்ளன என்று எடுத்துக் காட்டுகின்றார். அவை இறப்பொழித்தலும் சன்மார்க்கமும் என்பன. இறப்பொழிக்கும் சன்மார்க்கம் என்பதையே சன்மார்க்கமும் சாகாக்கலையும் என்ற தலைப்பாக அமைத்து அவை பற்றிய செய்திகள் இங்கே இணைக்கப் பெறுகின்றன.

'சன்மார்க்கம்' என்பது சத்+மார்க்கம் என்ற இருசொல் இணைந்த தொடர். அது தொன்மையானதே. சன்மார்க்கம் என்பது போன்ற சொற்களை எடுத்துவிட்டு, மக்கள் மனத்தில் எளிமையில் உணரக் கூடிய சொற்களாலேயே தம் கொள்கையை வள்ளலார் விளக்கியிருக்கலாமே என்று கருதுபவர்களும் உண்டு. வள்ளலாருக்கும் அது எளிமையானதே. ஆனால், வள்ளலார் எண்ணுவது வேறு மெய்ப்பொருளியல் துறையைச் சார்ந்தவைகளால் இன்று வழங்கும் கலைச்சொற்கள் திருவருள் வலத்தால் தோன்றியவை. இவைகளையும் இவை போன்றவைகளையும் 'திருவருள் பரவயிந்துவத் துரிய மொழி' என்று கூறுவது வள்ளலார் வழக்கு. இத்தகைய மொழிகள் அநந்த வகையான பொருள் வகைகளை உள்ளிட்டவை என்றும், இவை நம்மனோர் மொழிக்குரிய மாயை கலந்த நாதத்தால் வெளிப்படுத்தப் பெற்றனவல்ல என்றும் விளக்கும் மரபு நெறியுடையவர் வள்ளலார். ஆகையால், திருவருள் நெறியின் துணைக்கொண்டு, அம்மொழிகளையே பயன்படுத்தி, அம்மெய்ம்மொழிகளின் உள்ளுறைகளாக அமைந்துள்ள பொருள் நலங்களைத் தெரிதல் வேண்டும் என்ற கொள்கையுடையவர் வள்ளலார். பொருள்நலந்தெரிதல் என்ற அடிப்படையில் அம்மொழிகளையே பயன்படுத்துதல்தான் பெரிதும் பயன் விளைவிக்கும் என்று கருதினார் வள்ளலார்.

## சன்மார்க்கம் - பொருள் விளக்கம்

சன்மார்க்கம் என்ற கலைச்சொல்லுக்கு வள்ளலார் காலத்துக்கு முன்பேயே வரலாறும் பொருள்விளக்கமும் உண்டு. மனிதன் உறுதிப் பொருளை அடைதற்குரிய நால்வகை மார்க்கங்கள் உண்டு என்று பேசும் முறையில் அவைகளைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று பேசுவார்கள். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு வழிகளையே வேறொருவகையில் தாசமார்க்கம், சற்புத்ர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்று குறிப்பிடுவார்கள். இவ்விருவகை வழக்காறுகளையும் இணைத்துப் பார்த்தால் ஞானமார்க்கமே சன்மார்க்கம் எனப் பேசப்பெறுகிறது என்பது புலனாம். இக்கருத்தானது மக்கள் மன்றத்தில் வேரூன்றி நின்ற காலத்தில்தான் வள்ளலார் 'என்மார்க்கம்' என முழக்கம் செய்து கொண்டு வெளிவருகிறார். என்மார்க்கம் என்ற சங்கநாதம் முழங்கிக் கொண்டு வந்தவர் சன்மார்க்கம் என்ற சொல்லின் அடிப்படையில்தான் தன் மார்க்கத்தை விளக்க வேண்டும் என்ற நியதியை உடன்படுகிறார். இவ்வகையில், 'சன்மார்க்கம்' என்ற கலைச் சொல்லுக்குப் பொருள் விளக்கம் காணவேண்டிய அவசியம் உண்டாகிறது.

சன்மார்க்கம் என்பதற்கு மூன்று நிலைகளில் பொருள் விளக்கம் அமைத்துக் காட்டுகின்றார்.

## விளக்கம் - I

சன்மார்க்கம் என்ற சொல்லுக்கு விளக்கம் எழுதும் முறையை வள்ளலார் பலபடிநிலைகளில் மேற்கொள்ளுகின்றார். 'சன்மார்க்கம்' என்பதனுடன் பல சொற்களை அடைமொழிகளாகச் சேர்த்து விளக்கம் சொல்லுகிறார். சில அடைமொழிகளை முதலில் அனுமதித்த வள்ளலார் பின்னர் அவைகளை ஒதுக்கி விட்டு வேறு சில சொற்களை அமைக்கின்றார்.

சங்கத்தின் பெயர், ஞானசபையின் பெயர் முதலியவைகளை முதன்முதலில் அமைத்த முறைமையினின்று மாற்றிவிடுகிறார். அத்தகைய மாற்றங்களெல்லாம் அடைமொழிகளில் அமைந்தனவேயன்றி, முதன்மொழியாகிய 'சன்மார்க்கத்தில்' அமையவே இல்லை.

வள்ளலார் வடலூரில் சங்கம், சாலை, சபை என்ற மூன்று நிலையங்களை அமைக்கின்றார்கள். 1865ல் சங்கமும், 1867ல் சாலையும், 1872ல் சபையும் அமைக்கப்பெற்றன என்பது வரலாற்றாய்வாளர் முடிவு. 1865-முதல் 1872 வரையில் இடையில்

உள்ள ஆண்டுகளில் வழக்கிலிருந்த பெயர்கள் மாற்றம் பெறுகின்றன. 1865 முதல் வழக்கிலிருந்த பெயர்கள் முறையே

''சமரச வேத சன்மார்க்க சங்கம்

சமரச வேத பாடசாலை

சமரச வேத தருமச்சாலை''

என்பன. இவைகளே பின்னர்க் கீழ்க்கண்டவாறு மாற்றம் பெறுகின்றன.

''இன்று தொடங்கிச் சபைக்குச் ***'சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞானசபை'*** என்றும், சாலைக்குச் ***'சமரச சுத்த சன்மார்க்க சத்திய தருமச்சாலை'*** என்றும், சங்கத்திற்குச் ***'சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்'*** என்றும் திருப்பெயர் வழங்குதல் வேண்டும்''. இதனை வள்ளலார் ஒரு கட்டளையாகவே அமைத்து எழுதுகின்றார்கள். இப்பெயர்களும் கூட, பின்னர், ''சமரச சுத்தசன்மார்க்க சங்கம்'' என்றாற் போல இடையிலிருந்த 'சத்திய' என்ற சொல் விடுபட்டுப் போன நிலையில் வழக்கிலிருந்தமையையும் காணலாம். அவ்வாறு வழங்கும் வழக்கத்திலும் ஓர் உண்மை உண்டு.

'சன்மார்க்கம்' என்ற சொல்லோ, சத்தியம் என்ற சொல்லோ கட்டாயம் இருக்கும் என்பதே அவ்வுண்மை.

'சமரச சுத்த சன்மார்க்க சங்கம்' என வரும்போது சத்தியம் என்ற சொல் விடப்பெறுகிறது. சத்திய ஞானசபை, சத்திய தருமச்சாலை என்பவைகளில் சன்மார்க்கம் விடப்பெறுகிறது.

சன்மார்க்கம் என்ற சொல்லுடன் சத்தியம் என்ற சொல்லின் பொருளையும் இணைத்துக் காட்டும் முறையிலேயே அச்சொல்லாட்சி அமைக்கப் பெற்றுள்ளது என்பதை ஊன்றி உணர்வார் எளிதில் உணரலாம்.

இனி, வள்ளலார் சமரசவேதம் என்றோ பொதுவேதம் என்றோ ஒருநூல் எழுத எண்ணியிருந்தார் என்ற கருத்தையும் அறிஞர்கள் அடிக்கடி எழுதி வருவதைக் காணலாம். 'சன்மார்க்கம்' என்பது நெறி என்னும் பொருள்பட நின்றதாதலின், அந்நெறியை விளக்கும் நூலொன்று தேவை என எண்ணியிருக்கலாம். பொதுமையைப் பற்றிச்

சிந்தித்த வள்ளலார் அது வரம்பின்றியோடுதலின், அப்பொதுமையைச் சன்மார்க்கத்துக்கு அமைக்கும் விளக்கமாகவே அமைத்துக் கண்டுவிடலாம் என்ற கருத்தினாலேயே அவ்வாறு எழுதவில்லை.

மேலும் 'சன்மார்க்கம்' என்ற சொல்லைப் பற்றி எழுதும் விளக்கங்களே அத்தகைய பொதுமையை வரைந்து உணர்த்திவிடும் என்ற கருத்தினாலேயே அவர் சமரசவேதம், பொதுவேதம் என்ற பெயர்களில் தனிநூல் எழுத முற்படாதவரானார்.

மேலும், பொதுமையை உணர்த்தும் வேதம் என்பதோ, சமரச வேதம் என்பதோ தாமே நாட்டி அமைக்கும் நூல்களாக அமைபவை. பொதுமையை நூலால் உணர்த்த இயலாது என்பதையும், அதனை ஒருவகை உளவினால்தான் அறிய முடியும் என்ற உண்மையையும் வள்ளலார் எழுத்துகளாலேயே உணர முடிகிறது.

வள்ளலார் ''சமரச வேத சன்மார்க்கம்'' என்று அழைத்த காலத்தில் 'சன்மார்க்கம்' என்பதற்குக் கொண்ட பொருள் வேறு. அவ்வாறே 'சமரச வேதம்' என்பதும் ஒருசொல். அது எல்லாச் சமயங்களுக்கும் பொதுவான அறிவு நூல் என்ற பொருளில் எழுதப் பெற்றது. 'சமரசவேதம்' என்பது ஒரு நூல். அந்நூலின் முடிவை உடன் கொண்டவர்கள், மேற்கொண்ட மார்க்கம், அம்மார்க்கத்தில் செல்லுபவர்களின் கூட்டம் என்று விளக்கம் அமைத்தார். வரையறுத்துச் சொல்ல வேண்டுமென்றால் 'சமரச வேதம்' என்பதில் உள்ள சமரசம் வேறு; சமரச சுத்த சன்மார்க்கம் என்பதில் உள்ள சமரசம் வேறு.

வள்ளலாரின் எழுத்துருவங்களில் காணப்பெறும் அனுபவ வேறுபாடுகளை நுட்பமாக உணர்ந்தால்தான் இவ்வேற்றுமையை உணர முடியும். ஆயினும், நாம் அறிந்து கொள்ளும் வகையில் ஒருவகை வேறுபாட்டை அமைத்துக் கொள்ளலாம். 'சத்தியம்' என்பதைச் சமரசவேதம் என்ற கருவியினால் உணர முடியாது. சத்தியம் என்பது சமரசத்தைக் கடந்தது. ஆனால், சத்தியத்திற்குச் சமரசம் அந்நியமன்று.

மார்க்கங்கள் நான்கு. அவை தாசமார்க்கம்; சற்புத்திரமார்க்கம்; சகமார்க்கம்; சன்மார்க்கம் என்பன. இங்கே சன்மார்க்கம் என்று குறிப்பிடப் பெறுவதை வள்ளலார் நான்காவது மார்க்கம் என்று பொருள் கொள்ளும் வகையில் அமைக்கிறார்.

இக்கருத்தை மேலும் தெளிவுபடுத்த முற்படும் வள்ளலார் கீழ்க் கண்டவாறு குறிப்பிடுவதையும் காணவேண்டும்.

''சமயவாதிகளும் மதவாதிகளும் மார்க்கங்களை வரையறை செய்யும் போது சரியை, கிரியை, யோகம் என மூன்றும் (இப்பிரிப்புக் குரியவர்கள் சமயவாதிகள்) கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என மூன்றும் (இப்பிரிப்புக்குரியவர்கள் மதவாதிகள்) அமைத்தார்கள். சமயவாதிகள்; குறிப்பிட்ட மூன்றற்கும் மதவாதிகள் அமைத்த மூன்றற்கும் அப்பாற்பட்டது என்ற பொருளில் சன்மார்க்கம் என்பதைக் கொள்ளவேண்டும் என்று கூறுகிறார்.

வள்ளலார் இவ்வாறு அமைத்ததன் உட்கருத்து என்ன ? சமயவாதிகள் அமைத்த மூன்று மார்க்கங்களையும் மதவாதிகள் அமைத்த மூன்று மார்க்கங்களையும் கடந்த ஒருமார்க்கமே ''சன்மார்க்கம்''. சன்மார்க்கம் என்பதன் விளக்கம் இதுவே.

இனி **இதனை வேறு ஒரு வகையாகவும் விளக்கிக் கூறியுள்ளார்.**

சமயவாதிகள் கண்ட சமய சன்மார்க்க அனுபவங்களையும் மதவாதிகள் கண்ட மத சன்மார்க்க அனுபவங்களையும் கடந்த ஒரு நிலையே சன்மார்க்க அனுபவநிலை என்று விளக்கியுள்ளார் வள்ளலார். இதை விளக்கும் போது வள்ளலார் நால்வகை மார்க்கங்களை வரிசைப்படுத்தியிருக்கும் வரியை எடுத்துக் காட்டி முடிக்கிறார்.

''சுத்த சன்மார்க்கம் என்பது தாசமார்க்கம், சற்புத்ரமார்க்கம், சகமார்க்கம் ஆகியவைகளைக் கடந்தது ஆயினும் அவை மூன்றும் சுத்த சன்மார்க்கத்தில் இல்லாதன அல்ல'' என்பது வள்ளலார் கூறும் விளக்கம்.

இந்த விளக்கத்தின் மூலம் சன்மார்க்கம் என்பது தனக்கு முன்னுள்ள மூன்று நிலைகளைக் கடந்தது என்பதும், நாலாவதாக நின்றது என்பதும், நாலாவதாயினும் முன்னுள்ள மூவகை நிலைகளையும் உட்கொண்டது என்பதும் நாம் ஏற்க வேண்டியவை.

## விளக்கம் - II

சன்மார்க்கம் என்பதற்கு **'உண்மை நெறி'** என்று விளக்கம் கூறுகிறார். இதனை வள்ளலார் ஐந்து வகையில் விளக்கிக் காட்டியிருக்கிறார்.

*1.* சன்மார்க்கம் என்பது சத்+மார்க்கம் எனக் கொள்ளுக. 'சத்' என்ற சொல்லுக்கு இயற்கை உண்மை என்பது பொருள். சத்மார்க்கம் என்றால் சத்தியமார்க்கம், **உண்மை நெறி** என்று பொருள்படும்.

2. சன்மார்க்கம் - **உண்மையில் நிற்கும் நெறி.** சர்வ சத்தியும் சித்தியும் உடைய தனித் தலைமைப் பதி ஒருவர் உண்டு என்ற உண்மையில் மாறாது நின்று, உண்மை அன்பால் வழிபாடு செய்து, உண்மை முழுமைச் சித்தியைப் பெறுதல் என்ற விளக்கத்தின் அடிப்படையில் சன்மார்க்கம் என்பது உண்மை நெறி எனப்பெற்றது.

இங்கே வள்ளலார் விளக்க எண்ணும் கருத்தினைத் தெளிவாக உணர்தல் வேண்டும். தனித்தலைமைப் பதி ஒருவரே. அவரே அனைத்தையும் உடையவர்; அனைத்து அனுபவங்களுக்கும் பொதுமை உடையவர். சமய மார்க்க அனுபவங்களும் மதமார்க்க அனுபவங்களும் அத்தகைய பொதுமைத் தலைமைப் பதி ஒருவர் உண்டு என்று கூறாமல், தத்தம் சமய முடிவுகளில் நிற்கும் கடவுளர்களையே உண்டு என்று கூறின. ஆனால், பொதுமைத் தலைமைப் பதியென ஒருவரே இருக்க முடியும். அப்பதிக்கடவுள் ஏனையோர் கூறிய கடவுளர்களைக் கடந்த ஒன்று. ஆனால், அப்பொதுமைக் கடவுள் ஏனைய கடவுளர்களுக்கு அந்நியமானது அன்று என்பதே வள்ளலார் கருத்து.

எனவே, சமய மார்க்க அனுபவங்களும் மதமார்க்க அனுபவங்களும் வரையறை செய்யும் கடவுளர்கள் பொதுமைத் தலைமைப் பதியானவர் கொடுக்கும் முழுமையான சர்வ சத்திகளையும் சித்திகளையும் கொடுக்க இயலாதவர்கள். பொதுமைத் தலைமைக் கடவுளாம் பதியே பூரண இயற்கை உண்மைக் கடவுள். மற்றைக் கடவுளர்கள் அதன் ஏகதேசங்களே. பொதுமைக் கடவுளே பூரண (முழுமையான) இயற்கை உண்மைத்தலைமைப் பதிக்கடவுள். அதுவே உண்மை. அதை அடைதலே உண்மை நெறி என்பது சன்மார்க்கம் என்பதன் பொருள்.

3. சன்மார்க்கம் - **முழு உண்மைப் பொருளை அடையும் உண்மை நெறி.** முழு உண்மைப் பொருள் என்பது உருத்திரபாகம், மகேசுரபாகம், சதாசிவபாகம் என்ற மூன்று பகுதிகளை இணைத்த ஒன்று. இதுவே சாகாக் கல்வியில் அனுபவ உண்மைப் பொருளாக

அமையும். சாகாக்கல்வியின் மூலம் அக அனுபவம் அமையும். அதன் மூலம் அப்பொருளின் நீக்கமற்ற சொருபஞானம் என்பது அமையும்.

உண்மைப் பொருள் பற்றிய உண்மை ஞானத்தை அக அனுபவம் எனப் பெறும் உண்மை மார்க்கத்தால் பெறும் முறையை உடையது ஆதலின் சன்மார்க்கம் உண்மை நெறி எனப் பெற்றது.

4. சன்மார்க்கம் என்பது சத்மார்க்கம்; நித்திய மார்க்கம். சத்மார்க்கம் என்னும் பொருட்கு அர்த்தம் நான்கு. அது பூர்வம், பூர்வ பூர்வம், உத்தரம், உத்தரோத்தரம் என நான்காம். அவையெல்லாம் சுத்தசிவ துரியாதீத நிலை பெறில் விளங்கும். சத் என்பது பரிபாஷை. அது அனந்த தாத்பர்யங்களைக் கொண்டு ஓர் வாக்கிய பதமாய் நிற்பது. மார்க்கம் - வழி. **சத்தென்னும் பொருளின் உண்மையைத் தெரிவிக்கிற மார்க்கம்.** ஆதலால் எவ்வகையிலும் உயர்வுடையது. பாவனாதீத அதீதம், குணாதீத அதீதம், லட்சியாதீத அதீதம், வாக்கியாதீத அதீதம் ஆகிய சுத்த சன்மார்க்கம்.

5. சன்மார்க்கம் - **உண்மை நிலையை அடைவிக்கும் நெறி; உண்மை நெறி.**

முன்னே சொல்லப் பெற்ற நான்கு வகையான விளக்கமும் 'சத்' என்ற சொல்லால் உணர்த்தப் பெறும் கடவுள் பொதுமைத் தன்மை முழுமைத் தன்மை உடையவர் என்ற அடிப்படையிலேயே அமைந்த விளக்கங்கள். இப்பகுதியில் - இந்த ஐந்தாவது பகுதியில் கூறப் பெறும் விளக்கம் வள்ளலாரின் கொள்கைக்கே உயிர் நாடியாக அமைந்த விளக்கம் எனக் கொள்ள வேண்டும்.

''ஆன்மாவானது தன் உண்மைத் தன்மையில் நிற்பதன் மூலம் கடவுளின் உண்மைத் தன்மையில் கலந்து, என்றும் அழியாத உண்மை நிலையை அடையலாம். எனவே, சன்மார்க்கம் என்பது உண்மை நிலையை அடைவிக்கும் உண்மை நெறி என்பதாம்'' இது வள்ளலார் கூறும் விளக்கம்.

ஆன்மாவானது தன் உண்மைத் தன்மையில் நிற்றல் என்பதே சன்மார்க்கம். ஆன்மாவானது தன் உண்மைத் தன்மையில் நின்றால், கடவுளின் உண்மைத் தன்மையில் கலக்கலாம்; என்றும் அழியாத உண்மை நிலையை அடையலாம் என இரண்டு பேறுகளைச் சுட்டுகின்றார்.

ஆன்மாவானது சில நெறிகளைப் பின்பற்றி, அதன்மூலம் அடைய வேண்டிய பேறுகளை அடைதல் என்பதைப் பொது விளக்கமாக அனைத்துச் சமயவாதிகளும் மதவாதிகளும் விளக்கம் கூற, வள்ளலார் சன்மார்க்கம் என்பது ஆன்மாவானது தன்னுண்மைத் தன்மையில் நிற்றல் என்பதே என்று விளக்கம் கூறியது ஒருவகைப் புதுமை.

அடுத்து விளக்கம்பெற வேண்டியது ஆன்மாவின் தன்னுண்மை நிலை என்பது என்ன ? என்பதே. ஆன்மாவின் தன்னுண்மை நிலை என்பதனை அறிய வேண்டுமாயின் கடவுளின் தன்னுண்மை நிலையை அறிதல்வேண்டும். ஏனெனில், ஆன்மாவானது கடவுளின் ஏகதேசம் என்பது வள்ளலாரின் மெய்ப்பொருட் கொள்கை. ஏகதேசம் என்றால் சிறியது என்பதே பொருள்.

''திருவருண் மெய்ம்மொழி'' என்ற தலைப்பில் வள்ளலார் கடவுளைப் பற்றிய இலக்கண வரையறை செய்கிறார்.

''இயற்கையில் தானே விளங்குகின்றவராய் உள்ளவர் என்றும் இயற்கையில் தானே உள்ளவராய் விளங்குகின்றவர் என்றும் ......... என்றும் சத்திய அறிவால் அறியப்படுகின்ற உண்மைக் கடவுள் ஒருவரே, அகம் புறம் முதலிய எவ்விடத்தும் நீக்கமின்றி நிறைந்த சுத்த மெய்யறிவு என்னும் பூரணப் பொது வெளியில், அறிவாரறியும் வண்ணங்கள் எல்லாமாகி விளங்குகின்றார்'' என்பதே அவ்வரையறை.

இனி, வள்ளலார் சத்து, சித்து, ஆனந்தம் என்ற சொற்களின் அடிப்படையில் கடவுள் தன்மையை விளக்க முற்படுவதாகவும் அவ்வாறு அமைக்கும்போது சத் என்ற சொல்லுக்குத் தன் இயற்கை உண்மை வெளி என்றும், சித் என்பதற்குத் தன் இயற்கை விளக்கம் - ஒளி என்றும், இன்பம் என்பதற்கு இயற்கைத் தன் இன்பம் என்றும் வள்ளலார் விளக்கம் கூறுகிறார் என்று கொள்வது ஒருவகை மரபாகக் கருதப் பெற்று வருகிறது.

வள்ளலார் சிருட்டி ஞாயம் என்ற பகுதியைப் பேசும் போது 'பரமாகாசம்' என்ற ஒன்றைப் பேசுகின்றார். அது வேவெளியெனப்படும், வெளி என்ற ஒன்றற்குரிய பொருட்டன்மை என்ன ? என்ற வினாவை எழுப்பினால், ஒலியை அதன் குணம் என்று

கொள்ள வேண்டியிருக்கிறது. வான்கலத்தல் என்றும், சுத்த வெளியாக்கிக் கலத்தல் என்றும் வள்ளலார் பேசுவதை நாம் சிந்தித்தல் வேண்டும். அடுத்து, ஆகாயத்தில் அனாதியே நிறைந்திருப்பது காற்று என்று குறிப்பிடுகின்றார் வள்ளலார். ஆகாயம் போன்றே காற்றும் ஒரு பொருள். அது விரைந்து பரவுவதைக் குணமாகக் கொண்டது. இந்நிலையில் 'சத்' என்ற சொல்லால் குறிக்கப் பெறும் இயற்கையுண்மை என்பதன் பொருளாக வள்ளலார் என்ன கருதுகிறார்?

சூரியன் ஒரு நெருப்பு உருண்டை. நெருப்பாக இருக்கிறது; ஒளியால் விளங்குகிறது. ஒருபொருள் எந்த ஒன்றன் மூலம் தன்னுடைய இருப்பைத் தெரிவித்துக் கொள்ளுமோ அதுவே அப்பொருளின் இயற்கை உண்மை எனக் கொள்ள வேண்டும். அவ்வகையில் கடவுள் தாம் இயற்கையில் உள்ளவராய் விளங்குபவர்; விளங்குபவராய் உள்ளவர் என்று கூறும் வரையறையின் மூலம் எல்லாப் பொருள்களும் உளதாதல் வேண்டும் என்று உள்ளவராகவும், எல்லாப் பொருள்களும் விளங்குதல் வேண்டும் என்று விளங்குபவராகவும் உள்ளார்என வள்ளலார் கூறும் தொடருக்கு விளக்கம் அமைத்துக் கொள்ள வேண்டும். எல்லாப் பொருளும் உளதாதல் வேண்டும் என்பதும் எல்லாப் பொருள்களும் விளங்குதல் வேண்டும் என்பதும் ஆகிய இரண்டு கருத்தமைவுகளையும் இணைத்தால் வருவதே ''அருள்'' என்பது. அருளானது தன்னளவில் இயற்கை உண்மையில் நிற்றல் என்பதே 'சத்' எனப்பெறும் உண்மை நிலை. அதனாலேயே, முக்குணங்களுள் ஒன்றான 'சத்துவம்' என்பதற்குத் ''தானாக நிற்றல் சத்துவம்'' என்று விளக்கம் எழுதிக் காட்டினார் வள்ளலார்.

அருளானது தன்னளவில் தனித்து, தானாக நிற்றல் என்பதே 'சத்' எனப்பெறும் கடவுள் நிலை - தன்னுண்மை நிலை. அது பூரணமானது; முழுமையானது. ஆன்மாவானது அதனுடைய ஏகதேசம். அப்படியானால் அருளின் ஏகதேசநிலை; சிறிய நிலையே ஆன்மாவின் தன்னுண்மை நிலை. அது தயவு அல்லது கருணை என்பதே.

ஆன்மாவானது தன்னுண்மை நிலையில் நிற்றல் என்பது சன்மார்க்கம் எனின், ஆன்மாவானது சீவகாருண்யச் செயலில் நிற்றல் என்பதே பொருளாகும். இதனாலேயே ஆன்மாவானது தன்னுண்மை

நிலையில் நின்றால், கடவுளின் உண்மை நிலையை அடைய முடியும் என்றும், கடவுளின் உண்மைத் தன்மையில் கலக்கமுடியும் என்றும், அப்படி நிற்றலே என்றும் அழியாத நிலை என்றும் குறிப்பிட்டருளினார்.

## சத்திய தருமச்சாலை

வள்ளலார் வடலூர்ப் பெருவெளியில் அமைத்த நிலையங்களுள் முக்கியமானது தருமச்சாலை. அதற்குச் சத்திய 'தருமச்சாலை' என்பதே பெயர். பசிக்கு உணவளிக்கும் இடமாக விளங்கிய அந்நிலையத்துக்குத் தருமச்சாலை என்ற பெயர் அமைக்கக் காரணம் என்ன ?

இவ்வினாவுக்கு உரிய விடையாக வள்ளலாரின் ''தருமம் என்பதன் பொருள்'' என்ற தலைப்பில் வரும் உபதேசப் பகுதியை எடுத்துக் காணுதல் வேண்டும்.

''தர்மம் என்பதன் பொருள் இதின் உண்மை; அதின்தன்மை; தன்மையென்பது அதின் சுபாவம். சுபாவம் என்பது இயற்கைக் குணம், அது என்பது ஆன்மா ஆதலால் ஆன்மாவுக்கு இயற்கைக் குணம் தயை, ஆன்மாவின் இயற்கை என்பதே தர்மத்திற்குப் பொருள். ஆன்ம இயற்கையோடு இருந்தால் சிவமாகலாம். அருள் வெளியாகிய ஆன்ம இயற்கையால் சிவானுபவத்தைப் பெறுவது உண்மை''.

எனவே, 'சத்திய தருமம்' என்பது ஆன்மாவானது தன் இயற்கை உண்மைக் குணத்தில் - தயையில் நிற்பதற்கென அமைக்கப்பெற்ற நிலையம் என்பதே பொருளாக அமைகிறது.

அருள் என்ற இயற்கைத் தன் உண்மை நிலையே கடவுள்; தயவு என்ற இயற்கைத் தன் உண்மை ஏகதேசமே ஆன்மா எனப்பொருள் கொள்ளல் வேண்டும்.

## மெய்ப்பொருளியல் கொள்கையில் புதுமை

உயிரின் இயற்கைக் குணம் உணரும் தன்மைத்து. பரம்பொருள் சித்சொரூபம். ஞான வடிவாகிய பரம் பொருளை ஞானத்தால் அறிதல் வேண்டும் என்பது சைவசித்தாந்தம். திருவருட்பயன் என்ற சாத்திர நூலை அருளிய உமாபதி சிவாசாரியார் மெய்கண்ட சாத்திரங்களிலேயே பல புதுமைகளை இணைத்தவர்.

உயிருக்கும் உடலுக்கும் உள்ள உறவை வெளிப்படுத்தும் போது உடலானது உயிருடன் இணைந்து அத்வைத நெறியில் நின்றதால் வாழும் தன்மையைப் பெற்றது; உயிரானது உடலோடு அவ்வாறு நின்றமையால் உணரும் தன்மையைப் பெற்றது என்று பொருள்படும்

ஊன் உயிரால் வாழும் ஒருமைத்தே ஊனொடுயிர்
தான் உணர்வோடு ஒன்றாந்தரம்

என்ற 54-ஆம் குறட்பாவினை அமைத்தார். ஆயினும், வள்ளலார் திருவள்ளுவரின் தெய்வீக மொழிக்கு ஆக்கம் அளிக்கும் வகையில் உயிர்க்கும் உடம்புக்கும் அமைந்த தொடர்பே அன்பை அனுபவத்தில் செயற்படுத்தி அனுபவிக்கத்தான். அன்பே உயிரின் இயற்கைக் குணம் என்பதனால்,

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்!

என்று அமைத்துக் காட்டுவாராயினர். பிற உயிர்களிடத்துக் கருணை காட்டுதல், அன்பு காட்டுதல் என்ற செயல்களின் மூலமாகவே உயிரின் இருப்பு உணரப் பெறுகிறது என்பது திருவள்ளுவர் கொள்கை. அதனை முதன் மொழியாகக் கொண்டால், உயிரானது தன்னுண்மை நிலையில் நிற்றல் என்பது அன்புடைமைக்கு இலக்காக நிற்றல் என்பதாகவே முடியும். இதனைத் திருவள்ளுவரின்

''அன்பின் வழியது உயிர்நிலை''

''அன்போடு இயைந்த வழக்கு என்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு''

என்ற திருக்குறட்பாக்களோடு இணைத்துப் பொருள் காண வேண்டும்.

எனவே, திருவருள் என்ற பண்பே பொருளாக அமைந்து இருந்தது என்ற பொருளின் பூரண இயற்கைவிளக்கம் எனக் கடவுளுக்கும் அதன் ஏகதேசம் எனக்கொண்டு ஆன்மாவின் இயற்கை விளக்கத்தைச் சீவகருணைக்கும் கொள்ளுதல் வேண்டும்.

வள்ளலார் குறிப்பிடும் கடவுள் என்பது அருளே. ஏனைச் சமயத்தவர்கள் அருளை ஒரு சத்தியாகக் கொள்ளும் நிலையையே மேற்கொண்டார்கள்.

இனி, வள்ளலார் குறிப்பிடும் இயற்கை உண்மை என்பது வெளி என்றும், இயற்கை உண்மை விளக்கம் என்பது ஒளி என்றும், அதுவே அருட்சத்தி என்றும், பின்னர் அதுவே அறிவு என்றும், சத் என்பது, வெளியையே குறிக்கும் என்றும், சித் என்பதே அருட்சத்தி என்றும், அறிவு என்றும் விளக்கம் பெறும் என்றும் அறிஞர்கள் கருதியுள்ளனர். இவ்வாறான சிக்கல்கள் எழாமலிருக்கவே வள்ளலார்

''இயற்கையில் தானே விளங்குகின்றவராய் உள்ளவர்'' என்றும்

இயற்கையில் தானே உள்ளவராய் விளங்குகின்றவர்'' என்றும்

திருவருள் மெய்ம்மொழியில் கூறி விளக்கியிருப்பதை உற்று நோக்கியுணர்தல் கடன்.

எனவே 'சன்மார்க்கம்' என்பதற்குத் தன்னுண்மைப் பண்பில் நிற்கும் முறை என்றும் தன்னுண்மைப் பண்பில் நிற்றலால் கடவுளை அடைய முடியும் என்றும் வகுத்துரைத்தார் வள்ளலார்.

இவ்வடிப்படையிலேயே சிறியதைக் கொண்டு பெரியதைப் பெறமுடியுமேயன்றி, வேறு எந்த ஒன்றாலும் பெறமுடியாது எனவும் வகுத்துரைத்தார்.

ஆன்மாவானது தன்தருமத்தில் - தன்னதன் பண்பில் நிற்றல் என்பதே சத்திய தருமச்சாலை என்ற பெயராக நின்றது என்பதையும் உணர்தல் வேண்டும். இதனாலேயே 'சத்துவம்' என்பதற்குத் **''தானாக நிற்றல் சத்துவம்''** என விளக்கம் எழுதினார் வள்ளலார்.

சுருங்கக் கூறின் சன்மார்க்கம் என்பதனைத் திரு அருள் நெறி எனக் கொள்ளலாம். ஆனால், அருள் என்பதாக ஒன்று எங்கோ இருக்கிறது எனக் கொள்ளாமல் சீவர்களின் கருணை அல்லது தயவு என்பதே அருளின் சிறியநிலை. எனவே ஆன்மாவானது தன் இயற்கைப் பண்பில் நின்றால் அதன் முழுமையை அடைந்துவிட முடியும். ஆன்மாவானது கடவுளை அடைதல் என்பது ஏகதேசமானது பூரணம் என்ற முழுமையை அடைதல் என்பதே. இதுவே, சமய, மத, அந்தங்கள் கடந்த பொதுமையும் சமரசமும் இணைத்த கொள்கையாகும் எனக் கொள்ளல் வேண்டும். அருள்நெறி என்பதே அனைத்துச் சமயங்களுக்கும் பொதுமை நெறியாக அமைவது, அதுவே 'சத்' என்னும் உண்மை நெறி.

## விளக்கம் - III

சன்மார்க்கம் என்பதற்குக் கூறப்பெற்ற இருவகை விளக்கங்கள் மேலே காட்டப் பெற்றன. மூன்றாவதாக ஒருவகை விளக்கத்தையும் வள்ளலார் அமைத்துக் காட்டுகின்றார்.

மூன்றாவது வகையான விளக்கத்தில் சன்மார்க்கம் என்பதைச் சத்+மார்க்கம் எனப் பிரித்து, சத்துவகுண சம்பந்தமுடைய மார்க்கம் என்று உரை கூறுகின்றார். இவ்வாறு வள்ளலார் கூறுவதற்குக் காரணம் சமய, மத வாதங்களின் அமைப்புநிலைகளை உடன் கொண்டு அவைகளை இணைக்கும் முறையில் இத்தகைய விளக்கம் அமைக்கின்றார்.

சன்மார்க்கம் என்பதற்குச் சத்தியதரும நெறி; உண்மைப் பொது நெறி என்றெல்லாம் விளக்கம் அமைத்து, அது அருள்நெறியே என்று வரையறை செய்துவிட்ட பிறகு இத்தகைய விளக்கமும் தேவையா என்று வினா எழும்.

சமயவாதிகளும் மதவாதிகளும் சத்துவகுண வாச்சிய, லட்சிய அனுபவ விளக்கங்களாக அமைத்த சமயங்கள் மதங்கள் ஆறந்தங்கள் ஆகியவைகளெல்லாம் தத்தம் நிலைகளில் பொதுமை நெறிகளாக நிற்கும் தன்மையுடையவைகள் அல்ல; அவையெல்லாம் அருள்நெறி எனப்பெறும் பொதுமை நெறிக்கு அந்நியம் ஆனவைகள் அல்ல, அவைகள் இங்கே சமரசப்பட்டு மருவும் அல்லது மறுத்து நின்று சுத்தமாகும் என அவைகளை இப்பொதுமை நெறியில் சமரசப்படுத்திக் காட்டவே இத்தகைய மூன்றாவதொரு விளக்கத்தையும் வள்ளலார் உடன்படுகிறார்.

சன்மார்க்கம் என்பது அருள்நெறி என அமைத்துவிட்டால் அது ஒரு தனிக்கொள்கையாக அமைக்கப் பெற்றுவிடும். அருள்நெறியின் பொதுமையும் ஏனைய மார்க்கங்கள் ஏகதேசங்கள் என்ற சிறுமையும் மக்களால் உணரப் பெறாமலேயே நின்று விடும்.

### சத்துவகுண சம்பந்தம் ஏன் ?

சத்துவம், இராஜசம், தாமஸம் என்ற மூன்று குணங்கள் உண்டு ''தானாக நிற்றல் சத்துவம். இராகத் துவேஷாதிகளோடு கூடியது இராஜசம். ஜீவஹிம்சை செய்தல், சோம்பல், நித்திரை முதலியன

தாமஸம். ஆகையால் இயற்கையாகிய சத்துவத்தோடு கூடிச் செயற்கையாகிய ராஜச தாமஸத்தைச் சிறுகச் சிறுக நீக்க வேண்டியதில் சதா ஞாபகம் செய்ய வேண்டியது'' என்பது வள்ளலாரின் விளக்கம். இதையும் சன்மார்க்கம் என்பதற்குச் சத்துவகுண சம்பந்தம் உடையது என்ற தலைப்பில் எழுதப் பெறுபவைகளையும் இணைக்கக் கூடாது. சத்துவகுண சம்பந்தம் உடையது எனக்காட்டி, சமய, மத உண்மைகளை விளக்க முற்பட்டது சமய மத வாதிகளின் செயல், சமய, மதவாதிகளின் விளக்கங்களின் அடிப்படையிலேயே சமய, மத அனுபவங்களை இணைத்து, அவைகளைச் சமரசம் என்றும் சுத்தம் என்றும் அடைமொழிகளை அமைத்துக் காட்டி, அவைகளை மருவி உயர்ந்தும், கடந்தும் விளங்குவது சன்மார்க்கம் என விளக்கிக் காட்டினார் வள்ளலார்.

சத்போதம், சத்கர்மம், சத்சங்கம், சத்காலம், சத்விசாரம் என்றாற் போல வருவனவெல்லாம் சத்துவகுண சம்பந்தம் உடையவை. சத்துவ குணத்தின் தொடர்புடைய குணங்களாக இருப்பவைகள் கொல்லாமை, பொறுமை, சாந்தம், அடக்கம், ஐம்புலனடக்கம், சீவகாருண்ணியம் முதலியன. கொல்லாமை முதலிய குணங்களை ஒருவன் தனித்தனியே கடைப்பிடிக்க முடியும். அவ்வாறில்லாமல் கொல்லாமை முதலிய குணங்கள் சத்துவகுணத்தைமுலமாகக் கொண்டவைகளே எனக் கருதுவானானால், அவன் சத்துவகுணத்தின் வாச்சியார்த்தம் உணர்ந்தவன் எனப் பெறுவான். பின்னர், அவன் வாச்சிய அனுபவம் பெறுவான். அப்போது கொல்லாமை முதலியவைகளைச் சத்துவகுணத்தின் அங்கங்கள் எனக் கருதுவான். இறுதியில், சத்துவகுணத்தின் சொரூப அனுபவம் பெறுவான். இவன் சகுண நிலையில் நின்றவன். வள்ளலார் வாக்கின்படி இவன் **சமய சன்மார்க்கி.**

சத்துவ குணத்துக்கு லட்சியப் பொருள் கொள்பவன் - குறிக்கோட்பொருள் கொள்பவன் சத்துவ குண விளைவுகள் எனப் பெறும் பலபடிநிலைகளைக் கடந்து சத்துவகுண, நிர்க்குணக் குறிக்கோளை அடையும் நிர்க்குண லட்சியவாதி. இவனை வள்ளலார் **சமயாதீத மத சன்மார்க்கி** என்று கூறுகிறார்.

இங்கே கூறப்பெற்ற இரண்டு நெறிகளில் சன்மார்க்கம் வள்ளலாரால் வகை செய்யப்படுகிறது. முன்னே உள்ளது சமய

சன்மார்க்கம்; பின்னே உள்ளது மதசன்மார்க்கம் அல்லது சமயாதீத மதசன்மார்க்கம்.

## பொருள் வரையறை செய்யும் முறை

பலவாறாக விரிந்து கிடக்கும் பொருள் நலங்களைத் தரும் ஒரு சொல்லிற்கு இதுதான் உண்மைப் பொருள் என்று வரையறை செய்ய வேண்டுமானால் அதற்குக் கையாள வேண்டிய முறை என்ன என்பதையும் வரையறை செய்கிறார் வள்ளலார்.

உபாயமுறை, உண்மை முறை என்ற இருமுறைகளைக் கூறுகிறார். உபாயமுறையில் வகரத்தால் முடிப்பதும் தகரத்தால் முடிப்பதும் என இருவகைகளை அடக்குவார். எந்த ஒரு பொருளையும் உப்பு முதலியவைகளின் கூட்டு என்று கூறி முடிப்பது வகர வித்தை. மேலும் ஒஷதிகளின் பேதம் என்றும் ஐம்பூதங்களின் பேதாபேதப் பிணைப்பு என்றும் இவ்வாறு தகர வித்தையில் முடிப்பார்கள். இவை சித்தர்களும் காயகல்பம், காயசித்தி முதலியவைகளை வரையறுத்த காய சித்தர்களும் கைக் கொண்ட முறை என்றும் இவ்வாறாய உபாயமுறை சன்மார்க்கத்துக்கு ஒவ்வாது என்றும் விலக்கி விடுகிறார்.

அக அனுபவமே உண்மை முறை. அதுவே சொருப ஞானம் எனப் பெறும் உண்மை ஞானத்தைத் தரும். சன்மார்க்கத்துக்கு அக அனுபவமே மூலம். அனுபவ உண்மையின் அடிப்படையில் பொருள் உண்மையை வரையறை செய்வதால் அதுவே உண்மைநெறி - உண்மை மார்க்கம் - சன்மார்க்கம்.

## பொதுமையும் தனிமையும்

பொதுமையின் மூலமாக இணைத்தலும் தனிமையின் மூலமாகச் சிறப்புடையதாக்குதலும் இருவகை ஆய்வு நெறிகளே.

பொதுமையின் மூலம் பலகொள்கைகளை - பலநெறிகளை இணைக்க முற்பட்டபோது 'சமரசம்' என்ற சொல்லாட்சி மலர்ச்சியும் வளர்ச்சியும் பெற்றது.

''வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே''

என்பது தாயுமானவர் வாக்கு. வள்ளலார் காலத்துக்கு முற்பட வாழ்ந்த தாயுமானவர் வேதாந்தம் சித்தாந்தம் என்ற இரண்டையும் இணைத்துச் சமரசம் கண்டார். சமரச நிலையை நன்னிலை என்றும் பாராட்டுகிறார்.

பொதுமையை வரவேற்றது போலவே தனிமையை வரவேற்று வாழ்த்திய நிலையும் உண்டு. 'அத்வைதம்' என்ற சொல்லாட்சியின் மூலமாகவே தத்தம் மெய்ப்பொருட் கருத்துகளை விளக்கிய தத்துவ ஞானிகள் பலரைப் பெற்ற பெருமையுடையது இந்தியநாடு. சைவ சித்தாந்தம் தம் கொள்கையின் தனிச் சிறப்பை எடுத்து விளக்குவதற்காகவே ''சுத்த அத்வைதம்'' என்று தம்மை வரையறை செய்து கொண்டது.

> ''பொய்கண்டார் காணாப் புனித மெனும் அத்துவித மெய்
> கண்டார்''

என்று முழக்கமிடும் தாயுமானவர் வாக்கும் இச்செய்தியை வலியுறுத்தும்.

இவ்வாறு பொதுமைக்குச் சமரசமும், தனிமைக்குச் சுத்தமும் மெய்ப் பொருளியலில் பெருவழக்குடையனவாக இருப்பினும், இவ்விரண்டு சொற்களின் அடிப்படையிலேயே வள்ளலார் சன்மார்க்க இணைப்பு விளக்கம் அமைக்கிறார்.

## வள்ளலார் அமைக்கும் சமரசமும் சுத்தமும்

சமரசம், சுத்தம் என்ற இரு சொற்களும் தத்துவ உலகில் வள்ளலார் காலத்துக்கு முன்பே பயிலப் பெற்று வந்தவை. அதே சொற்களை வள்ளலார் அளவையியல் விதிகளை அமைத்துக்காட்டி விளக்குகின்றார்.

> ''மருவச் செய்து உயர்ந்தது சமரசம்''
> ''மறுத்துக் கடந்தது சுத்தம்''

என்பன வள்ளலார் அமைக்கும் விளக்கங்கள். இணைந்து நிற்கக் கூடியவைகளை இணைத்து உயர்ந்து நின்றது சமரசம்; பல்வேறு வளர்ச்சிப் படிநிலைகள் அமையுமானால் அனைத்துப் படிநிலைகளையும் கடந்து நின்றது சுத்தம்.

## சமரசத்துக்குரிய உயர்வும் படிநிலைகளும்

'சமரசம்' என்ற கருத்தை வள்ளலார் விளக்கும் முறையே புதியது. சமரசம் என்பது வெற்று இணைப்பன்று; பலவற்றின் தொகையும் அன்று. நான்கு கொள்கைகள் சமரசம் எய்துகின்றன என்றால் நான்கையும் சமரசம் செய்து வைப்பது எந்தக் கொள்கை ? நான்கு கொள்கைகளும் ஏதேனும் ஒன்றில் உள்ளாந்திருக்கும் ஏதோ ஒரு பகுதிதான் சமரசப்படுத்தும். அந்த ஒரு பகுதி, அந்த நான்கு கொள்கைகளுள் எந்த ஒன்றிலும் இல்லையானால், சமரசம் ஏற்படவே இயலாது. சமரசமாக்கும் பகுதி ஒன்று இருக்குமானால் அதுதான் எல்லாவற்றையும் இணைக்கும். இணைப்பது மட்டுமல்லாமல் மேலே உயர்ந்தும் நிற்கும்.

பூர்வம், பூர்வபூர்வம், உத்தரம், உத்தரோத்தரம் என உயர்வுப் படிநிலைகள் நான்கினை அமைத்துக் காட்டுகிறார் வள்ளலார். இந்நான்கையும் பூர்வம், உத்தரம் என்ற இரண்டினுள் அமைத்துக் கொள்ளும் முறையும் உண்டு. இதனை விளக்க முற்படும்போது வள்ளலார் ''எல்லா அந்தங்களினது அந்தமும் தனக்குப் பூர்வமாக்கித் தான் உத்தரத்தில் நின்று மருவியதால் சமரச மாயிற்று'' என்பார்.

## சுத்தம் என்பதை அமைக்கும் நியாயம்

சுத்தம் என்ற சொல்லைச் சன்மார்க்கத்துடன் சேர்ப்பதன் நோக்கம் 'கடந்தது' என்னும் பொருளை விளக்குவதற்காகத்தான். சுத்தம் என்றால் ஒன்றுமில்லாதது. சுத்தம் என்ற சொல் சன்மார்க்கம் என்ற சொல்லுக்கு முன்னே வரும்போது, முன்சொன்ன சமய மதங்களைத் தாண்டினது; அவற்றின் அனுபவங்களையும் கடந்தது என்ற பொருளைத் தரும். எனவே, மறுத்துக் கடந்தது சுத்தம் என நிறுத்தினார்.

## மூவகைச் சமரச இணைப்புகள்

**சமய சன்மார்க்கம், மதசன்மார்க்கம், (ஷடாந்த) ஆறந்தச் சன்மார்க்கம்** என மூவகைச் சன்மார்க்கங்கள் உள்ளன.

சத்துவ குண லட்சிய அனுசந்தானம் காரணமாக அமைவது சமய சன்மார்க்கம். இங்கே சன்மார்க்கம் என்பதற்குச் சத்துவ குண

சம்பந்தமுடையது என்பது பொருள். இவ்வகையில் சமய சன்மார்க்கம் வரும். இது 36 வகைப்படும் என்பார் வள்ளலார்.

**மத சன்மார்க்கம்** என்பது நிர்க்குண லட்சியமாகிய அனுபவம். இங்கே சத்துவ குண மார்க்கம் நான்கு. சத்துவகுணத்தின் முதல் விளைவு ஒருவன் எல்லாரையும் தன் அடிமையாகப் பாவிக்கும் முறை வரும். இரண்டாம் விளைவு மகனைப் போலப் பாவிக்கும் முறை வரும். மூன்றாம் விளைவு நண்பனாகப் பாவிக்கும் முறை வரும். நான்காம் விளைவு தன்னைப் போல் எல்லாரையும் நினைக்கும் முறை வரும். இவ்வாறு எண்ணுவது மனிதன் மற்றவனை நினைக்கும் வகைக்குப் பொருந்தும். மத அனுபவமாக அமைக்கும்போது முதல் நிலையில் கடவுளுக்குத் தான் அடிமை என அமைதல், இரண்டாம் நிலையில் மகன் என அமைதல், மூன்றாம் நிலையில் நண்பன் என அமைதல், நான்காம் நிலையில் கடவுளே தானாதல் என்பது அமையும்.

இங்கே சத்துவகுணத்தை நிர்க்குண லட்சியார்த்தமாகக் கொண்டு செய்த அனுபவப் படிகள் நான்காக அமைந்த நிலையில் பெற்ற அனுபவ அமைவுகள் உண்டாம். இது **மத சன்மார்க்கம்.**

பொதுவாக விளக்கும் போது **சமய சன்மார்க்கம்** என்பது சத்துவ குண வாச்சியார்த்த அனுபவம். **மத சன்மார்க்கம்** என்பது சத்துவ குண நிர்க்குண லட்சியார்த்த அனுபவம்.

சமய சன்மார்க்கத்தில் பல முடிவுகள் உண்டு. ஆகையால் அவற்றுள்ளே ஒரு சமரசம் அமையும். அவ்வாறே மதசன்மார்க்கத்திலும் பல முடிவுகள் உண்டு. இவ்வகையில் சமய சமரச சன்மார்க்கம் என்றும் மத சமரச சன்மார்க்கம் என்றும் இருவகைச் சமரசங்கள் வரும்.

சமய சமரச சன்மார்க்கத்தையும் மத சமரச சன்மார்க்கத்தையும் இணைத்தால் அதீதம் என்ற நிலை - கடந்தநிலை உண்டாகும். ஏனெனில் சமய சன்மார்க்கம் சகுணநிலையினது; மதசன்மார்க்கம் நிர்க்குண நிலையினது ஆதலின் சமரசம் ஏற்படாது; மறுத்து நின்ற நிலையில் சுத்தம் பிறக்கும்.

சமய சன்மார்க்கம், மத சன்மார்க்கம் என்ற இரண்டும் இணைய, மறுத்து எழும் **சுத்த சன்மார்க்கம்** பிறக்கும். இங்கே அமைந்த சுத்த

சன்மார்க்கம் என்பதற்கு முன் சொன்ன சமய மதங்களைக் கடந்தது, அவ்வனுபவங்களைத் தாண்டியது என்பதே பொருள். எனவே, சுத்த சன்மார்க்கத்தில் உள்ள அனுபவம் குண நிர்க்குண வாச்சிய லட்சிய அர்த்தமாகிய 'சமயம் மதம் ஆகியவைகளின் அனுபவம் அன்று; ஆனால் அவைகள் அங்கே இல்லாதவை அல்ல; அவைகளைக் கடந்த ஒரு பொதுமை அனுபவம்.

இங்கே அமைத்த சுத்த சன்மார்க்கத்தில் இருவகை இணைப்புகள் உள்ளீடுகளாக அமைந்தன. *1.* சமய சன்மார்க்கங்கள் பல இணைந்த சமரசம்; மத சன்மார்க்கங்கள் பல இணைந்த சமரசம். இது முதல் நிலை. 2. பின்னர் சமய சன்மார்க்க சமரசமும், மதசன்மார்க்க சமரசமும் இணையவே - மறுத்து எழுந்த சுத்த சன்மார்க்கம் அமைந்தது.

3. **மூன்றாவது இணைப்பு** ஆறு அந்தங்கள் இணையும் இணைப்பு. ஆறு அந்தங்கள் என்பன கலாந்தம், நாதாந்தம், யோகாந்தம், போதாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என ஆறு அந்தங்கள்.

அண்டமும் பிண்டமும் இணையும் நிலையில் இந்த ஆறும் வழிகளாக நிற்க இணையும். இதனை வள்ளலார் சாகாக் கல்வியின் முதற்படியாகிய ஏமசித்தி என்று குறிப்பிடுவார். திருக்குறளில் மூன்றாம் அதிகாரத்தில் சாகாக்கலை கூறப்பட்டுள்ளது என்பார். நீத்தார் பெருமையில் சாகாக்கலை கூறப் பெறுகிறது. வெளிப்படையாகச் சொல்லப் பெற்ற குறள்

''சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்ற ஐந்தின்
வகைதெரி வான்கட்டே உலகு''

என்பது. சதாசிவம் என்ற தத்துவத்தில் ஐந்து, ஐந்தாகக் கலை முதலியன விரியும். தன்னில் உலகம், உலகில்தான் என ஒடுங்கி நிற்கும் அமைப்புகளை அறிதல் வேண்டும். இவையெல்லாம் 36 தத்துவங்களைக் கடந்த மேல்நிலை செல்லுதற்கு உதவுவன. இங்கே உள்ள ஆறந்தங்களின் முடிவை அடையும் முறையினை இதே தலைப்பில் சன்மார்க்கத்தின் மூன்றாம் படிநிலை வளர்ச்சியில் விரிவாகக் காணலாம்.

ஆறு அந்தங்களிலும் அனுபவம் ஒன்றே; ஆயினும் அது காலம், இடம், பயிற்சி முறை ஆகியவைகளுக்கேற்ப மாறுபடும் என்றும் இப்போது ஆறந்தமும் வழக்கில் இல்லை என்றும் வேதாந்தம் சித்தாந்தம் என்ற இரண்டே வழக்கில் உள்ளன என்றும் வள்ளலார் குறிப்பிடுகின்றார்.

மேலே கூறப்பெற்ற ஆறு அந்தங்களையும் சமரசப்படுத்த இயலுமா என்பதை ஆய்ந்து கண்ட வள்ளலார் முதலில் வேதாந்தத்தில் போதாந்தம் யோகாந்தத்தையும், சித்தாந்தத்தில் நாதாந்தம் கலாந்தத்தையும் இணைக்கலாம் என்று கூறி, வேதாந்த சித்தாந்தமே சிறந்தவை என்றார். இக்கொள்கையின்படி, இரண்டனுள் ஏனையவைகளை அடக்கலாம் என்றாரேயொழியச் சமரசப் படுத்த இயலாது என்றார். இவைகளை இணைக்கும்போது,

வேதாந்த சித்தாந்த சமரசம்
யோகாந்த கலாந்த சமரசம்
போதாந்த நாதாந்த சமரசம்

என மூன்றாக நிறுத்தி இணைத்தார். இரண்டாக நிறுத்தி ஏனையவைகளை அடக்கலாம் என்ற வள்ளலார் சமரச இணைப்புக்காக நிறுத்தும்போது மூன்றாக நிறுத்துகிறார். இம்மூன்றையும் இணைத்தால் வருவது என்ன ?

'ஷடாந்த சமரசம்' அதற்கு அதீதம்
'சன்மார்க்க சமரசம்' அதற்கு அதீதம்
''சுத்த சமரசம்''. இதனுடன் சன்மார்க்கத்தைச் சேர்த்தால்

**''சுத்த சமரச சன்மார்க்கம்''**. இவற்றுள் பூர்வம், உத்தரம் என்ற நிலைகளில் முன்னர் நிற்க வேண்டுவது சமரசமே ஆதலின் அந்த நியதிப் படி இணைத்தால் ''சமரச சுத்த சன்மார்க்கம்'' என்பது வரும். இத்தகைய இணைப்பில் என்ன அனுபவம் அமையும் என்னில் ஆறந்த அனுபவமும் அதன் சமரச அனுபவமுமே.

## சுத்த சன்மார்க்கப் படிகள்

படிகள் மூன்று. ஆறந்தத் தனிநிலைச் சமரசப்படி ஒன்று; சமரச சன்மார்க்கப் படி ஒன்று; சுத்த சன்மார்க்கப்படி ஒன்று. இம் மூன்றுந் தனிநிலையின என்பதை இதனால் உணரலாம்.

சுத்த சன்மார்க்கத் தனிப் பெருநெறியே எல்லாச் சமயங்களுக்கும் எல்லா மதங்களுக்கும் நடுவென விளங்கும் பொதுநெறி என்றார்.

எனவே, வள்ளலார் அமைக்கும் சன்மார்க்கம் முன்னுள்ள பல சன்மார்க்க முடிவுகளைப் பூர்வமாக்கி, மருவி, மேல்நிலையில் - உத்தர பாகத்தில் நின்ற தலைமையுடையது என்பதால் **சமரச சன்மார்க்கம்** என்றும்;

அவ்வாறே பலநிலைகளில் வளர்ந்து செழித்த வளர்ச்சிப் படி நிலைகளைக் கொண்ட சன்மார்க்க அனுபவங்களையும் கடந்த அனுபவ நிலையைத் தருவதால் அவைகளையெல்லாம் மறுத்த நிலையில் கடந்து நின்ற பெருமையுடையது என்பதால் **சுத்த சன்மார்க்கம்** என்றும்;

மேலே குறிப்பிடப் பெற்ற இருநிலைகளையும் இணைத்து நின்ற காரணத்தால் **சமரச சுத்த சன்மார்க்கம்** என்ற பெயர் பெற்று விளங்கும் பொதுமையும், தனிமையும், தலைமையும் அமைந்த உண்மைப் பொதுநெறி என்றும் விளக்கிக் காட்டினார் வள்ளலார்.

## வள்ளலார் வாக்கில் சன்மார்க்கம்

தேசுறத் திகழ்தரு திருநெறிப் பொருளியல் மார்க்கம், மாய்ந்தவர் மீட்டும் வருநெறி, முத்திறல் வடிவமும் மூவகைச் சித்தியும் எச்சமின்றி அருளும் நெறி.

அருள்நிலை, அருளமுது, உளத்தே இருந்த அருள்நிலை, அருட்பதம், அருள்வழி, அருள்விளக்கு, அருள்ஒளி, அருட்பேறு, அருட்பேர், அருட்சீர் என்ற பத்தினையும் கொண்டதாய்; அருட் குருவால் காட்டப் பெற்ற நெறி.

அருள் நலம் ஒன்றே, அருள் உறல் ஒன்றே அருள் நெறி ஒன்றே, அருள் பெறல் ஒன்றே, அருள் அறிவு ஒன்றே, அருட்சுகம் ஒன்றே, அருட் பேறு ஒன்றே, அருள் தனி வல்லபம் ஒன்றே, அருள் நிலை ஒன்றே, அருள் வடிவு ஒன்றே என அறிவித்த சன்மார்க்க நெறி. இவ்வளவும் ஆன்ற சன்மார்க்கம் என்றார். இறுதியாக அமைத்தது வலமுறு சுத்த சன்மார்க்கம் என்பதே.

## சன்மார்க்கம் - எளிமையும் பெருமையும்

அங், உங் முதலியனவாகச் சொல்லப் பெற்ற மந்திரங்களைச் செபித்தோ தியானித்தோ, அர்ச்சித்தோ, வாசித்தோ முயற்சி செய்வது தேவையில்லை. சமாதி கூடுதல், மூச்சை அடக்கி யோகப் பயிற்சி செய்தல், விரதமிருத்தல் போன்ற பயிற்சிகள் தேவையில்லை.

சமாதிப் பழக்கம் கூடாது; சகசப் பழக்கமே போதுமானது.
சுத்த சன்மார்க்கத்தின் இலட்சியப் பொருள் அருட்பெருஞ்
ஜோதி ஆண்டவராம் ஒருவரே.

வள்ளலார் திருவாக்கினால் என்மார்க்கம் என்று சிறப்பிக்கப் பெற்ற சன்மார்க்கப் பெருமையினைக் கீழே காணலாம்.

அருள் ஓங்குகின்ற நெறி; அருட்பெருஞ்ஜோதி அடைந்தது; என்னுடைய மயக்கம் ஓங்காமல் என்னைக் காத்தது; நல்ல வரமளிப்பது; பொருளாய் ஓங்குவது; அருட் பூமியில் வாழப்புரிவது; தெளிவு ஓங்குவது; தானே தனக்கு இணை என நின்றது; போற்றுவோர்க்குத் துணையாவது; சுத்த சன்மார்க்கத்தில் தோய்ந்தது; ஐந்தொழில் ஈந்தது; **அருள் உலகில் திணை ஐந்துமாக** நின்றது; உலகத்தால் தொழப் பெறுவது; உண்மை; ஒண்மை ஆகிய எல்லாவற்றையும் வள்ளலாருக்குத் தந்து ஐந்தொழில் செய்ய வைத்தது; கலகம் இலாச் சுத்த சன்மார்க்கம் கலந்தது; பிறப்பை அழிப்பது; சாகாவரம் தருவது; தவசிகளுக்கு இன்பம் தருவது; உவமை அற்றது; ஒளியால் ஓங்குவது; சுத்த சிவமே நிறைவது.

**ஒத்தாரையும் இழிந்தாரையும் நேர்கண்டு உவக்க ஒரு**
**மித்தாரை வாழ்விப்பது** ஏற்றார்க்கு அமுதம் விளம்பி இடு
வித்தாரைக் காப்பது சித்தாடுகின்றது மேதினிமேல்
**செத்தாரை மீட்கின்றது** உத்தர ஞான சிதம்பரமே

மேலும் அது எத்தாலும் மிக்கது; எல்லாமும் வல்ல சித்தாடல் செய்கின்றது; எல்லா உலகும் செழிக்க வைத்தது; இல்வுலகுக்கு அணி என விளங்குவது; வானத்தவரும் தொழுவதற்கு ஏற்றது; எங்கும் செத்தால் எழுப்புவது.

**குருநெறியே அது; கூறரிதாம் பெருநெறி;** பேய் உலகக் கரு நெறி; சென்றவர்க்குக் காணக் கிடைக்காதது; **திருநெறிக்கு** ஏற்கின்றது.

கொல்லா நெறியது; கோடாநிலையது; கோபமிலார் சொல்லால் உவந்தது; சுத்த சன்மார்க்கந் துணிந்தது; உலகெலாம் காப்பது; இறந்தால் எழுப்புவது; குற்றமற்ற வளமுடையது.

காணாத காட்சிகள் காட்டுவது; வீணாள் கழிப்பவர்க்கு எட்டாதது; வெகுளி இல்லார் நெஞ்சிற் குலவுவது; அயல் நாட்ட வரும் கூடிநின்று வாழ்த்தப் பெறுவது.

வேதமுடிக்கும் முடிவாய் விளங்குவது; கன்னெஞ்சினரால் காணற் கரியது; காமம் இல்லாதவர் வணங்கற்குரிய பேறு; நல்ல செல்வந்தந்து ஆட்கொண்டது.

ஏகாந்தமாகி வெளியாய் இருந்தது; வள்ளலாரை முன்னே போகாந்தகாரத்திலிருந்து மீட்டது; நெஞ்சமாகிய இரும்பைக் காந்தமென இழுத்து முயங்கியது; வல்வினை தீர்த்து வாழவைப்பது; உடற் சாவு என்பதை நீக்கியது.

இவ்வளவும் உத்தர ஞான சிதம்பரம் என்ற பெயரால் வள்ளலார் சன்மார்க்கத்தைப் புகழ்ந்து கூறியவைகளே.

### சாகாக்கலை

வள்ளலார் என்மார்க்கம் என வகுத்தமைத்துக் கொண்ட நெறி இருவகையான அடிப்படைப் பேறுகளைக் கொண்டது என்பது இத்தலைப்பின் முன்னுரையில் எடுத்துக் காட்டப் பெற்றது. ''இறப்பொழிக்கும் சன்மார்க்கம்'' என்ற தொடரே 'சன்மார்க்கமும் சாகாக் கலையும், என்ற தலைப்பாக அமைய, சன்மார்க்கம் என்பதன் விளக்கம் இத்தலைப்பின் முதற்பகுதியாக அமைந்தது. 'சாகாக்கலை' என்பதன் விளக்கமே இத்தலைப்பின் பிற்பகுதியாக அமைகிறது.

சன்மார்க்கத்தினால் அடையும் பேறுகளுள் பெருவாழ்வு வாழலாம் என்ற ஒன்றனை வலியுறுத்தாது விட்டாலுங் கூட விடுவார்; சாகாவரமளிப்பது அல்லது செத்தாரை எழுப்புவது என்பதை விடாமல் தொடர்ந்து வலியுறுத்தும் கொள்கையுடையவர் வள்ளலார்.

செத்தார் எழுவர், செத்தாரை எழுப்புதல் வேண்டும் என்று வள்ளலார் அருளிய வழக்காறுகள் பொதுமக்களிடையே வெவ்வேறு வகையான கருத்து விளக்கங்களைத் தோற்றிவிட்டன என்பதும் உண்மையே. பொதுமக்கள் கருதிய எளிய பொருளிலுங் கூட, அதாவது செத்த-

பிணத்தைக் கூட எழுப்பும் ஆற்றல் உடையது தான். ஆனால், அவ்வாறு செய்து சித்து விளையாடல் தேவையில்லை என்பதே வள்ளலார் உட்கிடை. இங்கே இன்று செத்தவர், வேறோர் உடம்பில் எழுந்தே இருப்பர். அவரை இங்கே மீட்டும் எழ வைப்பதில் என்ன பயன் ?

செத்தார் எழுவர், மரணமிலாமை, சாகாமை முதலிய வழக்காறுகளால் வள்ளலார் எடுத்து நிலைநாட்டும் பொருள் விளக்கங்களை முறைப்படுத்தி அறிந்து கொள்ள உதவுவதே இத்தலைப்பின் பிற்பகுதி.

**முதலாவதாக** மனித உடம்புடன் கூடிநின்று வாழ்பவர்கள் மறப்பது நினைப்பது என்ற இருவகைகளில் சிக்கிக் கொள்வது கண் கூடு. மறதி என்பது இரவைப் போன்றது. நினைப்பு என்பது பகலைப் போன்றது. அவ்வாறே இந்த உடம்பை எடுப்பதற்கு முன் உள்ள நிலை என்ன என்று கேட்டால் தெரியாது என்பதே பதில். இவ்வுடம்பு எடுப்பதற்கு முன்னுள்ள நிலையைக் கேவலம் என்பர். இரவைப் போன்றது; ஒன்றும் தெரியாது. இப்போது உள்ள நிலையானது 'சகலம்'. அதாவது நினைப்பும் மறப்பும் கலந்த நிலை. சுத்தம் என்பது மறப்பே இல்லாத - இரவே இல்லாத சுத்த நிலை. கேவலத்தில் நாம் இருந்தநிலை செத்தநிலை, சகலத்தில் இப்போது நாம் இருப்பது சாவதும் பிறப்பதும் கலந்தநிலை. சுத்த சன்மார்க்கமானது நமக்குச் சுத்தம் தருவது. அதாவது மறதியும் நினைப்பும் மாறிமாறி வராது. என்றும் நினைவோடிருப்பது. இதுவே சாகாதநிலை என்று கூறப்பெறும். இது முதற்படி விளக்கம்.

**இரண்டாவதாக,** ஒரு சிலர் விழித்துக் கொண்டே இருப்பார்கள். எதிர்பாரா வகையில் சில மணித்துளிகள் தூங்கி விடுகிறார்கள். அத்தூக்கத்தால் பேரிழப்பு உண்டாகியிருக்கலாம். அவர்களும் செத்தவர்களே, ''உறங்குவதுபோலும் சாக்காடு, உறங்கி விழிப்பதுபோலும் பிறப்பு'' என்ற குறளை நோக்குக. எனவே, இரவு பகல், மறதி நினைவு என்ற இருநிலைகள் இல்லாமல் எப்போதும் அறிவு விளக்கத்துடனேயே இருத்தல் என்பதற்கும் சாகாதிருத்தல் என்ற பொருள் உண்டு.

**மூன்றாவதாக,** உடலோடு கூடி இவ்வுலகில் வாழும் உயிரானது ஒருநாள் அந்த உடம்பை வெறுத்துப்போட்டு விடுகிறது. இந்நிலையைச் செத்தார் என வழங்குவது உண்டு. ஆனால் அவ்வாறு விட்டது நகைப்புக்கு இடமானதே.

''செத்தே போனால் சிரியாரோ''

என்று கேட்கிறார் மாணிக்க வாசகர். இந்த உடம்பை அந்த உயிர் எடுத்ததன் நோக்கம் அவ்வுடம்பின் மூலமாகவே அந்த உயிரானது எல்லாப் பேறுகளையும் பெற்று வாழவேண்டும் என்பதே. மெய்யான உடலைப் பொய்யெனத் துணிந்து இங்கேயே விட்டுவிட்டால், இந்த உடம்பில் இறந்து, வேறோர் உடம்பில் பிறக்கிறார்கள். இங்கே இறப்பதற்குக் காரணம் உடலின் குறையன்று; மேற் கொண்ட நெறியில் உள்ள குறை. சன்மார்க்க நெறியானது எடுத்த இந்த உடம்பிலேயே இறந்து போகாமல் - செத்துப் போகாமல் பெருவாழ்வு வாழ்ந்து சிறக்கக் கூடிய நிலையை உண்டாக்கும் வல்லமை-யுடையது. அதனாலேயே, சுத்த சன்மார்க்கம் சாகாமையை வரமாக அளிக்கக் கூடியது என்று பேசுகிறார் வள்ளலார். வள்ளலார் நெறியின் வண்ணம், ஒருவன் இவ்வுலகில் எடுத்த இவ்வுடம்பில் வாழ்ந்து கொண்டே, சாகாமல் எல்லாப் பேரின்ப வாழ்வுகளையும் துய்த்து மகிழலாம் என்பதே. இதனால், சுத்த சன்மார்க்கம் சாகாமை வரமளிப்பது என்றார்.

**நாலாவதாக,** இவ்வுடம்பில் வாழும் யோகிகள் சிலர் மூச்சுக் காற்றை அடக்கி, ஓர் இடத்தில் நிறுத்தி, நீண்ட நாட்கள் உயிருடன் இருப்பார்கள். அவர்கள் யோகத்தில் இருந்தாலும், உடலானது செயற்பாடு இல்லாமல் செத்தது போலவே இருக்கிறது. பல ஆண்டுகள் கழித்து யோகம் கலைந்து எழுவார்கள். பயன் என்ன ? அவர்களும் செத்து விழித்தவர்களே. அவ்வாறு யோக நெறி நின்று, எத்தகைய அனுபவமும், அறிவும் தொழிற்படாமல் கிடக்கிறவர்களும் செத்தவர்களே. அவர்களை எழுப்பி, இந்த யோக நெறியில் போய்ச் செத்துத் தொலைக்கவேண்டாம். சன்மார்க்க நெறியில் அவர்களை ஈடுபடச் செய்து, நற்பேறுகளை இவ்வுடம்பிலேயே அனுபவிக்கச் செய்யலாம். இவ்வாறு அவர்களைச் செயற்படுத்தியது 'செத்தாரை எழுப்பிய நிலை' என்று கூறப்பெறும்.

## ஐந்தாவதாக, அன்பும் அருளும்

அன்பு ஒருபாற்பட்டது; அருள் பொதுமைப்பாற்பட்டது. உலகியல் உணர்ச்சியானது அன்பை அடிப்படையாகக் கொண்டது. உலகியலுக்கு அப்பாற்பட்ட பொதுமையின் நிற்பது அலகிலா

உணர்ச்சி எனப்பெறும் அருள். பூதவுடம்பு எனப்பெறும் மனித உடம்பையும் உயிரையும் இணைத்து நிற்பது அன்பு. அன்பைப் பெருக்கும் போது உடம்பில் ஒருவகைச் சூடு தோன்றும். அது சுத்த சூடு எனப்பெறும். உஷ்ணமானியால் அளக்க முடியாத சூடு. அன்பை மிகுதியாகப் பெருக்கும்போது உடலின் பௌதிக அணுக்கள் வேதிக்கப் பெறுகின்றன. அன்பினால் உருகி உருகிக் கண்ணீர் வடிக்கவே இவ்வுடம்பு அன்புருவமாகவே அமைகிறது. சுத்த சூடு காரணமாக, உடம்பின் பூத அணுக்கள் இராசாயன மாற்றம் பெறுகின்றன. இவ்வகையில் பூத உடம்பாகிய மனித உடம்பு சுத்த சூடு காரணமாக ஒளியுடம்பாக மாறுகிறது.

பௌதிக உடம்பு ஒளியுடம்பாக அன்புருவமாக மாறி நின்ற போது அங்கேயிருந்த உயிரானது முன்னே பௌதிக நிலை உடம்பாக இருந்த போது பெற்ற ஞானத்தை விட, சிறந்த ஞானம் பெறுகிறது. அது ஒருவகை வளர்ச்சியே.

**சுத்த உடம்பின் குறை.** அன்புருவமாக, ஒளியுடம்பாக நின்ற அது ஒருவகையிற் குறைபாடுடையதே. எவ்வாறு ? உயிரானது உடலுடன் இணைந்தமைக்குக் காரணம் இன்பத் துய்ப்புக்காக. உயிரானது இன்பம் அனுபவிக்க வேண்டுமானால், அனுபவத்தை உண்டாக்கக் கூடிய அளவில் உடம்பு துணைநிற்றல் வேண்டும். உயிர் இன்பம் துய்த்தல் என்பது நாம் பொதுவாக இன்பம் துய்க்கிறோம் என்றும் கூறும் தன்மையுடையதன்று, உயிரானது அருளை நேர்நிறுத்தி எப்போது அனுபவிக்கிறதோ அதுதான் இன்ப அனுபவம். அருளை நேர் நிறுத்தி அனுபவிக்கும் போதுதான் இன்ப நிலையை - இன்பத்தைத் துய்க்கும் பேற்றினை நாம் பெறுகிறோம். அருளைத் துய்ப்பது என்ற இன்பத் துய்ப்புக்கு இன்பவுடல் தேவை. இன்புருவம் இல்லையானால், அன்புருவத்தினால் அருளனுபவம் என்ற இன்பத் துய்ப்பினைப் பெற முடியாது. இன்பம் அனுபவிக்கவில்லையானால், வாழ்வின் குறிக்கோள் நிறைவு பெறவில்லை என்பதே.

**சுத்த தேகத்தில் சாதல்.** அன்பைப் பெருக்குவதன் மூலம் சுத்த சூடு உண்டாகும். சுத்த சூட்டினால் பௌதிக அணுக்கள் வேதிக்கப் பெற்றுச் சுத்த உடம்பாக மாறும். அப்போது அந்த இரசாயன மாற்றத்தில் சுத்தசூட்டிற்கும் பௌதிக அணுக்களிலிருந்து வேதிக்கப் பெற்றுச் சுத்தமாக மாறிய அணுக்களுக்கும் இடையே ஒத்த நிலை -

சமநிலை என்ற ஒரு நிலை உண்டாகும். இவ்வாறு ஒத்த நிலை வரும்போது சிலர் செத்துப் போய் விடுவார்கள். தேனும் நெய்யும் நச்சுப் பொருள்கள் அல்ல. இரண்டும் சம எடையில் நின்று கலந்தால் நஞ்சாக மாறி, அதனை உண்டவன் உயிரைப் போக்கி விடும். அவ்வாறே, சுத்த உஷ்ணம், சுத்த அணு இவைகளுக்கு ஒத்த நிலை வரும் போது சிலர் செத்துப் போய் விடுவார்கள். ஒத்தநிலை வரும் போது சாகாமல் இருக்கும் நிலை பெற்றாலும் அங்கேயும் பயிற்சியாளனுக்கு ஒருவகை அஞ்சுதல் நிலை உண்டு. உடல் சுத்த சூட்டினால் மாற்றம் அடையும் போது, புறஉலகில் உள்ள நீர், காற்று, ஒளிநிலைகளுக்கேற்ப உடல் மாற்றமானது இயைந்து ஒத்து நிற்க வேண்டும். இவைகளெல்லாம் ஒத்துநிற்குமானால், சுத்ததேகம் சித்தி பெற்று அமையும். இது ஒருவகை உருவச்சித்தி நிலை, அவ்வளவே. சுத்த உடல் அமையும்போது ஒருவகை மாற்றம் - இரசாயன வேதிப்பு நிலை ஏற்பட்ட போதிலும் உயிரானது தன்னுடைய அறிவுடனேயே விளங்குகிறது. அந்த உயிரின் அறிவு முன்னைவிட நன்றாக விளக்கம் பெற்றாலும் மறதி என்ற ஒன்று வந்தமையவில்லை. அறிவானது நினைப்பிலேயே நிற்க, உருவச்சித்தி பெற்றபின், அந்த உடலிலுள்ள உயிரின் அறிவு மேலும் விரிவாக்கப் பெறுகிறது. முன்னைய அறிவு மறக்கப் பெற்றுப் புதிய அறிவு வரவில்லை. முன்னைய உடம்பை விட முற்றிலும் மாறுபட்ட உடலில் இப்போது இருக்கும் உயிர் முன்னைய நிலையையும் இப்போதுள்ள நிலையையும் இணைத்துக் காண முடிகிறது. இப்போது நடை பெற்ற உடல் மாற்றத்தில் சாவாது, மறப்பு உண்டாகாதவாறு, இறப்பு இல்லாமல் இருந்தது போல இறுதிவரை இருத்தலே இறவாநெறி. உடல் மாற்றத்தைத் தவிர ஏனையவை முன்பே உள்ளவை. இதுவே இறவாத - சாகாத நெறியாயிற்று.

**சுத்த தேகத்தின் எல்லை.** சுத்த தேகம் என்பது சாகாத உடல் தான். ஆனால், அதற்கும் ஓர் எல்லை உண்டு. மேலும், சுத்த தேகத்தால் இன்பம் துய்க்க முடியாது. எனவே, அந்தத் தேகத்தாலும் அதன் சாகாமையாலும் பயன் இல்லை.

முன்பு, பௌதிக அணுக்களாலாய தூல உடம்புக்கும் உயிருக்கும் இடை அமைந்த இணைப்பு உணர்ச்சியானது 'அன்பு' என்று பெயர் பெற்றது போல இங்கே, சுத்த தேகத்துக்கும் உயிருக்கும்

இடை அமைந்த இணைப்பு உணர்ச்சிக்கு என்ன பெயர் ? அருள் என்ற பேருணர்ச்சியே அவ்விணைப்புணர்ச்சியாகும். இதனை ''அருள் என்னும் அன்பு ஈன்குழவி'' என்ற திருக்குறளாலும் தெளியலாம். முன்னர் அன்பைச் செயற்படுத்திய உயிர் இப்போது அருளைச் செயற்படுத்த வேண்டும். பேருணர்ச்சி - அலகிலா உணர்ச்சியாகிய அருளைச் செயற்படுத்த முடியாமல் உயிரானது சோர்வுற்று விடும் சோர்வே தூக்கம் எனக் கருதப் பெறும். இத்தூக்கமே முடிந்த நிலை இன்பம் எனக் கருதப்பெற்று விடுவதும் உண்டு. இத்தகைய மயக்கத்திலேயே உயிரானது மயங்கிக் கிடந்து விடும். அதுவும் ஒரு வகைச் சாவு தான்; மரணம் தான். இத்தகைய மயக்கமாம் மரணத்திலேயே கிடந்து, அவன் இருக்கும் அண்டம் அழியும் போது அவனுடைய சுத்த தேகமும் அழியும். அந்த உயிர் மீளப் பிறக்கும்.

சுத்ததேகம் பெற்றவன் தான் வாழும் அண்டத்துக்கு அப்பால் உள்ள அண்டங்களுக்கும் செல்ல முற்படும்போது, அவன் வெவ்வேறு அண்டங்களின் இணைப்பால் வெவ்வேறு தாக்குதல்களை ஏற்க வேண்டியவனாவான். பல அண்டங்கள் இணையும் இணைப்பு நிலையில் வந்து தாக்கும் தாக்கங்களுக்கு எதிர்த்துச் சாகாது நிற்றல் வேண்டும். இது **இரண்டாம் நிலை.** சுத்த தேகம் பெற்றுச் சாவாதிருந்தது முதல் நிலை.

**அருட் சோதி உரு எனப் பெறும் பிரணவ உடல்.** முன்பே குறிப்பிட்டவாறு அன்பெனும் ஆறு கரையது புரள ஓடுவதால் பிறக்கும் சுத்த சூடு காரணமாகச் சுத்ததேகம் அமைந்தது. சுத்ததேகத்தில் உள்ள சுத்த ஒளியில் வேறொரு ஒளி நின்று தொழிற்படும். அதனை அருட்சோதி, அருள்ஒளி, அருட்பிரகாசம் என்பது வழக்கு. சூரிய ஒளிக்கதிர்கள் என இருகண்களும் ஒளிபெற்றுத் திகழும். உடம்பில் ஆதித்த வொளி எனப் பெறும் பரவொளி அமையும். சாதகன் சீவ கருணையில் நிலைத்தான் ஆனால், அருளானது உயிரில் ஒருவகை மாற்றத்தை உண்டாக்கும். இங்கே அறிவு பெருகி மேலும் விரிவுறும். இங்கே உள்ள இணைப்பு அருளே. இத்தகைய அருளுணர்வைக் காரைக்காலம்மையார் **''இறவாத இன்ப அன்பு''** என்று குறிப்பிடுகிறார்.

முன்னே சுத்த தேகத்தில் அமைந்தது சுத்த உஷ்ணம் அல்லது சுத்த சூடு. சுத்த உஷ்ணம் அமைந்தது உருத்திரபாகம். அதுவே

போகாப்புனல். அருட்சோதி உருவில் சுத்தத் தண்மை அமையும். இது நிலவை ஒத்த தண்மை. இதுவே வேகாக்கால். இது மகேசுரபாகம். இதைச் சிற்றம்பலத்தின் கீழ் இருக்கும் நிலை என்பதுண்டு. திருவடிகள் காட்சிப்படும். திருவடியில் ஒன்றும்போது சுத்தத்தண்மை அனுபவம் பெறும். இதனைச் சேக்கிழார்,

''நன்மைபெருகு அருள் **நெறியே** வந்தணைந்து நல்லூரின்
மன்னு திருத் தொண்டனார் வணங்கி மகிழ்ந்து எழும்
பொழுதில்
உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம் என்று அவர்தம்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான்''

என்று கூறுவதையும், திருவடி சூட்டப் பெற்றதும் திருநாவுக்கரசர்

''**நனைந்தனைய திருவடி** என் தலைமேல் வைத்தார்
நல்லூர் எம்பெருமானார் நல்லவாறே''

எனத் தம்அனுபவநிலையை அருளியதையும் இணைத்துச் சிந்திக்க வேண்டும்.

உலகியற் சூடு பச்சை மண்ணைச் செங்கல்லாக்கும். செங்கல்லைப் பொன்னாக்கியது சுத்த சூடு. அதனைச் சுத்தத் தண்மையால் **இருக்கப்** பண்ணுதல்; நிலைத்ததாக ஆக்குதல். மாற்றுக் குறையாத பொன்னாக்குதல். இதனையே **''ஆற்றில் இட்டுக் குளத்தில் எடுத்தல்''** என ஓர் உத்தி முறையாற் பேசினார் சுந்தரர்பெருமான். இங்கே உடல் பொன்மயமாகும். ஒளி நலம் அமையும். இந்நிலையைச் **சத்தியன் ஆம் நிலை** என்பார் வள்ளலார்.

முன்னே சுத்த சூடு வந்து அமைய, அங்கே ஒருவகை ஒத்தநிலை வரும்போது செத்துப்போனவர்கள் உண்டு. அவ்வாறே சுத்தத் தண்மை வந்து அமையும் போது சிலர் தூங்கி விடுவார்கள். அவர்களும் செத்தவர்களே.

உருத்திரபாகம் எனப்பெறும் போகாப்புனலும், மகேசுரபாகம் எனப்பெறும் வேகாக்காலும் முறையே சுத்த சூட்டுச் சுத்தத் தேகம், சுத்தத் தண்மைப் பிரணவ தேகம் என அமைந்த இருநிலைகள் காட்டப்பெற்றன. இதற்கு மேல் உள்ள பகுதிதான் சதாசிவபாகம். எந்த ஒன்றையும் ஐந்தாகப் பிரித்துத் தன்னிடத்திருந்து வெளிப்படுத்தவும்,

பிரித்தவாறே தன்னுள் வந்து அடங்குமாறு செய்யவும் வல்லது சதாசிவ பாகம்.

'சதாசிவம்' என்பதைச் சிவனுறை திருக்கோயில்களில் மூலட்டானத்தில் உள்ள இலிங்கம் எனக் கொள்க. இதனைப் பதிப்பொருள் எனவும் கூறுப.

தத்துவங்கள் 36 என்று கணக்கிடும்போது சுத்ததத்துவம் 5, ஆன்மதத்துவம் 7, பிரகிருதி தத்துவம் 24 என நிறுத்துவர். சுத்ததத்துவம் ஐந்தனுள் நடுநிற்பது சதாசிவம்.

1. சுத்ததத்துவம்

சிவம், சத்தி, சதாசிவம், மகேசுரம், சுத்தவித்தை என்பது ஐந்தாகப் பிரிக்கும் முறை. இதையே ஒன்பதாகப் பிரித்தலும் உண்டு.

2. சுத்ததத்துவம்

நாதம், விந்து, சிவம், சத்தி, சதாசிவம், மகேசுரம், உருத்திரன், விஷ்ணு, பிரமன் என்பது ஒன்பதாகப் பிரிக்கும் நிலை.

நாதம், விந்து, சத்தி என்ற நான்கும் அருவம், சதாசிவம் அருவுருவம், மகேசுரம் முதலிய நான்கும் உருவம்.

சதாசிவத்தின் ஆட்சியுரிமை 36 தத்துவங்களிலும் உண்டு. 36 ஆவது தத்துவமாகிய 'சிவம்' என்ற இறுதி நிலையும் சதாசிவத்தின் ஆட்சிக்கு உட்பட்டதே. 36 ஆம் தத்துவமாகிய சிவநிலை வரை சென்றவர்கள் அங்கே உள்ள சிவத்தால் கரைக்கப் பெற்று, விழுங்கப் பெற்று, அதனால் செத்துப்போனவர்களும் உண்டு. பேராற்றல் வாய்ந்த சதாசிவ ஆட்சியைக் கடந்தால்தான் சாகாதிருத்தல் என்பதை உறுதி செய்ய முடியும்.

சதாசிவ ஆட்சியின் முடிவில் தான் வள்ளலாரின் சன்மார்க்க அனுபவம் தொடங்குகிறது. சதாசிவ ஆட்சியைக் கடந்து நின்றவனே - சாகாதவனே சன்மார்க்கி என்று குறிப்பிடுகிறார் வள்ளலார்.

சதாசிவ ஆட்சியைக் கடக்கவும், அது வரையிலும் அதற்கு மேலும் சாகாதிருக்கவும் மூன்று வழிகள் பேசப்பெறுகின்றன. வள்ளலாருடையது எனப் பெறும் ஒருவழி நீங்கலாக ஏனைய இரு

வழிகள் இங்கே சுருக்கமாக விளக்கப் பெறும். வள்ளலாருடையது உரிய இடத்தில் விளக்கம் பெறும்.

*1.* சதாசிவம் என்பது ஐம்முக அமைப்புடைய இலிங்க வடிவம். ஐந்தொழிற்கு உரிய பதி இதுவே. பரிணாம அமைப்பில் ஐந்து பிரிவுகளாக அமைந்த துய்ப்புப் பொருள்களை அமைத்துத் தருவது இதுவே. சுத்தமாயையுடன் இணைந்த பரம்பொருட் சொருபமே, உயிர்கட்குப் பணியாற்றும் நிலையில் நிற்கும் பதிப்பொருளர்கிய இலிங்க மூர்த்தம் - சதாசிவம்.

பதிப்பொருளுடன் இணைந்து கூத்தியற்றும் கூத்தப் பெருமான் செயலும் உயிர்களைப் பக்குவமாக்குதற்கே அமைகின்றது. அவன் ஆடுங் கூத்து வகைகள் பலவாயினும் இன்றியமையாதன மூன்று.

நாதாந்த நடனம், போதாந்த நடனம், ஆனந்த நடனம் என்பன. நடனங்கள் செய்யும் பொதுச் செயல் ஒன்றே. துய்ப்பின் மூலமாக அருள் விளக்கமும் அறிவு விளக்கமும் பெறவைத்தலே. போதாந்த நடனம் தூலபஞ்சாக்கரம்; நாதாந்த நடனம் சூக்குமபஞ்சாக்கரம், ஆனந்த நடனம் ஓரக்கரம். குருவினால் உபதேசம் பெற்றுப் பஞ்சாக்கர அமைப்பில் நிட்டை கூடி ஞானம் பெற்று, போதாந்த நடன அனுபவத்தால் மலநீக்கம் பெறுதல். நாதாந்த நடன அனுபவத்தால் பரநாதம் பரவிந்து எனப் பெறும் மீதானம் அடைதல். பரநாதத்தலம் என்பது சதாசிவ ஆட்சியின் அடங்கிய 36 தத்துவங்களின் மேல் உள்ள இடம். பரநாதம் பரவிந்து என்பன ஒலியும் ஒளியுமாய் இரு திருவடி என நிற்கும். அடியின் கீழ் இருக்கும் நிலை. அங்கிருந்தால் முடியுடன் இணைந்த திருவடி அனுபவம் பெறும். அதற்குமேல் ஐந்து அனுபவநிலைகள் உண்டு. இவ்வகையில் மொத்த அனுபவப் படிகள் 43. இது புறநிலையில் 36 தத்துவங்கடந்து, 37-ம் 38-ம் ஆக இணைந்த மீதானம் எய்தி நிற்றல். இது ஒரு முறை. 37 & 38 எண்ணுள்ள நிலையை அடையும் வரையில் எந்த இடத்திலும் சாகும் நிலை அடையப் பெறலாம். 37 & 38 என்ற நிலைகளை அடைந்து விட்டால் பின்னர் சாதல் நிலையே இராது. இதனைப் பொதுவாகக் **கயிலைக் காட்சி** என்ற குழூஉக் குறியால் விளக்குவார்கள்.

இதனையே காரைக்கால் அம்மையார் அறவா நீ ஆடும் போதுன் அடியின் கீழ் இருக்க என வேண்டினார். அப்பரடிகள் கயிலை காண முற்பட்டபோது, அது குழூஉக் குறியாதலின் அவருக்கு ஐயாற்றில்

அது வழங்கப் பெறுகிறது. ஐந்தும் ஆறாவதாய ஒன்றும் இணைந்த தலம் அது. சதாசிவ மூர்த்த ஆட்சிமுறையும் அதன் மேல் அமைந்த பரநாத பரவிந்துத் தல அனுபவம் என்ற ஆறாம் நிலை அனுபவமும் இணைந்த இடம். இங்கே பெற்ற அனுபவத்தை அப்பரடிகள்,

''காதல் மடப்பிடியோடும் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர் திருப்பாதம்
கண்டறியாதன கண்டேன்'' என்றார்.

ஆண்மை பெண்மை இணைப்பெனக் கண்ட நிலை சதாசிவமூர்த்த அனுபவம். அடுத்தது, பரநாத பரவிந்து எனப் பெறும் மீதானத்து அனுபவம். கண்டறியாதன கண்டேன் எனப் பெறுவதே அருளனுபவமாம் ஐந்து நிலை மேன்மை அனுபவங்கள்.

இருமையில் நிற்றல் - பேதம், சதாசிவ முடிந்தநிலை அனுபவம். இருமைக் காட்சி இருக்கும் வரையில் சதாசிவ அனுபவம் நிறைவுறாது. இருமையின் இடையில் அருளொளியானது காட்சிப்படும்.

மாறுபட்ட இருமைகளை இணைத்து வழி நடத்துவதாய் அம்மாறுபாடுகளைக் கடந்ததாய் உள்ள ஒன்று உள்ளது. அதுவே, பொதுமை - தனிமை எனப்பெறும் அருள்நிலை. இருமையின் இடை அமைந்ததும் இருமையை வாழ வைப்பதும் இருமையை ஒட்டியிருப்பினும் கடந்ததும் ஆகிய அந்த ஒன்றே அருட்காட்சி. அதுவே அருளனுபவம் தருவது. அதனை

''இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்''

என வகுத்தார் திருஞான சம்பந்தர். ஆண்மைப் பாலையும் பெண்மைப் பாலையும் இணைய நிறுத்திய பொதுமைப்பால் அது. இருவகைத் திருவடியின் ஒருமை அனுபவம். இப்பொதுமையில் 36 தத்துவங்களும் சுழலும். அதையே தத்துவ வெற்றி என்பர். சதாசிவ ஆட்சிக்கு மேல் உள்ள நிலை.

2. சதாசிவ மூர்த்தமாகிய இலிங்கத்தைத் தன்னுள் காணுதல். இதனை ஓம் எனும் ஓரக்கர அனுபவம் என்பர். இதனைக் கீழ்வரும் திருக்களிற்றுப் படியார் வெண்பாவால் அறியலாம்.

''தம்முட் சிவலிங்கம் கண்டதனைத் தாம்வணங்கி
தம்மன்பால் மஞ்சனநீர் தாமாட்டித் - தம்மை ஒரு
பூவாக்கிப் பூஅழியா மற்கொடுத்துப் பூசித்தால்
ஓவாமை அன்றே உளன்''

உயிருடன் உடலுடன் கலந்த பரம் பொருள் - இலிங்கப் பொருள் உண்டு எனக் கண்டு, அப்பொருளுக்குத் தன்னையும் தன் கருவி கரணங்களையும் அடிமையாக்கி விடுதல். இது வீரசைவ முறையையொத்தது. உயிரானது தன்னுள் இருக்கும் இலிங்கத்தில் ஒடுங்கி, தம்முடைய கருவி கரணங்களைத் தம்முள் ஒடுக்கியிருத்தல். அப்போது உயிரில் கலந்த அருளமுத இலிங்கப்பொருள் பெருகி ஆட்கொள்ளும். அதன் ஆட்சி உயிரைத் தன்னுடையதாக்கி, அவ்வுயிரின் இடமாகிய உடம்பையும் தன்னுடையதாக்கிக் கொள்ளும். இலிங்கைக்கிய நிலையே அது. இதற்கும் வள்ளலார் நெறிக்கும் உள்ள வேறுபாடு பின்னர் விளக்கப் பெறும்.

தம்முள் சிவலிங்கம் காணும் நிலையில் சாகாத்தலையாகிய சதாசிவ பாகம் முன்னரும், அதன்பின் வேகாக்கால், அதன்பின் போகாப் புனல் என மாற்றம் பெற்று வரும் சாகாக்கல்வியை விளக்கும்போது இவ்விருவகை வேறுபாடுகளையும் வள்ளலார் எழுதுவதை உபதேசப் பகுதியால் அறிக.

அடுத்து, சுத்ததேகம் பெற்று முதல் நிலை கடந்து, சுத்தத்தண்மை நிலையாம் பொன்மயத் திருவுருவம் பெற்று அவ்வகையில் இரண்டாம் நிலையையும் கடந்து நிற்கின்ற இடம் 'சிவ' எனப் பெறும் 36 ஆம் தத்துவம். சதாசிவத்தின் ஆட்சிக்குரிய இறுதி இடம். அவ்விடத்துக்கு அடுத்ததே மீதானம் எனப் பெறும் சாகாத்தலையிடம். மீதானத்தில் நின்றுவிட்டால் சாதல் இல்லை. சிவம் என்ற இறுதிப்படிக்கும் மீதானப் படிக்கும் இடையில் பலர் செத்துப் போயிருக்கிறார்கள். இங்கே வந்து செத்துப் போனவர்களுக்காகத் தான் வள்ளலார் பலமுறையும் தேம்பித் தேம்பி அழுகிறார்.

''தத்துவம் அனைத்தும் தனித்தனி கடந்தேம்
தத்துவ அதீத மேல் நிலையில்
சித்தியல் முழுதும் தெரிந்தனம் அவைமேல்
சிவநிலை தெரிந்திடச் சென்றேம்

**ஒத்த அந்நிலைக்கண் யாமும் எம் உணர்வும்**
**ஒருங்குறக் கரைந்து போயினம்** என்று
அத்தகை உணர்ந்தோர் வழுத்த நின்று ஓங்கும்
அருட்பெருஞ்சோதி என் அரசே''

என்னும் அருட்பெருஞ்சோதி அட்டகத்து 7 ஆம் அருட்பாவைக் கண்டு தெளிவு பெறலாம். இதுவே சிவதுரியம் அல்லது குருதுரிய நிலை. அடுத்தது சுத்த சிவ நிலை. இங்கே வந்து செத்தவர்கள் உண்டு.

இங்கே ஒருவகை ஒத்தநிலை வரும். இங்கே ஒத்தநிலை என்பது என்ன ? இக்காலத்தே ஒவ்வாமை (Alergy) என்பதே ஒரு நோய். அது போலவே ஒத்த நிலையில் ஒவ்வாமை வர, அவ்விணைப்பில் சாதல் நேரும்.

சுத்த தேகம் பெற்று, பொன்மயத் திருவுருப் பெற்று நிற்கிறான். அவனிடம் சுத்த ஒலியும் சுத்த ஒளியும் இணைந்து நிற்கின்றன. அதனுடன் மீதான நிலைக்குரிய சுத்தசிவ ஒலியும் சுத்த சிவ ஒளியும் இணைய முற்படுகின்றன. இவை நான்கும் இணைதல் ஒருவகைப் பரிமாற்றம். அருட்பெருஞ்சோதி அகவலில் ''என் செயல் நின் செயல்'' என நால்வகையில் இருபொருள் பரிமாற்றம் நடை பெறுவதை எடுத்துக் காட்டினார். இதனைத் திருமூலர் ''வட்டமது ஒத்தது வாணிபம் வாய்த்தது'' என்ற குழூஉக் குறியாற் கூறினார். இதனைப் ''பரியங்க யோகம்'' என்ப. மாணிக்கவாசகர் வரலாற்றில் அமையும் நரி பரியாக்கிய நிலை இதைக் குறிப்பதே. அதனாலேயே ''தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னை'' என்று அருளினார் மாணிக்க வாசகர்.

இங்கே தான் உலகியலுணர்வின் முடிநிலையும் அலகிலா உணர்ச்சி எனப்பெறும் அருள் நிலையின் அடியும் இணைந்த அடிமுடி நடு இடம். இந்நிலையை வெகு எளிதாகப் பெற்று விடுகிறார் வள்ளலார்.

முன்பு கூறிய பலநிலைகளில் இறப்பது உண்டு. ஆனால், இங்கே வந்து ''யானும் என் உணர்வும் ஒருங்குறக் கரைந்து போதல்'' என்ற இறத்தலை எண்ணி எண்ணி வருந்துகின்றார் மாணிக்கவாசகர்.

**''யான் ஏதும் பிறப்பு அஞ்சேன் இறப்பதனுக்கு என் கடவேன்''**

என்று வருந்துகின்றார்.

''எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்
மெய்யே உன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்''

என்றார் மாணிக்கவாசகர். குருதுரியம் எனப் பெறும் சிவ துரியத்தில் தான் ஒத்தநிலை அமைக்கப்பெறும். அப்போது குருதுரியாதீதம் அல்லது சிவ துரியாதீதம் என்ற இறுதிப்படியானது காட்சிப்படும். எவ்வாறு காட்சிப்படும் ? இரு திருவடிகளெனத் தோன்றும். காட்சிப் பட்டதற்கும் அவ்விடத்தில் சென்று உற்று நிற்பதற்கும் இடையில் இறத்தல் வந்து தாக்கிவிடும். அதனால்தான் இறவா நிலையை, வீடுபெறுதல் என்றும் திருவடிப் பேறு என்றும் குறிப்பிடும் வழக்கம் தோன்றிவிட்டது எனலாம். இறத்தல், பிறத்தல், இறவாமை பிறவாமை ஆகியவைகளுக்கு மருந்தென நிற்பது இறைவன் இணையடிகள் என்ற வழக்காறும் எழுந்திருக்க வேண்டும். திருவடிப்பேறே இறவாப் பெருநிலை என்று அருளாளர்களால் அறிவுறுத்தப் பெற்றது.

வள்ளலார் இப்பேற்றினை மிக எளிமையாகப் பெற்றுவிடுகிறார். இவர் இதனைப் பெறுவதற்கு, இதனை இவருக்குக் கொடுத்தவர் எவ்வளவு பெரிய தோல்விகளைப் பெற்றுக் கொடுத்திருக்கிறார் என்பதை வள்ளலார் வாக்கினைக் கொண்டே தெளிதல் வேண்டும்.

''**உலகியல் உணர்வோர்** அணுத்துணை யேனும்
உற்றிலாச் சிறிய ஓர் பருவத்து
இலகிய எனக்குள் இருந்து அருள்நெறியில்
ஏற்றவும் தரமிலாமையினால்
விலகுறுங் காலத்து அடிக்கடி ஏறவிடுத்துப்
பின் விலகுறா வண்ணம்
**அலகிலா உணர்ச்சி அளித்தனை** உன்தன்
அருட்கடற் பெருமை என்புகல்வேன்
திலகநற் காழி ஞான சம்பந்தத்
தெள்ளமுதாம் சிவ குருவே''

என்பது ஆளுடைய பிள்ளைகள் எனப்பெறும் ஞானசம்பந்தரைப் பற்றியமுதல்பாட்டு. நான்கு அடியில் முடியவேண்டுவது இலக்கணத்தையுங் கடந்து ஐந்து அடியாக நீளுகிறது. குருதுரியம் சென்றவர்கள் கரைந்து போன நிலையை விளக்கியது போலவே தன்னிலையையும் விளக்கி, ஆனால் நான் கரைந்து போகாவண்ணம் என்னைக் காத்தருளியவர் என் குரு என்கிறார் வள்ளலார்.

''தத்துவ நிலைகள் தனித்தனி ஏறித்
தனிப்பர நாதமாம் தலத்தே
**ஒத்த தன்மயமாம்** நின்னை நீ இன்றி
உற்றிடல் **உயிரனுபவம்** என்று
இத்துணை **வெளியின் என்னை என்னிடத்தே**
**இருந்தவாறு அளித்தனை** அன்றோ
சித்தநற் காழி ஞானசம்பந்தச்
செல்வமே எனது சற் குருவே''

எனத் தெளிவாக எடுத்துக் கூறுவதை உணர்ந்து தெளிதல் வேண்டும். இந்நிலையைக் குருவருள் தான் எளிமையிற் கொடுக்கும் என உடன்பட்டுத் தம்முடைய சன்மார்க்க நெறியைக் ''குரு நெறி'' என்றே குறிப்பிடுகிறார்.

வள்ளலாருக்கு இந்நிலை எளிமையிற் கிடைத்தது. ''அருள் நெறியில் ஏற்றவும் தரமிலாமையினால் விலகுறுங் காலத்து'' என்று பாடும் வள்ளலார் எவ்வாறு அழுதிருப்பார் என்பதை உணர்தல் வேண்டும். தனக்கு வருந்திக் கொடுத்த ஞானசம்பந்தர் தாம் அந்த நிலையை அடையும் போது எப்படி இருந்தார் ?

''முன்புறு நிலையும் பின்புறு நிலையும்
முன்னி நின்று உளமயக் குறுங்கால்
அன்புறு நிலையால் திருநெறித் தமிழ்கொண்டு
ஐயம் நீத்து அருளிய அரசே''

என்றும்,

''**ஒருபகற் பொழுதில்** உற அளித்தனை நின்
உறுபெருங் கருணை என்னென்பேன்''

என்றும் அருளுகிறார். ஒருபகற் பொழுதில் திருநெறித் தமிழ் கொண்டு ஐயம் நீத்தார் என்பதை ஞானசம்பந்தர் அருளிய பகற்பதிகம் என்ற பதிகத்தின் மூலம் விளக்கம் பெறுகிறார். திருத்துருத்திப் பதிகமே பகற்பதிகம்.

திருத்துருத்தியை (இக்காலத்து மயிலாடு துறையை அடுத்த குற்றாலம்)யும் திருவேள்விக் குடியையும் இணைத்த பதிகம் பாடும் ஞானசம்பந்தர் ''இரவிடத் துறைவர் வேள்விக் குடியே'' என எல்லாப்

பாக்களிலும் அமைப்பார். எனவே, இரவில் வேள்விக் குடியில் தங்கும் இறைவன் பகலில் தங்குவது திருத்துருத்தி. அதற்குத் தனிப் பதிகம் பாடுகிறார். அதுவே பகற்பதிகம். அதனுள்,

''துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் நின்னடி
மறக்கிலாத என்னை **மையல் செய்து** மண்ணின் மேல்
பிறக்குமாறு காட்டினாய், பிணிப்படும் உடம்பு விட்டு
இறக்குமாறு காட்டினாய்க்கு இழுக்குகின்றது என்னையே''

என்ற பகற்பதிகத் திருநெறித் தமிழில், முன்பிறப்பில் ஞானசம்பந்தர் திருவடி மறவாநிலை பெற்றிருந்தும் **'மையல்'** வந்து விட்டது. அதனால் மண்ணில் பிறக்குமாறு காட்டினாய்; ''பிணிப்படும் உடம்பு'' என்று சுட்டிக் காட்டி, அங்கே சென்றால் மையல் படாத, இறவாத, பிணிப்படாத உடம்பைப் பெற்றுவிட வேண்டும் என்று அறிவுறுத்தினார். எனக்கு அறிவுறுத்தியதோடு அவ்வுருவையும் அளித்தார். எனக்கு மட்டுமா ?

''பெருமண நல்லூர்த் திருமணங் காணப்
பெற்றவர் தமையெலாம் ஞான
உருவடைந்து **ஓங்கக்** கருணை செய்தளித்த
உயர் தனிக் கவுணிய மணியே''

எனவும் விளக்கினார்.

அவ்வாறே திருக்கயிலையில் திருவடியை மறவாதும் தொண்டு செய்தும் நின்ற நம்பியாரூரருக்கு மையல் வந்தது. பின்னர்ப் பிறப்பு. ''மையல் மானுடமாய் மயங்கும் வழி ஐயனே தடுத்து ஆண்டருள்'' என்று முன்கூட்டியே வரம் கிடக்கிறார். அது மட்டுமா !

அழுக்கு மெய்கொடு உன் திருவடி அடைந்தேன்
அதுவும் நான்படற் பால தொன்றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்
பிழைப்பனாகிலும் **திருவடிப் பிழையேன்**
வழுக்கி வீழினும் திருப்பெயரல்லால் மற்றுநான்
அறியேன் மறுமாற்றம்
ஒழுக்க என்கணுக்கு ஒரு மருந்துரையாய்
ஒற்றியூர் எனும் ஊர் உறைவானே''

என்பது சுந்தரர் திரு ஒற்றியூரில் தவம் கிடந்து வேண்டிய ஒன்று. முன்னே இறப்புநிலை எனப்பெறும் ''மையல்'' காரணமாகப் பிறந்து மீளவும் செல்லவேண்டிய நிலை. இது அவர்கள் ஞானசம்பந்தராகவும் சுந்தரராகவும் பிறப்பதற்கு முன் உள்ள நிலை. இவ்வுண்மைகளை உளங்கொண்ட வள்ளலார் சிவதுரியம் சிவதுரியாதீதம் என்ற இரண்டற்கும் இடையில் இறப்பை அடைந்து மீளவும் பிறக்கும் நிலை வாய்க்குமே என்று கருதி, அழுது, தம்மார்க்கத்தில் அக்குறை இருத்தலாகாது என்று கவனத்துடன் உருவாக்கிய காரணத்தினாலேயே வள்ளலார் என்மார்க்கம் **இறப்பு ஒழிக்கும்** சன்மார்க்கம் என்றார். இத்துணை விரிவுகளையும் அமைக்காமல், அவ்வரியைப் படித்தால் ''இறப்பு ஒழிக்கும்'' என்ற வழக்காற்றுக்கு ஒருவகையான வரலாற்று அவலப் பின்னணி உண்டு என்பது தெரியாமலே போய்விடும். வரலாறு தெரியவில்லையானால் இறப்பொழிக்கும் சன்மார்க்கம் என்பதன் முற்பகுதியானது ஓசை நிறைக்க வந்த வெற்றுப்பகுதி என்பதாகவே முடிந்துவிடும். இத்தகைய வரலாறு காரணமாகவே, இவ்வாறு செத்தவர்களையும், இனி வேறு வேறு மார்க்கங்களில் வந்து அங்கங்கே மையல் கொண்டு செத்தவர்களையும் எழுப்புதல் வேண்டும் என்கிறார்.

பிறநெறிகளில் வந்தவர்கள் இவ்வாறு செத்துப் போக,! சத்திய நெறியாகிய இச்சன்மார்க்க நெறியானது சாகாமையைக் கொடுக்க வல்லது; சாகாமையைக் கொடுப்பதாலேயே சன்மார்க்கம் ஆயிற்று என்றார். பிற நெறிகளில் வந்து செத்தாரையும் எழுப்பி அவர்களுக்கும் பெருவாழ்வு அளிக்கும் நெறியே இது என விளக்கம் காட்டி, என்மார்க்கம் மரணமிலாப் பெருவாழ்வளிக்கும் என்றும் இறப்பு ஒழிக்கும் சன்மார்க்கம் என்றும் குறிப்பிட்டுக் காட்டினார் வள்ளலார்.

## சாகாக்கலையே இருத்தற்கலை

*1*. **அன்புருவம்.** இது அள்ளூறு ஆக்கை எனப் பெறும். இறைவன் தனக்கு மூன்று காரியங்கள் செய்து, ***''என்னையும் இருப்பது ஆக்கினன்''*** என்றார் மாணிக்க வாசகர்.

அருட்பெருந் தீயினால் அடியோமையும் அடிக்குடிலையும் ஒருவர் கூட எஞ்சி நில்லாதவாறு எரித்து ஒடுக்கினான்; என்னைச் சாக வைத்தமையால் செத்தேன்; அள்ளூறு யாக்கை எனப் பெறும் இன்புருவம் தந்தான். இதுவே அன்புருவமாதல்.

முதலில் அருள் ஒளி என்ற தீயினால் வேதித்தான்; பின்னர் அடிகளின் உளங்கலந்து, உயிர் கலந்து, உடல் கலந்து, மற்றெல்லாங் கலந்து வேதித்தான். பூதவுடல் பொன்னுடலாயிற்று. அது அன்புருவம். அன்புருவம் என்பது உருகுவதே தொழிலாகக் கொண்ட ஒருவகை உருவம்.

2. **அருளுரு எனப் பெறும் பிரணவ தேகம்.** இது இரண்டாம் பேறு. இதனை மந்திர வடிவம் என்பர். ''ஓமயத்திருவுரு'' என வள்ளலார் குறிப்பிடுவார்.

இவ்வடிவம் சித்திகளையெல்லாம் ஏவல் கொள்ளும் அருளாற்றல் உடையது. அருளமுதம் அருந்துதற் கேற்றது. அருளனுபவம் கை கூடும். அருளே வடிவாய் நிற்கும் ஆன்மாவும் அருட்பெருஞ்சோதிப் பெருமானைக் காணும், ஏத்தும், அணைந்து இன்புறும், பரம்பொருளும் ஆன்மாவிற் கலக்கும்.

3. **ஞானதேகம் எனப் பெறும் இன்புருவம்.** இதற்கு அருளுருவம், இன்புருவம், வான்வடிவம், ஞானதேகம், சிவவடிவம் என்ற வழக்காறுகள் உள. இங்கே சிவானுபவம் சித்திக்கும். ஞான தேகத்தால் இறைவனை ஒன்றி நின்று, சிவமாகி, என்றும் இன்பம் தழைக்க **இருத்தல்** என்பது இன்புருவ இயல்பு. மன்புருவ நடுவில் மூச்சடக்கி, மனத்தை இருத்தி, என்புருவாகி, நெடுங்காலம் தவஞ் செய்பவர்களும் ஏமாந்து போவார்களேயன்றி இவ்வுருவம் பெற மாட்டார்கள்.

## இருத்தல் என்ற குழூஉக்குறிக்குப்பொருள் நடுநிற்றல்

இந்நிலையை மாணிக்கவாசகர் இருத்தல் என்ற சொல்லாலும் நடுநிற்றல், நடுவிருத்தல் என்பவைகளாலும் விளக்கிக் காட்டுவது அவர் மரபு.

''உடையாள் உன்தன் நடு இருக்கும்
உடையாள் நடுவுள் நீ இருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்பதனால் அடியேன் உன்
அடியார் நடுவுள் இருக்கும்
அருளைப் புரியாய்''

என்பது அவர் வேண்டுகோள். நடுவுள் இருத்தல் என்பது ஒருபொது நிலை. வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்ட பொதுநிலையில் நிற்றலையே இருத்தல், நடுவிருத்தல் என விளக்குகிறார்.

சத்தியானவள் சிவத்தின் நடுவில் இருப்பாள். உருவங்கள் கலந்தன; பால் மாற்றம் நிகழவில்லை. அவ்வாறே சத்தியின் நடுவே சிவம்.

ஆண்மைப்பாலும் பெண்மைப்பாலும் இழக்க நின்ற பொதுமைப் பாலில் நிற்றலே இருத்தல் அல்லது நடு இருத்தல். அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால் என்று கூறும் மாணிக்கவாசகர் ஆண்டான் அடிமை வேறுபாடு இங்கே இருக்கும் என்று கருதுகிறார். வேறுபாடுகளே இல்லாத நடுநிலை அல்லது பொதுநிலை என்பது அடியார் நடுவுள் இருத்தலே. இதுவே அருள்நிலை எனவும் இருத்தல் நிலை எனவும் நடு இருத்தல் நிலை எனவும் குறிக்கப் பெறும் நிலை.

குரு என்று எப்பெருந்தவரும் கூறி வணங்குதற்குரிய கோ என நின்ற மாணிக்கவாசகரின் வருமொழியுள் ஒரு மொழியாய் நின்றதே 'இரு' என்ற தனிமொழி.

## வள்ளலார் அமைக்கும் சில அனுபவப் படிநிலைகள்

திருஞான சம்பந்தரைக் குருவாகக் கொண்டமையின் அனுபவ விளக்கங்கள் பலவற்றையும் அவரே விளக்கமுறத் தமக்கு அமைத்துக் கொடுத்தவைகள் என விளக்கிக் காட்டுகின்றார்.

அருளனுபவம், உயிரனுபவம், சுத்தசிவ அனுபவம் என்ற மூன்று அனுபவநிலைகளைப் பேசுகிறார். அருளனுபவம் ஒன்றுதான் உயிரின் மல அழுக்கைப் போக்கும் ஆற்றல் உடையது என்றார். ஆனால், நிகழ்முறையில் உயிர்அனுபவம் முன்னதாக, அதன்பின் அருளனுபவம், அதன்பின் சுத்தசிவ அனுபவம் என ஒன்றன்பின் ஒன்றென வரிசையில் அமையும் என்றார்.

மனிதன் அனுபவிக்கும் சில அனுபவங்கள் அல்லது உயிரானது அனுபவிக்கும் அனுபவங்கள் வரையறைப்படுத்தப்பட வேண்டும் என்ற முயற்சியில் ஐவகைக் கலைச்சொற்களைத் தத்துவத்துறை பயன்படுத்துகிறது.

சாக்கிரம் (நனவு), சொப்பனம் (கனவு), சுழுத்தி (உறக்கம்), துரியம் (பேருறக்கம்), துரியாதீதம் உயிர்ப்படங்கலும் அமையும் மிகு பேருறக்கம். இது ஒருவன் படுக்கைக்குச் சென்று உறங்கியும் விழித்தும் தான் பெற்ற அனுபவங்களை வரையறை செய்யும் நிலையில் தோற்றுவிக்கப் பெற்றவை. ஆனால், உயிரானது, சிவத்துடன் இணைந்து பெறுகிற இன்பம் என்பதை வரையறுக்க இவைகளே உதவுமா என்ற வினா எழுந்தபோது, இவைகள் முழுப்பயன் தருவன அல்ல. ஆயினும் ஐந்து நிலைகளைக் கொண்ட அனுபவத்தை விளக்க இவைகளைக் குழூஉக் குறியாகப் பயன்படத்திக் கொள்ளலாம் அவ்வளவே. இவ்வகையிற் சில படிநிலைகள் வள்ளலாரால் அமைக்கப் பெறுகின்றன.

| | | |
|---|---|---|
| படி-1. | சீவசாக்கிரம், சீவசொப்பனம்,<br>சீவசுழுத்தி, சீவதுரியம் என | 4 |
| படி-2. | சுத்த சாக்கிரம், சுத்தசொப்பனம்,<br>சுத்தசுழுத்தி, சுத்ததுரியம் என | 4 |
| படி-3. | பரசாக்கரம், பர சொப்பனம், பரசுழுத்தி,<br>பரதுரியம், பர துரியாதீதம் என | 5 |
| படி-4. | சிவசாக்கிரம், சிவசொப்பனம்,<br>சிவசுழுத்தி, சிவதுரியம், சிவதுரியாதீதம் என | 5 |

சிவசாக்கிரம் என்ற வரிசையைக் குரு சாக்கிரம் என வரிசைப் படுத்துதலும் உண்டு.

நாலாம்படியில் சிவதுரியம் அல்லது குருதுரியம் என்ற நிலையானது ஒரு முக்கிய அனுபவநிலை.

இனி, நான்காம் படியில் இறுதி நின்ற அனுபவம் சிவ துரியாதீதம். அதுவே இப்படியின் இறுதிநிலை அனுபவம். அதற்குமேல் சுத்தசிவ சாக்கிரம், சுத்தசிவ சொப்பனம், சுத்தசிவசுழுத்தி, சுத்தசிவதுரியம், சுத்தசிவ துரியாதீதம் என்ற ஐந்து அனுபவ நிலைகள் உண்டு. அனுபவ இறுதிநிலை என்பது சுத்தசிவதுரியாதீதம் என்பதே. சீவசாக்கிரப்படி, சுத்தசாக்கிரப்படி, பரசாக்கிரப்படி, சிவசாக்கிரப்படி என நான்கு படிகள் அமைந்தமை போலவே சுத்தசிவ சாக்கிரம் என்பதையும் ஒரு படி என்று கணக்கிட்டு,

அப்படியில் ஐவகை அனுபவநிலைகள் உண்டு என்று வள்ளலார் அமைத்துக் காட்ட வில்லை.

படிநிலை வேறுபாடுகள் நான்கே. நான்காம்படியின் நான்காம் அனுபவநிலையே சிவதுரியம் அல்லது குருதுரியம். அதனை அடுத்தது சிவதுரியாதீதம்.

நாலாம்படியின் இறுதியாய சிவதுரியாதீதம் முடிந்தபின் தான் சுத்தசிவ சாக்கிரம் என்ற அனுபவம் தோன்றும். இங்கே சிவதுரியாதீதத்தின் முடிவு எனவும் சுத்தசிவ சாக்கிரத்தின் தொடக்கம் எனவும் அமையும் இணைப்புநிலை இல்லாமல் சிவதுரியாதீதம் முடிந்ததும் சுத்த சிவசாக்கிரம் முதலிய அனுபவங்கள் தொடர்ந்துவிடும். தொடர்ந்த அனுபவமாகவே அமைந்து விடுவதால் ஐந்தாவது என்ற தனிப்படி அமைக்கவில்லை.

நான்காம்படியின் நாலாம்நிலையே குருதுரியம் அல்லது சிவ துரியம். இதற்கு அடுத்தது சிவதுரியாதீதம். குருதுரியம் வரைவந்து இறந்தவர்கள் பலர். குருதுரியம் கடந்து குருதுரியாதீதம் தலைப்பட்டு விட்டால் பின்னர்ச் சாதல் என்பதே இல்லை. எனவே, குருதுரியம் வரையில் சாகாக்கலையின் பேச்சு அடிபடும்.

வள்ளலார் அமைக்கும் சுத்த சன்மார்க்க அனுபவம் குருதுரியாதீதம் என்ற இடத்திலிருந்தான். அது நாலாம்படியின் ஐந்தாம் அனுபவம். சுத்த சன்மார்க்கத்துக்கே உரிய அனுபவப்படிகளை ஆறு என்று சொல்லி விடலாம். குருதுரியம் கடந்த பின்னர் அமையும் குருதுரியாதீதம் (1) சுத்தசிவ சாக்கிரம் முதலிய (5) ஆக ஆறு அனுபவநிலைகள் மட்டுமே. ஆனாலும் சுத்த சன்மார்க்க அனுபவம் விளையும் படி எது என்றால் நாலாம் படிதான். நான்காம்படியின் துரியநிலையில் வந்து செத்தவர்களைச் சுத்த சன்மார்க்கம் ஒன்றே எழுப்ப வல்லது. அதற்குமேல் உள்ள ஆறு அனுபவ நிலைகள் சுத்த சன்மார்க்கத்துக்கே உரிய அனுபவ நிலைகள்.

வள்ளலார் ஐந்தாவது பிள்ளை அதிலும் கடைப்பிள்ளை. ஐந்தாவது படி இல்லையாதலின் நாலாம் படியின் இறுதியில் நிற்கிறார். ஐந்தாம் படி அனுபவங்களை வளர்க்கிறார். சன்மார்க்கத்துக்குரிய அனுபவப் படிகள் நான்கே.

நாலாம்படியின் நாலாம்நிலையாகிய குருதுரியத்தில்தான் 'ஒத்தல்' என்பது முழுமை பெறுகிறது. இங்கேதான் சிவம் பலரைக் கரைய வைத்து விழுங்கி விடுகிறது. மாணிக்கவாசகர் தான் மலையாக நின்று சிவத்தையே கரைத்துவிட்டுக் கலந்தார் என்பார் வள்ளலார்.

குருதுரியத்தில் தான் உயிரனுபவம் அமையும். இங்கேதான் பொத்திய மூலமலப்பிணி முற்றாக அழியும். ''நின்னை நீ இன்றி உற்றிடல்'' உயிரனுபவம் என்பர் வள்ளலார். இதனையே தன் உயிர் தான் அறப் பெறுதல் என்பார் திருவள்ளுவர்.

''என்னை என்னிடத்தே இருந்தவாறு அளித்தனை'' என உயிரனுபவத்தை விளக்கினார் வள்ளலார். இதன்பிறகு அருளனுபவம் உறும். அதுவே மருந்து. அருளனுபவம் நான்கு வகையில் நிகழும்.

1. தன்னைத் தான் இன்றி உற்ற ஆன்மா அதன் வயமாதல்

2. பனிப்பிலாது என்றும் உள்ளதாய் விளங்குதல்

3. பரம்பரத்து உட்புறமாதல்

4. இனிப்புற **இருத்தல்** (ஒன்றும் இயம்புறா இயல்பாய் இருத்தல்).

இங்கே காணப் பெறும் இருத்தல் என்பதுதான் நித்தியனாக இருத்தல் என்ற பொருள்படுவது. இந்நிலைக்கு மேல் சாதல் இல்லாநிலை. என்னையும் இருப்பது ஆக்கினன் என மாணிக்கவாசகர் அருளினார். காரைக் காலம்மையாரும் 'அடியின் கீழ் இருக்க' என்றார்.

குருதுரியாதீதத்தில்தான் இருத்தல் என்பதன் உண்மை அமையும். குருதுரியாதீதம் என்ற அனுபவத்தில் ஆன்ம சிற்சத்தியானது அருட் சத்தியாக மாறும். இதுவே அருளனுபவத்தானம். பரநாதத்தலம் என்றும், பரம்பர வெளி அனுபவம் என்றும் இதனைக் கூறுவர். பரநாத ஒலி கேட்கும். இதுவே திருவடி நிலை. திருச்சிற்றம் பலம், மீதானம், சதாசிவ ஆட்சியின் இறுதி நின்ற சிவம் என்பதும் முடிய மேலே நின்ற இடம். 36 தத்துவம் கடந்த பிறகு அமையும் முதல் நிலை.

பரநாதம் பரவிந்து என்ற இரண்டும் இரண்டு திருவடிகளெனத் தோற்றும்.

இது இரவு பகல் அற்ற இடம்; சுத்த விழிப்பே அமையும். அருள் விளங்கும் சுத்த சிவ அதீத வெளி **நடுவில்** நின்று திருவருளை அனுபவித்தல். இங்குள்ள அனுபவம் எவ்வாறு இருக்கும் ?

1. அருள் விளங்குஞ் சுத்தசிவ அதீத வெளியில் எல்லாம் வல்ல முழுமுதல் தெய்வமாகிய சிவபரம் பொருள் அருட்பெருஞ் சோதியாக இருக்கிறது.

2. அருளனுபவத்தில் இனிப்புற்றிருந்த அருளுருவாம் ஆன்மா சிவமயமாகிறது.

3. இயற்கை உண்மைத் தனிப்பெரும் பொருளாயும் இயற்கை விளக்கத் தனிப் பெரும் பதமாயும் இயற்கை இன்பத் தனிப் பெருஞ் சுகமாயும்

விளங்கும் சுத்த சிவத்துடன் பிரிவின்றிச் சிவமயமாய்ச் சத்தியநிலை அனுபவம் எனப் பெறும் இயற்கை இன்ப அனுபவம் பெறுகிறது.

எல்லாவற்றாலும் தன்மயம் தன்மயம் ஆகும். ஆயினும் அது பூரணம், உயிர் ஏகதேசம்.

இந்நிலையே சுத்தசிவ துரியாதீதம் - இறுதி. ஆதலின் இதனைச் சுத்தந் தோய்ந்த சமரச அத்துவித நிலை எனவும் கூறுவர். இங்கேயும் ஆன்மா தனித்த நிலையில் **இருப்பது** என்றே கொள்ள வேண்டும்.

## இருத்தல் - வள்ளலாரின் விளக்கம்

சுத்த சன்மார்க்கக் கொள்கையின் பயன் ஆன்மாவானது தன்னுடைய குறையை முழுமையாக நீக்குதல் வேண்டும்; முத்தேக சித்தியுடன் எல்லாச் சித்திகளையும் பெற்று, ஐந்தொழிலை உள்ளிட்ட அனைத்துத் தொழில்களையும் தன்னிச்சையில் நடத்தும் வல்லபம் பெற்று, இயற்கை உண்மைப் பேரறிவாய், இரண்டுபடாத இன்ப பூரணப் பெருவாழ்வு பெறுதல் என்பதே. இப்பயனை உள்ளிட்ட எல்லாவகை நிலைகளிலும் முழுமை பெறுதல் வேண்டும்.

முழுமைப் பயனை எய்துதற்கு முன் உயிரானது எந்த ஒரு படி நிலையில் நின்று விட்டாலும் அது இறந்து போதலே. பலபடிநிலை

வளர்ச்சியில் இடைப்படும் பல இணைப்புகளில் தொடர்ந்து முன்னேறும் உயிரானது தன்னுடைய உடம்புடன் அழியாது இருக்க வேண்டும். மயக்கம் காரணமாகச் சோர்ந்து விடாமல் விழிப்பாக இருக்க வேண்டும். அங்கங்குள்ள அனுபவத்தை நுகர்ந்ததும், இதுவே போதும் என்றோ, முடிநிலை என்றோ, கருதிச் சோர்ந்து விடாமல் முழுமை இன்பத்துய்ப்பு வரையில் செல்லக்கூடிய (அனுபவிக்க வேண்டும் என்ற) ஆர்வப்பசி இருத்தல் வேண்டும்.

மேலே குறிப்பிடப் பெற்ற மூன்று வகையான இருத்தல்களில் (தனித்து, விழித்து, பசித்து இருத்தல்) எந்த ஒன்று குறைந்தாலும் செத்துப் போனார் என்பதே முடிவு. வள்ளலார் வாக்கில் இருத்தல் என்பது மூன்று குறிக்கோள்களை இணைத்த ஒன்று எனக் கொள்ள வேண்டும். *1*. உடம்புடன் இருத்தல். *2*. விழித்திருத்தல் எனப் பெறும் அறிவுடன் இருத்தல் *3*. முழுமைச் சித்தி அடையும் வரையில் பசியுடன் இருத்தல். இவைகளை முறையே தனித்திரு, விழித்திரு, பசித்திரு என எடுத்துக் காட்டி முடிப்பாராயினர்.

## நால்வகைப் பெரும் பேரிணைப்பு

1. உயிரானது இந்திரியம் கரணம் ஜீவன் என்ற மூன்றோடும் ஒத்து நிற்றல்.
2. பிண்டம் (உடலும் உயிரும் இணைந்த நிலை) அண்டத்துடன் ஒத்து நிற்றல்.
3. பிண்ட அண்ட இணைப்புடன் நின்ற ஆன்மாவானது அனைத்து அண்டங்களோடும் இணையும் வகையில் ஒத்து நிற்றல்.
4. மேல் உள்ள மூன்றையுங் கடந்து, மேல் நிலையில் முழுமையும் பொதுமையும் ஆகிய நடுவில் ஒத்து நிற்றல். இவ்வகையில் முதல் மூன்று நிலைகளிலும் செத்துப்போய் விடுதல் உண்டு.

உயிரும் உடம்பும் இணையாத நிலையில் செத்துப் போதலே நாம் நாளும் காணும் வரலாற்றுச் சாதல். உயிரோடு உடம்பையும் இணைத்து நிறுத்தினாலும் அறிவுடன் இணைந்து நிற்கவில்லை யானால் அதுவும் செத்துப் போதலே.

பிண்டமும் அண்டமும் இணையும் போது அறிவுடன், தனித்த தேகத்துடன், இன்பப் பேற்றுடன் இருந்தால்தான் மரணமில்லா நிலை.

இனி 36 தத்துவங்களையும் கடந்த மேனிலையில் - குருதுரியத்தில் அமையும் ஒத்த நிலை ஒன்று உண்டு. அங்கே சாகாதிருத்தல் அருமை. அந்த எல்லையே நாதாந்த, போதாந்தம் எனப் பெறும். இவ்விரண்டிலும் தனித்தனிச் சித்தி பெற்றிருக்க வேண்டும். அவைகளை முறையே ஏமசித்தி என்றும் சாகாக்கல்வி என்றும் குறிப்பிடுகிறார் வள்ளலார்.

மீதானம் எனப்பெறும் மேனிலையில் பரநாதம், பரவிந்து என்ற இரண்டும் தனித்தனியே இருக்கும். இந்நிலையே திருவடியின் கீழிருத்தல் எனப் பெறும். இங்கே, சுத்த நாதாந்தம் சுத்த போதாந்தம் என இருநிலையில் ஆன்மா நிற்க, நாதாந்த நடனம் போதாந்த நடனம் என்ற இரண்டாலும் இரு திருவடிகள் நிற்க, இங்கே ஒருவகை **நாற்கால் இணைப்பு** உண்டாகும். இங்கே தான் ஆன்மாவானது சாகாக்கல்வி வெற்றியும், சாகா வரமும் என்ற இருவகைப் பேறுகளைப் பெறுகிறது. இங்கே பிரணவசித்தி அனுபவம் கிடைக்கும். ஆன்மாவானது இங்கேதான் மந்திரத் தேகம் எனப் பெற்ற ஒலித்தேகத்தையும், சர்வ சித்திகளையும் பெறும்.

மீதானத்தில் இரு திருவடிகளில் இணைந்து நின்று ஆன்மாவானது பெறும் அனுபவம் நான்கு. அவை முறையே திக்கிராந்தம், அதிக்கிராந்தம், சம்மௌனம், சுத்தம் எனக் குறிப்பிடப் பெறும். இவைகளைச் 'சுத்த சிவ அனுபவம்' என்பார் வள்ளலார். திருவடிச் சித்திநிலை எனப் பெறும் நாலாம்படியில் ஆன்மா பிந்துவாக, பரமான்மா நாதமாக நிற்கும். இதுவே இதுவரை உள்ள அனுபவங்களையெல்லாம் பூர்வமாக்கி உத்தரமாக மருவிய நிலை. இதையே உத்தர ஞான சிதம்பரம் என்பர். இங்கே ஆன்மாவானது **சத்தியத் தன்மை** பெறும்.

உத்தர ஞான சிதம்பரத்தில் அனுபவ வளர்ச்சி நிலைகள் நான்கு. கொண்டும் கொடுத்தும் அமையும் பரிவர்த்தனை முறை அனுபவமே இது. இங்கேயெல்லாம் நாதத்துடன் பிந்து இணையும். இங்கே ஆன்மா **நித்தியன்** ஆகும். தத்துவ நிலைகளில் இதுவரையில் மொத்தமாக 42 தத்துவங்கள் கடக்கப் பெற்றிருக்கும். 36+2+4 என அமைக்க. 42இன்

முடிவில் ஆன்மா ஞானதேகத்துடன், சர்வசித்தியுடன், சர்வ வல்லமையுடன் திகழும்.

43ஆம் நிலை அனுபவம் என்பதே சுத்த சிவ துரியாதீதம். இது பூர்வஞானம் உத்தர ஞானம் ஆகியவைகளையும் கடந்த சுத்த ஞான நிலை. இங்கே ஆன்மாவானது இன்புருவமாய் நின்று வாழும் பேரின்ப வாழ்வு நிலை எய்தும். 43ஆம் நிலை அனுபவம் எனப்பெறும் சுத்தசிவ துரிய அதீதத்தில் அருட்ஜோதி ஆண்டவர் நெற்றிக்கண் திருப்பூட்டைத் திறப்பார். இது அனைத்து அண்ட பிண்ட, அண்டாண்டங்களையும் கடந்த, உலகமேனிலையாகிய பொதுமையில் நிற்றல். இந்நிலையில் ஆன்மா **உத்தமன்** ஆவான்.

சத்தியனாய், நித்தியனாய் நின்ற ஆன்மா இப்போது உத்தமன் ஆகிறது. இது ஒருவகையில் ஓங்கிய நிலை. இங்கே வந்த பின்னர்த் தான் எவ்வெப்படிகளில் யார் யார் இறந்து கிடக்கிறார்கள் எனப் பார்க்கும் நிலையும் அவர்களை எழுப்பி வாழவைக்கும் நிலையும் உண்டாகும். இங்கே, அருட்பெருஞ்சோதி ஆண்டவருடன் இணைந்திருந்தாலும், ஆன்மாவுக்குத் தனித்த இருப்பு நிலை உண்டு. இங்கே, அருளாட்சிச் செங்கோல் ஏந்தி அருள் வயத்ததாய ஐந்தொழில் நடத்தும் நிலை பெறுதல் உண்டு.

இங்கே காட்டப் பெற்ற 43 படிநிலை அனுபவங்களும் எடுத்த இந்த உடம்பிலேயே இணைந்திருந்து பெற்ற மேனிலை அனுபவங்கள். இதனையே வள்ளலார்

''இகத்தே பரத்தைப் பெறுதல்''

என்றார். 43ஆம் இறுதிநிலையில் மூவகை அனுபவம் உண்டு.

''அருளமுது அளித்தனை
அருள்நிலை ஏற்றினை
அருள் அறிவளித்தனை''

என்பார் வள்ளலார். இந்நிலையை விளக்க வள்ளலார் பல பதிகங்களை அருளியுள்ளார். ஆயினும், ஆறாந்திருமுறைச் 'சுத்த சைவ நிலை' என்ற தலைப்பில்

''சித்தியெலாந் தந்தே திருவம் பலத்தாடும்
நித்தியன் என் உள்ளே நிறைகின்றான்''

என்றார்.

''பாலுங் கொடுத்தான் பதிதிறக்கும் ஓர் திறவுக்
கோலுங் கொடுத்தான் குணங்கொடுத்தான் - காலும்
தலையும் அறியும் தரங்கொ டுத்தான்
நிலையும் கொடுத்தான் நிறைந்து''

என்றும் அருளியன கொண்டு உணரலாம்.

எனவே, 'இருத்தல்' என்பது 43 நிலைகளிலும் அமையும் பல்வேறு இணைப்புகளில் தனித்தும் (அழியாத் தேகத்துடன்), விழித்தும் - இரவு, பகல், நினைப்பு மறப்பு அற்று, அறிவுடன் விழிப்பான நிலையில் இருந்தும், பேரின்பப் பெருவாழ்வில் வாழ்ந்து **இருத்தல்** எனப் பொருள்படும்.

இங்கே கூறப்பெற்ற 43 நிலைகளிலும் சாகாமல் நின்று கடந்து பெருவாழ்வுடன் வாழ்ந்திருக்கும் ஞானிகள் வள்ளலாருக்கு முன்னும் பின்னும் இருந்திருக்கலாம். ஆனால் 37 முதல் 43 வரை உள்ள படிநிலை - அனுபவ நிலைகளைக் கொள்கையாக நிலைநிறுத்தி வந்த பெருமையுடையவரே வள்ளலார். அவர்களெல்லாம் பேரின்பப் பெருவாழ்வைப் பெற்று வாழ்ந்து கொண்டிருக்கலாம். ஆனால் வள்ளலார் அத்தகைய வாழ்வில் வாழ்ந்து கொண்டிருக்க விரும்பாமல், செத்தாரை எழுப்புதல் வேண்டும் எனவும் அவர்கள் நன்மைக்காகவே அருள் ஐந்தொழிலையும் செய்ய முற்பட்டு, இவ்வுலகத்துயிர் விரைந்து மேனிலைக்குக் கொண்டு வரவேண்டும் என்று பணியாற்ற வந்தவரே - அவ்வாறு இன்றும் பணியாற்றிக் கொண்டிருப்பவரே வள்ளலார். அதனாலேயே சுதந்திரத்துடன் அருளாட்சி புரியும் உரிமையும் செங்கோல் தாங்கி நிற்கும் செழுமையும் வள்ளலாருக்கு அளிக்கப் பெற்றன. இவ்வகையில் வள்ளலார் ஏனையவர்களுடன் வேறுபட்டு நிற்பவர் ஆகிறார்.

## முடிப்புரை

''இறப்பொழிக்கும் சன்மார்க்கம்'' என்ற தொடரை அடிப்படையாகக் கொண்டு சன்மார்க்கமும் சாகாக்கலையும் எனத்

தலைப்பு அமைக்கப் பெற்றது. 'சன்மார்க்கம்' என்ற சொல்லிலேயே சத்தியனாதல், நித்தியனாதல், உத்தமனாதல், ஓங்குபவனாதல் என்ற வளர்ச்சிப்படிகள் உள்ளார்ந்தனவாய் உள்ளன என்பதை எடுத்துக் காட்டும் வகையில் விளக்கங்களை அமைத்தார் வள்ளலார்.

சத்தியனாதல், நித்தியனாதல், உத்தமனாதல், ஓங்குபவனாதல் என்பனவெல்லாம் சாகாமையின் நால்வகைப் படிநிலைகள் என்று எண்ணக் கூடியவைகளாகவே அமைகின்றன. ஓர் உயிரானது சன்மார்க்க நெறியில் நிற்பதன் மூலம் இத்தகைய வளர்ச்சிகளை அடையுமானால் அவ்வளர்ச்சியானது தனி உயிரின் வளர்ச்சி தானே, அவ்வாறு தனி உயிர் வளர்ச்சியால் ஏனைய உயிர்கள் என்ன பயன் எய்த முடியும் என்பதாக ஒரு வினாவை எழுப்புவோமானால், அவ்வினாவுக்கு நேரான விடையைச் சத்தியனாதல் முதலிய நான்கு சொற்களால் விளக்க இயலாது. ஆகையாலேயே சுத்த சன்மார்க்க நிலை வேறு; சுக நிலை வேறு எனவும் பிரித்துக் காட்டி விளக்கங் கூறினார் வள்ளலார்.

'சுகநிலை பெறுதல்' என்பதன் விளக்கமாகவே ''பெருவாழ்வு'' என்பதனை அமைத்துக் காட்டினார். எனவே ''மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாங் கண்டீர்'' என்று வள்ளலார் கூறுவதன் நுட்பம் ஓர்ந்து உணர்தல் வேண்டும்.

பெரு வாழ்வினை அமைத்துக் கொடுக்கும் சான்றோர்களே பெரியர் எனப் பெற்றார்கள். இதற்கும் வள்ளலார் எடுத்துக் காட்டும் இலக்கியம் திருக்குறளே. நீத்தார் பெருமையில் பெரியர் யார் என்பதன் விடை அமைந்துள்ளமையால் சாகாக்கலையின் முழுமை விளக்கமும் நீத்தார் பெருமையில் உண்டு என அமைத்துக் காட்டினார் எனக் கொள்க.

பெரியர் என்பார் யார் ? அவர்களை எவ்வாறு கண்டு கொள்ள இயலும் ? இவ்வினாக்களுக்கு விடை அளிக்கும் முறையில் மனுமுறை கண்ட வாசகம் அமைகிறது. மனுமுறை கண்ட மன்னன் பேசும் பேச்சில் பூர்வ பாகத்து நீதி என்றும் உத்தரபாகத்து நீதி என்றும் இரு வகை நீதிகளைப் பேசுகிறான். உத்தரபாகத்து நீதியானது உயிர்க் கொலை நேரும் காலத்தில் எம்மனோர்களால் வழிவழியாக மேற்கொள்ளப் பெற்ற நீதி என்று எடுத்துக் காட்டி, இயல்பான

அறமோதல்கள் வருகின்ற காலத்து, உயிர்கள் எல்லாவற்றையும் உயிர்கள் என்ற அளவில் நோக்காமல், சிவபரம்பொருள் நடமாடும் இடம் என்ற பொதுமையில் நோக்கி, அதற்கேற்ற அறமுறைகளைச் செயற்படுத்த முற்படுதல் வேண்டும் என்று மனுமுறை கண்ட மன்னன் கூற்றாகக் கூறி, அவ்வாறு மேற் கொள்ளப் பெற்ற உத்தர பாகத்து நீதியானது செத்தாரை எழுப்ப வல்லது; சுகவாழ்வு அருளவல்லது என்பதையும் வரலாற்று முகமாகவே இணைத்துக் காட்டி விளக்குவாராயினர்.

உத்தரபாகத்து நீதியை மேற் கொள்ளும் சான்றோர்களையே அந்தணர் என்று குறிப்பிட்டு, அவர்கள் முன்னால் செத்தவர் எழுவர் என்றார். அருள் நிலையத்தின் முன்னால் தீமை நடை பெறலாகாது. அருள் விளக்கம் என்பதே சித்தி வளாகம். அதன் முன்னால், செத்தார் எழுவர், சுகநிலை பெறுவர் என்பதை முடிவாக முடித்துக் காட்டும் வகையிலேயே சித்திவளாகம் எனவும் பெருவாழ்வு வாழும் நிலை எனவும் சுட்டிக்காட்டி அதனையும் சாகாக்கலையுடன் இணைத்துக் காட்டி விளக்கினார் எனக் கொள்ள வேண்டும். இக்கருத்து, இந்நூலின் ஐந்தாவது தலைப்பில் மேலும் விளக்கப் பெறும்.



# 4. சமய மதங்களின் படிமுறை வளர்ச்சியே சுத்த சன்மார்க்கம்

## முன்னுரை

சுத்த சன்மார்க்கம் மரபு வழிப் பெருமையும் புதுமையை ஏற்ற பொலிவும் பெற விளங்கும் சத்தியத் தனி நெறி என்பது இருவகை மரபு என்ற தலைப்பில் விளக்கப் பெற்றது.

உள்ளது சிறத்தல் (Evolution) எனப் பெறும் பரிணாமக் கொள்கையின் அடிப்படையில், வாழ்வியற் கொள்கைகள், பிறப்பு முறைகள் அமைவதைக் காணலாம். வரலாற்று அடிப்படையில் நோக்கினால், சமயநெறிகள் பரிணாம விதியின் அடிப்படையில் தோன்றியும் வளர்ந்தும் வருகின்றன என்பதைக் காணலாம். அவ்வகையில் சுத்த சன்மார்க்க நெறியும் ஒருவகைப் பரிணாம வளர்ச்சி அடிப்படையில் எழுந்ததே.

உயிர்கள் தாம் அடைய வேண்டிய குறிக்கோட் பொருளை அடைந்து இன்புற்று வாழ்ந்து சிறக்க வேண்டும் என்பது ஒரு வாழ்க்கை விளக்கத் தொடர். குறிக்கோள் இன்னது என வரையறுக்கவும் அதனை அடையக் கூடிய வழிமுறைகளை வகுக்கவும், வகுத்தவாறே செயற்படவும் ஆற்றல் இல்லாதவைகளே உயிர்கள். குறிக்கோளை வரையறுப்பதும் அதனை அடைதற்குரிய நெறியினை வகுத்துக் கொடுப்பதும் உயிர்களினத்திலேயே இருக்கும் ஓர் உயிரோ அல்லது பல உயிர்களோ இணைந்து செயற்படுத்தப் பெறுவன அல்ல. உயிர்கள் மேல் வைத்த கருணையினால் பரம் பொருளே குறிக்கோளையும் நெறிகளையும் வரையறை செய்து அமைக்கிறது. ஒரு குறிக்கோளை உணர்ந்து அதனை அடைய வேண்டும் என ஓர் உயிர் எண்ணவும் செயற்படவும் தொடங்க வேண்டும் என்றால் அத்தகைய அறிவைப் பெறுதற்கு அந்த உயிர் பல படிநிலைகளில் பயிற்சி பெற்றிருக்க வேண்டும்.

பரம்பொருளின் கருணையினால் பல்வேறு படிநிலைகளில் சமய நெறிகள் அமைக்கப் பெறுகின்றன. திட்டமிடுதலும் வகுத்தளித்தலும் பரம்பொருளின் கருணைச் செயல்களே. அவ்வக்காலத்தில் தகுந்தவர் ஒருவரை அனுப்பி அச்சமய நெறியை விளக்கப்படுத்துகிறது.

இவ்வாறு பல்வேறு வகையான சமய நெறிகளை வகுத்ததும், நெறிகளை அமைத்து வாழ வைத்ததும் பரம்பொருளே. அது ஒரு வகையில் உள்ளது சிறத்தல் எனப் பெறும் பரிணாமக் கொள்கையாக அமைகிறது.

சமய நெறியில் அமைந்த பரிணாம வளர்ச்சித் திட்டத்தில் சன்மார்க்கம் இறுதித் திட்டமாக அமைகிறது. சன்மார்க்க நெறியைத் தொடங்கியவர் வேறு. அந்நெறியைப் பரம்பொருள் அமைத்த திட்டத்தின் படி அவ்வப்போது கொள்கை விளக்கம் செய்தவர் பலர். சன்மார்க்கத்தின் முடிந்த நிலையை - முழுமையை நிலைநாட்டி விளக்கம் செய்து, மக்களை நெறிப்படுத்தி, நிறைவு செய்தவர் வள்ளலார். சன்மார்க்கம் முழுமையான விளக்கத்துடனும் செயல் திட்டத்துடனும் நிலை நாட்டப் பெறவும் நிறைவு செய்யவும் பெறுகிறது. அவ்வாறு திட்டமிட்டதும், நெறிகளை வகுத்ததும், அவ்வப்போது தக்கவர்களை அனுப்பிச் செயற்படுத்தியதும், இறுதி நிலைத் தொண்டுக்குத் தக்கவராக வள்ளலாரைத் தேர்ந்ததும், அவரால் அந்நெறியை முடிவு பெறச் செய்தமைத்ததும் பரம்பொருளின் திட்டப்பணி.

வள்ளலார் செய்த தவம், தகுதியாந்தன்மை முதலியவைகளின் அடிப்படையிலேயே அவரை இப்பணிக்குப் பரம்பொருள் ஈடுபடுத்தியது. சன்மார்க்கக் கொள்கையை வகுத்ததோ, மாற்றங்களை இணைத்ததோ வள்ளலார் பணியன்று. இத்தகைய நற்பணிக்கு வள்ளலார் ஒருவரே தகுதி எனப் பரம்பொருள் கருதி, அவரை இப்பணியில் ஈடுபடுத்தியதே அதுதான் வள்ளலாரின் பெருமை.

சன்மார்க்க விளக்கத்துக்கு வள்ளலாரை உரிமையாக்கியது உயிர்கள் செய்த புண்ணியம். ஒவ்வொரு காலத்தும் சமயக் கொள்கையை உலகில் நிலை நாட்ட அனுப்பப் பெற்ற அருளாளர்கள் எண்ணிக்கையிலடங்காத தொகையினர். அவர்களெல்லாம் தமக்களித்த கொள்கைகளை இவ்வுலகில் விளக்கிச் சென்றவர்களே. ஆனால், வள்ளலார் அவர்களைப் போல என்பதாகப் பொதுவில் அமைத்தல் கூடாது. உலகத்துயிர்களின் நன்மைக்காக இறைவன் கருணையினால் அமைத்த நெறி என்று கருதி, எல்லா அருளாளர்களும் செயற்பட்டவர்களே.

ஆனால், வள்ளலாரிடம் ஒரு புதுமை. சன்மார்க்க நெறியின் பல்வேறு அம்சங்களை அறிதல் அவருக்குத் தேவையான திட்டப்பணி. ஆனால், வள்ளலார் எழுப்பிய முதல் வினா இதுதான். பரம் பொருளின் எந்த ஓர் ஆற்றல் இத்தகைய திட்டத்தை அமைத்தது? அறிவா, ஆற்றலா என ஆய்வு செய்து, பரம்பொருள் உயிர்கள் மேற்கொண்ட அருளிரக்கமே இத்திட்டத்தின் அடிப்படை எனக் கொண்டு, பரம்பொருள் உயிர்கள் மேல், அமைத்த அருளிரக்கத்தின் எல்லையை அனுபவத்தால் கணித்தறிந்து, தானும் அதே அளவில் அமைந்த அருளிரக்கத்தில் நின்று, அனுபவம் பெற்றார்.

பரம்பொருள் உயிர்கள் மேல் வைத்த அருள் இரக்கத்தில் எந்த எல்லையில் நின்று சன்மார்க்கத் திட்டப்பணியை அமைத்ததோ, அந்த அளவுடைய அருள் இரக்க உணர்வை முதலில் அனுபவமாக்கிக் கொண்டார். அந்த அருள் இரக்க அடிப்படையிலேயே கொள்கையை விளங்கிக் கொள்ளவும் செயற்படுத்தவும் முனைந்தார். உயிர்களிடம் கருணை காட்ட வேண்டும் என்ற அளவில் மட்டும் வள்ளலார் அதைக் கொள்ளவில்லை.

''உயிரெலாம் பொதுவின் உளம்பட நோக்குக
செயிரெலாம் விடுக எனச் செப்பிய சிவமே''

என்ற அகவற் பகுதியால் பரம்பொருளில் தன்னை இணைத்து, பரம்பொருள் உயிர்க் கருணை கொண்டு நோக்கும் முறையில் தாமும் நோக்கும் அனுபவம் பெற்று, பின் ஆய்வனுபவத்தின் வழியில் கொள்கையை விளங்கிக் கொள்கிறார்.

உயிரிரக்கம் பேணும் நெறியில் பொதுவினுடன் இணைந்து நின்று, பொதுவின் உளம்பட நோக்கும் அனுபவம் பெற்றதும், அவ்வனுபவத்தின் வழியில் திட்டப் பணியினை நெறிப்படுத்தியும் விளக்கமுறுத்தியும் தொண்டாற்றியது வள்ளலாரிடம் மட்டுமே காணப்பெறும் தனிச்சிறப்பு.

இனி, வள்ளலார் தாம் மேற்கொண்ட திட்டப் பணியில் தோல்வியே பெற்றார் என்றும், ''கடை விரித்தேன் கொள்வாரில்லை, கட்டிக் கொண்டேன்'' என்றும், மனம் வருந்திக் கூறிய வரலாற்று நிகழ்வு உண்டு எனவும் சன்மார்க்க சங்கஞ்சார் அறிஞர்கள் பேசியும் எழுதியும் வருபவை ஆதாரமற்றவை.

சன்மார்க்க சங்கத்தே அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் வருவிக்க உற்றேன் எனவும் சன்மார்க்க சங்கம் தானே நடாத்துகின்றான் எனவும் வள்ளலார் அருளிய பொன்மொழிகளை ஒருமையுணர்வுடன் தேர்ந்து தெளிய வேண்டும். சன்மார்க்க சங்கக் கொள்கை தோல்வி கண்டது எனில் அத்தோல்விக்குரியவர் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே எனக் கொள்ளுதல் நேரியதே.

சன்மார்க்கக் கொள்கையினால் உறுதி செய்யப் பெற்ற பேறுகளை வள்ளலாரே பெற்றாரில்லை என்று கூறும் ஆய்வாளர்கள் அருட்பெருஞ்ஜோதி அகவலை உளம் ஒன்றிப் படிப்பார்களானால் உண்மை உணர்வர்.

சன்மார்க்கக் கொள்கையைப் பரம் பொருளின் திட்டப்படி, இவ்வுலகில் தோற்றியும் வளர்த்தும் சென்ற திருக்கூட்ட மரபு உண்டு. வள்ளலார் அவ்வழி வழி வந்த மரபில் இறுதியாக நின்று, தமக்களிக்கப் பெற்ற திட்டப் பணியை நிறைவுறுத்தி, அக்கொள்கையை முழுமையும் நிறைவும் உடையதாக அமைத்துக் கொடுத்தவர் வள்ளலார்.

## சன்மார்க்கக் கொள்கையின் தொடக்கம்

சுத்த சன்மார்க்கக் கொள்கையை வளர்ப்பதற்கு மூல ஆற்றல் அலகிலா உணர்வு எனப்பெறும் அருள் உணர்வு. அருள் உணர்வுடன் ஆன்மநேய ஒருமைப்பாடு என்ற பொதுமையையும், கட்டற்ற முழுமையுடைய இன்பப்பேறு என்னும் நிறைவையும், இறவாமை என்ற வரமுறு நிலையையும் இணைத்து நிறுத்தினால் தான் வள்ளலார் நெறி எனப் பெறும் சன்மார்க்கக் கொள்கையை நாம் காணமுடியும். மேலே கூறப்பெற்றவற்றுள் எந்த ஒன்று குறைந்தாலும் வள்ளலார் காட்டிய நிறைவுடைய சன்மார்க்கக் கொள்கையாக அமையாது. இந்நெறியைத் தொடங்கிவைத்துத் தொண்டாற்றியவர் யார் என்ற வினாவுக்கு விடை அளித்தவர் வள்ளலாரே. ஐந்தாம் பிள்ளையாக, அதுவும் கடைப்பிள்ளையாக நின்று நிறைவு செய்தவர் வள்ளலாரே.

வள்ளலார் வகுத்துக் காட்டிய அடிப்படையில் சன்மார்க்கக் கொள்கையின் தொடக்கம், வளர்ச்சி, நிறைவு ஆகியவைகளை இத்தலைப்பினுள் வரையறை செய்து, தேர்ந்து தெளியலாம்.

## நடமாடுங் கோயில்

மறுமலர்ச்சியும் புரட்சியும் இசைவும் இணைவும் பெற்றுப் பொலியும் வகையில் புதுமைச் சிந்தனை முறையைத் தோற்றியும் செயற்படுத்தியும் நின்ற முதன்மகனாரே திருமூலர்.

உலகப் பொருள்களைப் பிரிவு செய்து வகைப்படுத்தும்போது நிற்பன, நடப்பன என்ற இரு பிரிவுகள் அமைக்கப் பெற்றன. இரு பிரிவுகளில் அமைந்தன இரு பட்டியல்கள். மரமானது நிற்கும் பொருள் பட்டியலில் பெயர்ப்பதிவு செய்து கொண்டது. அவ்வாறே இயங்கும் தன்மையும் நிலம் பெயர்ந்து செல்லுதலும் வருதலும் உடைய பண்புகளைக் கொண்ட பொருள்கள் நடப்பன என்ற பிரிவுப் பட்டியலில் பெயர்ப் பதிவு செய்து கொண்டன. பொருளைப் பார்க்காமலேயே, அட்டவணையை - பட்டியலைப் பார்த்தவுடனேயே இது இயங்கும் பொருள். இது இயங்காப் பொருள் என்று வரையறை செய்துவிடும் கண்மூடிப் பழக்கம் அரியாசனத்திருந்து அரசு நடத்துங் காலத்தில் திருமூலர் ஒரு புரட்சி செய்தார்.

''நடமாடுங் கோயில்''

என்றார். கோயில் நிலைப்பொருள். அதனை நடமாடும் பொருள் என்றார். நின்றதைச் செயற்படவைத்தார்; செத்தாரை எழுப்பிச் செயற்பட வைத்தார்; இத்தகைய பெருமைகள் எல்லாம் திருமூலருக்கு உண்டு. இவைகளில் அடங்காத வேறொரு பெருமை.

திருமூலர் தம்முடைய புதுமைச் சிந்தனையின் மூலம் கோயிலை நடமாட வைத்தாரா அல்லது நடமாடிக் கொண்டிருந்தவனைக் கோயிலாக்கி, அதனை ஒரே இடத்தில் நிற்கச் செய்து, சமாதி கட்டிக் கோயிலாக்கி, அதனைக் கும்பிடப் பெறும் நிலையை மற்றவர்க்கு வழங்கி ஒரு புதுமையைப் படைத்தாரா ?

கோயில்களெல்லாம் எழுந்து நடந்து உலாவித் திரிகின்றன என்ற நிலை உண்டாகவில்லை. நடமாடிக் கொண்டிருந்தவன் கோயில் நிலை பெறுகிறான். கோயில் நிலை என்றால் ஒரே இடத்தில் நின்று விடுதல் என்பதைக் கொண்டது. 'நடமாடுங் கோயில்' என்றவுடன் நடந்து கொண்டிருந்தவன் ஒரே இடத்தில் கோயிலாக நின்று விட்டான் என்பதும் அன்று. நடமாடும் என்ற அடைமொழியுடன் இன்று

இயங்குவன பல. நடமாடும் நீதிமன்றம், நடமாடும் அஞ்சலகம் என்பனவெல்லாம் முன்னர்ஒரே இடத்தில் அசையாமல் நின்றவை இன்று நடந்து வரும் செயலை மேற் கொண்டன. இத்தகைய சிந்தனைகளை - புதுமை நோக்குகளை முதன் முதலில் தொடங்கி வைத்தவர் திருமூலரே.

## நடமாடுங் கோயிலும் படமாடுங் கோயிலும்

தன்னையே கோயிலாக ஆக்கிக் கொண்டவனை நடமாடும் கோயில் நம்பன் என்றார். நாம் இன்று பார்க்கும் திருக்கோயில் ஒரு வகை நிலைப் பொருளேயாயினும், அதுவும் நடமாடும் நிலையுடையதே என்று குறிப்பிட்டு, அதனைப் படமாடுங் கோயில் பரமன் என்றான்.

திருமூலரின் புதுமையும் பெருமையும் காணப்பெறுவது இனிமேல் தான். நான் ஒருபொருளை 'நடமாடுங் கோயில்' எனப்பெறும் நம்பனுக்குக் கொடுத்தால் அதன் ஒருகூறு கோயிலில் உள்ள பரமனுக்குச் சென்று சேர்ந்து விடும். ஆனால், படமாடுங் கோயில் பகவனிடம் கொடுத்தால் அதன் ஒரு சிறு கூறு கூட, நடமாடுங் கோயில் நம்பனுக்கு வந்து சேராது. இத்தகைய ஒருவழிப் பாதை நிலை ஏன் அமைந்தது ? என்பது வினா.

நடமாடுதல் என்பது செயற்படும் ஆற்றல். கோயில் என்பது கொள்கைக் குவியல். இயல்பாகவே செயற்படுபவனிடம் கொள்கைக் குவிப்பும் இணைகிறது. படமாடுங் கோயிற் பகவன் - செயற்பாடில்லாத கொள்கைக் குவிப்பு. கொள்கைக் குவிப்பால் யாருக்கு என்ன பயன் ?

'நடமாடுங் கோயில்' என்ற புதுமைச் சிந்தனையின் மூலம் நடப்பனவாகிய எந்த உயிரும் கோயிலாந் தன்மை உடையது என்றும், அங்கேதான் செயற்பாடு உண்டு என்றும், படமாடுங் கோயிலில் செயற்பாட்டு நிலை இல்லை என்றும், திருமூலர் வெளிப்படுத்தும் கருத்துகள் புரட்சிப் பாதையில் ஊன்றப்பெற்ற மறுமலர்ச்சி வித்துகளே.

திருமூலரின் இக்கொள்கையை ஒரு சமுதாயப் பின்னணிக் கொள்கை எனக்கொண்டு உரை செய்பவர்கள் உண்டு. மக்கட்

சமுதாயம், அச்சமுதாயத்தின் உறுப்பினர்கள், திருக்கோயில், இவை பற்றிய தொண்டுகள் ஆகியவைகளை இணைக்கும்போது, கற்கோயில்களுக்குச் சென்று தொண்டு செய்பவர்கள் மக்களை நடமாடுங் கோயில்களாகக் கருத வேண்டும்; அவர்களுக்குக் கொடுக்கும் அனைத்து உதவிகளும் கோயிலில் உள்ள பெருமானுக்கும் ஏற்புடையனவாகவே அமையும் என்று விளக்கம் கூறுவார்கள். ஆனால், இத்திருமந்திரம் குறிப்பிடுவது வேறு ஒரு கருத்து. நடமாடும் மக்களைக் கோயிலாக ஆக்குதல் வேண்டும்.

ஆலயம் என்ற சொல்லுக்கு உயிர்கள் - பசுக்கள் (ஆ+லயம்) வந்து லயமாகும் - ஒடுங்கும் இடம் என்பது உரை. உயிர்கள் திருக்கோயிலுக்குச் சென்று இறைவன் திருவடியில் ஒடுங்கும் இடம் ஆலயம் என்றாற்போல நடமாடும் உயிர்கள், அசையாப் பொருள்கள் எல்லாமே கோயில்களாக அமையலாம் என்பதும் கொள்கை. நடமாடும் உயிர்களே கோயிலாகும் முறையைத் தொண்டு எனக் கொண்டு செயற்படுத்திய முறையைத் திருஞான சம்பந்தரிடத்தே காணலாம்.

''தாவில் சராசரங்களெல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையார்'' என்பது தெய்வச் சேக்கிழார் தம் திருவாக்கு. இவ்வகையில் சரம் + அசரம் என்பன அசைவன அசையாதன - நடப்பன நிற்பன ஆகிய எல்லாப் பொருள்களையும் உள்ளடக்கிய தொடர். எல்லாப் பொருள்களிலும் சிவம் இருக்கிறது. ஆயினும், சிவம் பெருகித் தோன்ற வேண்டும் என்ற தொண்டினை மேற்கொண்டவர் திருஞான சம்பந்தர்.

திருஞானசம்பந்தரின் தொண்டின் அடிப்படையானது நிற்பன, நடப்பன ஆகிய அனைத்தும் சிவம் பெருகி நிற்கும் இடமாக - திருக்கோயில்களாக - சிவனுறை தலங்களாக அமைய வேண்டும் என்பதேயாயின், வள்ளலாரின் தொண்டின் அடிப்படையானது அவைகளெல்லாம் 'சத்திய ஞானசபை' என அமையவேண்டும் என்பதே. இவ்வடிப்படையிலேயே சுத்த சன்மார்க்கத் தொடக்கமும் நிறைவும் அமைகின்றன.

வள்ளலார் தமக்குச் சுத்த சன்மார்க்கத்தின் பலநிலைகளை விளக்கிய குருவே திருஞானசம்பந்தர் என்றும், தம்மை அந்நெறிக்குத் தகுதியாக்கிய பெருமை அவருக்கே உரியது என்றும், இந்நெறியைத்

தொடங்கி, அதனை நெறிப்படுத்தி ஆட்சி செலுத்திய முதல்வர் அவரே என்றும், தாம் இயற்றிய ஆளுடைய பிள்ளையார் அருண்மாலையிற் குறிப்பிட்டுக் காட்டுகின்றார்.

## முதலரசு இயற்றிய துரை

''முத்தியற் சிவிகை இவர்ந்து அருள் நெறியில் முதலரசு இயற்றிய துரையே' என்பது வள்ளலார் திருஞானசம்பந்தரை நமக்கு விளக்கிக் காட்டும் அருளுரை.

அருள்நெறியின் முதற்குருவாக நின்று, அருளாட்சி செய்தற்கு முதலுரிமை பெற்று, அருளாட்சியைத் தொடங்கியவர் திருஞான சம்பந்தர். வள்ளலார் அந்த அருளாட்சியின் தனிச் செங்கோல் ஏந்தி நின்று, அதனை முழுமை செய்து நிறுத்தும் வகையில் கடைப்பிள்ளை ஆகிறார்.

அருள்நெறியே தம் இருவர்க்கும் மூலம் என்பதை ஆளுடைய பிள்ளையார் அருண்மாலையிற் குறிப்பிடுகின்றார்.

உலகியல் உணர்வும் அலகிலா உணர்ச்சியும் ஆகிய இவற்றின் உண்மையை உணர்த்திய சற்குருவே ஞானசம்பந்தர். அலகிலா உணர்ச்சி என்பதுவே அருள் உணர்வு.

உயிர் அனுபவம், அருள் அனுபவம், சுத்த சிவ அனுபவம் என்ற மூன்றையும் விளக்கி, மெய்ந்நெறி இதுவே எனக்காட்டிய சற்குருவே ஞானசம்பந்தர் என்று வள்ளலார் அவரைப் பாராட்டியுள்ளார்.

உயிர்களைப் பொத்தியிருக்கிற மூலமலம் எனப்பெறும் ஆணவ மலத்தை முற்றாக நீக்கவேண்டுமாயின், அதனை அருளனுபவம் என்ற ஒன்றனால்தான் நீக்க முடியும் என்பதை எடுத்துக்காட்டி, இது சத்தியம் என்று எனக்கு அருள்புரிந்த **'தனிப்பெருங் கருணையே'** (இத்தொடரே பின்னர் இந்நெறியின் மகாமந்திரத்தின் ஒரு பகுதியாயிற்று). திருஞானசம்பந்தர்.

## சமயமும் அருள்நெறியும்

உலகியல் உணர்வை அடிப்படையாக நிறுத்தி, அவ்வடிப்படையின் மேல் எழுந்தவைகளே சமய நெறிகளும் மத

நெறிகளும். எனவே, சமயங்களையும் மதங்களையும் உண்மையாகத் தெரிந்து கொள்வதற்கு உலகியல் உணர்வு தேவை.

உலகியல் உணர்வு பெற்று, அதில் நிறைவு பெற்று, பின்னர் அலகிலா உணர்ச்சி பெற்று, அவ்வுணர்ச்சியின் துணையினால் அருள் நெறியில் நிற்றல் என்பது முறையுற அமைந்த படிநிலை வளர்ச்சி.

ஆயினும், வள்ளலார் இத்தகைய படிநிலை வளர்ச்சி முறைப்படி வரவில்லை. அவரைத் திருஞானசம்பந்தர் நேராகவே அருள்நெறியில் கொண்டுவந்து நிறுத்துகின்றார்.

''உலகியல் உணர்ச்சி ஒரு சிறிதும் இல்லாத என்னை அருள்நெறியில் ஏற்றினாய்; தகுதியின்மையால் யான் விலகுங் காலங்களிலெல்லாம் மீண்டும் மீண்டும் ஏற்றினாய், முடியாத காலத்து, என்னை அருள் நெறியில் ஏற்றி, அங்கிருந்து விலகாமல் இருப்பதற்காக அலகிலா உணர்ச்சியைத் தந்தனை'' என்று ஆளுடைய பிள்ளையார் அருள் மாலையின் முதல் அருட்பாவிலேயே கரைந்து கரைந்து கூறும் நயத்தையும், அதில் தேங்கிக் கிடக்கும் ஞானசம்பந்தரின் அருட் கடற் பெருமையையும் உள்ளத்தே நிறைவித்தல் வேண்டும்.

திருஞானசம்பந்தரின் மேல் அருளப்பெற்ற முதலாம் அருட்பாவானது அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். நான்கு வரிகளில் முடிய வேண்டிய அந்த அருட்பா ஐந்து வரிகளாகச் சென்று நிற்கின்றது. நான்கு படிநிலைகளில் மட்டுமே நிறைவுறுவது இவ்வுலகியல். ஆனால், ஐந்தாவது நிலையில் நின்ற அருள்நெறிக்கு இவ்வுலகில் எங்கே இடம் ? நான்கு வரிகளின் இடையிலும் முடிவிலும் தான் ஐந்தாவதாகிய அருள்நெறி நிற்க முடியும் என்ற உண்மையை உணர்த்தும் போக்கிலேயே வள்ளலார் அந்த முதல் அருட்பாவை நான்கு வரிகளாகவே அமையுமாறு திருத்தம் செய்யவில்லை.

மேலும், வள்ளலார் உத்தர ஞான சிதம்பர மாலையில்

''இணை என்று தான் தனக்கு ஏற்றது போற்றும் எனக்கு நல்ல
துணை என்று வந்தது சுத்த சன்மார்க்கத்தில் தோய்ந்தது என்னை
அணை என்று அணைத்துக்கொண்டு ஐந்தொழில் ஈந்தது
**அருளுலகில்**
**திணை ஐந்தும் ஆகியது** உத்தர ஞான சிதம்பரமே''

என்று அருளுவதை நோக்கும்போது அருளுலக ஒழுக்கம் ஐந்து எனத் தெரிய வருகிறது. ஆனால் சன்மார்க்கம் எனப்பெறும் அருள் நெறியானது சதுரப்பேரருள் நெறி என விளக்கப்பெற்றிருத்தலின் நிலம் நான்காய்த் திணை ஐந்தாய் நிகழ்வதும் அருளுலக நெறிக்கு இசைந்தது போலும்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நால்வகை நிலத்திலேயே நிலமில்லாத பாலையொழுக்கமும் நிகழும் என்ற அகத்திணை இலக்கணம் போலவே அருளுலக இலக்கணமும் அமையும் போலும். எனவே, ஆளுடைய பிள்ளையார் அருள்மாலையின் முதற்பாட்டு நான்கடிக்கும்மேல் ஐந்தடியாகச் சென்று நின்றபோது வள்ளலாரும் அருட்செயல் என நினைந்தே, நான்கடியாகச் செப்பம் செய்யாது விடுத்தார் போலும்.

திருநெறி என்றும் பெருநெறி என்றும் திருஞானசம்பந்தராற் குறிக்கப்பெறும் அருள்நெறியே வள்ளலாரால் சுத்த சன்மார்க்கத் தனிநெறி என்றும் பொதுநெறி என்றும் குறிக்கப் பெறுகின்றது. சன்மார்க்கம் என்பதை உண்மைநெறி, மெய்ந்நெறி என்றெல்லாம் விளக்குவது வள்ளலார் மரபு. இந்நெறியின் முதற்படி வளர்ச்சியைத் திருஞானசம்பந்தரே நின்று செய்தருளினார் என வள்ளலார் கருதுகிறார். ஞானப்பாலை உமையம்மையும், உலகு புகழ் குருவாக அமைக்கும் முறையில் பல்லக்கு, சின்னம் முதலியவைகளைப் பெருமானும் அளித்தமையின் நோக்கம் ஞானசம்பந்தரே இந்நெறியைத் தழைக்க வைக்க வந்த முதன்மை அருளாளராகிறார் என்பதே. இறைவன் அவ்வாறு அருள் நெறியின் குருவென அறிமுகப்படுத்துகிறார். திருஞானசம்பந்தரிடம் நிகழும் அருள் நிகழ்வுகளையும் தமக்கு அவர் அருள்நெறியை அறிவித்தும் அருளாற்றலால் அடைவித்தும் நிகழ்த்திய செயல்களையும் இணைத்து நோக்கிய நிலையில் வள்ளலார் இம்முடிவுக்கு வருகிறார்.

''பயிலு மூவாண்டில் சிவைதரு ஞானப்
பால் மகிழ்ந்துண்டு மெய்ந் நெறியாம்
பயிர் தழைந்துற வைத்தருளிய ஞான
பந்தன் என்று ஓங்கு சற்குருவே''

என்றும், அருள்நெறிக்கு வேண்டிய மூவகை அனுபவங்களையும் அவரே தமக்குத் தந்தருளினார், ஐயமகற்றினார் என்றும் வள்ளலார் கூறுவதன் நுட்பத்தை உணர்தல் வேண்டும்.

இனி, **திரு அருள் விலாசம்** என்ற தலைப்பில் இரண்டே அருட்பாக்கள் அமைந்தள்ளன. அவைகளை ஆளுடைய பிள்ளையாரின் அருளிப்பாடுகளுடன் இணைத்து உணரும் முறையை - உணர வேண்டும் என்பதை வள்ளலார் சுட்டிக் காட்டியுள்ளார். அவ்விரண்டு அருட்பாக்களையும் இங்கே காணுதல் நலம் பயக்கும் ஒன்றாகும்.

''ஆண்டவன் நீ ஆகில் உனக்கு அடியனும் நான் ஆகில்
அருளுடையாய் இன்றிரவில் அருள் இறையாய் வந்து
நீண்டவனே முதலியரும் தீண்டரிதாம் பொருளின்
நிலைகாட்டி அடிமுடியின் நெறிமுழுதும் காட்டி
வீண்டவனே காலையில் நீ விழித்தவுடன் எழுந்து
விதிமுடித்துப் புரிதி இது விளங்கும் எனப் புகல்வாய்
தாண்டவனே அருட்பொதுவில் தனிமுதலே கருணைத்
தடங்கடலே நெடுந்தகையே சங்கரனே சிவனே''

திருநெறி **மெய்த் தமிழ்மறையாம் திருக்கடைக்காப் பதனால்**
திருவுளங்காட் டியநாளில் தெரிந்திலன் இச்சிறியேன்
பெருநெறி என் உளத்திருந்து காட்டிய நாள் அறிந்தேன்
பிழைபடாத் தெய்வமறை இதுவெனப் பின்பு உணர்ந்தேன்
ஒருநெறியில் எனதுகரத்து உவந்தளித்த நாளில்
உணராத உளவையெலாம் ஒருங்குணர்ந்து தெளிந்தேன்
தெருள்நெறி தந்தருளும் மறைச் சிலம்பணிந்த பதத்தாள்
சிவகாம வல்லிமகிழ் திருநடத் தெள் ளமுதே''

என்பனவே அவ்விரு அருட்பாக்களும். இவ்விரு அருட்பாக்களாலும் நாம் உணர வேண்டிய கருத்து ஒன்று உண்டு. மேலே உள்ள இரண்டு பாக்களில் கேட்கப் பெற்றவைகளுக்கெல்லாம் ஆளுடைய பிள்ளையார் அருள்மாலையில் - திருஞானசம்பந்தரே தமக்கு விளக்கம் அளித்ததாகக் குறிப்பிடுகின்றார். அவ்வகையில் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே ஞானசம்பந்தராக நின்று இந்நெறியை விளக்கம் செய்ததாக வள்ளலார் கருதுவதாகக் கொள்ளலாம்.

இனி, வள்ளலார் தம்மைச் சிற்றம்பலவன் செல்வப்பிள்ளையாக ஆக்கினான் என்று 'செய்பணி வினவல்' என்ற பதிகம் முழுவதிலும் அமைத்துக் கூறி, செல்வப் பிள்ளையாகத் தம்மை அமைத்தாலும் குருவாக இருந்து தமக்கு இந்நெறி முழுவதையும் விளக்கமாக

அமைத்தான் என்று கூறி, விளக்கம் அமைத்துக் காட்டிய முறையைத் திருஞானசம்பந்தர் செய்தருளியதாகவே அமைக்கின்றார். இதனாலேயே தம்முடைய பணித் திட்டத்துக்கு உரிய நெறியை வள்ளலார் முதலில் **''குருநெறி''** என்றே அமைத்து, அதுவே பெருநெறி என்றும் திருநெறி என்றும் விளக்குகிறார்.

> **''குருநெறிக்கே** என்னைக் கூட்டிக் கொடுத்தது கூற அரிதாம்
> **பெருநெறிக்கே** சென்ற பேர்க்குக் கிடைப்பது பேய் உலகக்
> கருநெறிக்கு ஏற்றவர் காணற்கு அரியது காட்டுகின்ற
> **திருநெறிக்கு** ஏற்கின்றது உத்தர ஞான சிதம்பரமே''

என்ற உத்தர ஞான சிதம்பரமாலை ஏழாம் அருட்பாவை நோக்குக.

அடுத்து, சுத்த சன்மார்க்கத்தில் செத்தாரை எழுப்புவது அமையும் என்ற கருத்தை வலியுறுத்திச் சொல்வதற்குத் திருஞானசம்பந்தரின் வரலாற்றுப் பகுதியே பெருந்துணை புரிகிறது.

> ''ஆண்பனை பெண் பனையாக்கி அங்கமது அங்கனையாய்
> ஆக்கி அருள் மணத்தில் ஒளி அனைவரையும் ஆக்கும்''

எனத் தொடங்கும் 'அன்புமாலை' மூன்றாம் அருட்பாவில் திருஞான சம்பந்தர் அருளிய அருளற்புத நிகழ்வுகளை எடுத்துக் காட்டிப் பேசும் வள்ளலார் சன்மார்க்க நெறியின் சாதனைகள் பலவற்றை ஞானசம்பந்தப்பெருமான் அருள்வாழ்விலிருந்தே எடுத்துக் கொள்கிறார். இந்நிலையில் அருள்நெறி என்னும் திருநெறிக்கு முதலரசு இயற்றிய துரையாக, குருவாக, சிவிகையூர்ந்து அருளாட்சி நடத்திய அரசாக ஞானசம்பந்தப் பெருமானை அமைத்துக் கொள்கிறார்.

தமக்குக் குருவாக நின்ற ஞானசம்பந்தரையும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரையும் ஒருவர் எனவே கொண்டு, அருட்பெருஞ்ஜோதி அகவலில் அமைத்துக் கூறும் வள்ளலார் கருத்தை நோக்கும் போது இந்நெறியின் முதற்படியில் நின்ற பெருமை திருஞான சம்பந்தர்க்கே உண்டு எனக் கொள்ளலாம்.

> ''என்னையும் பொருளென எண்ணி என்னுளத்தே
> அன்னையும் அப்பனும் ஆகிவீற் றிருந்து
> உலகியல் சிறிதும் உளம்பிடி யாவகை

அலகில்பேர் அருளால் அறிவது விளக்கிச்
சிறுநெறி செல்லாத் திறனளித்து அழியாது
உறும்நெறி உணர்ச்சி தந்து ஒளியுறப் புரிந்து
சாகாக் கல்வியின் தரமெலாம் உணர்த்திச்
சாகா வரத்தையும் தந்துமேன் மேலும்
அன்பையும் விளைவித்து அருட்பே ரொளியால்
இன்பையும் நிறைவித்து என்னையும் நின்னையும்
ஒருரு வாக்கி யான்உன்னிய படியெலாம்
சீருறச் செய்து உயிர்த்திரம்பெற அழியா
அருளமுது அளித்தனை அருள்நிலை ஏற்றினை
அருளறிவு அளித்தனை அருட்பெருஞ் ஜோதி''

என்ற அருட்பெருஞ்ஜோதி அகவல் *1561* முதல் *1574* வரை உள்ள அடிகளை நோக்குக.

## முதற்படியும் முதற் குரவரும்

திருஞானசம்பந்தர் தமக்கு முன்னிருந்த சமயங்கள், மதங்கள் ஆகிய எல்லாவற்றையுங் கடந்த ஒருவகைத் திருநெறியைத் தொடங்கி வைக்கின்றார்கள். திருஞானசம்பந்தரின் திருத்தொண்டின் பெருமையை எடுத்து விளக்கிய நம்பியாண்டார் நம்பிகள் ''பதிகப் பெருவழி என்று சொல்லப்பெறும் ஒருவகைப் புதிய நெறியை இவ்வுலகில் அமைத்து நிறுவியவர் ஞானசம்பந்தர்'' என்று சிறப்பிக்கின்றார். திருஞானசம்பந்தரின் திருநெறித்தொண்டு, பெருநெறிப் பண்பு முதலியவைகளை யான் எழுதி, சென்னைப் பல்கலைக்கழகத்துத் தத்துவத் துறைச்சார்பில் வெளியிடப்பெற்ற, திருஞானசம்பந்தர் - ஓர் ஆய்வு என்ற நூலின் இரண்டு பாகங்களையும் படித்துத் தெளியலாம். ஈண்டு விரிப்பிற் பெருகும்.

சைவ சமய நற்குரவர்கள் நால்வரையும் பதிகம்பாடி வணங்க முற்படும் வள்ளலார் ஒருவகைப் புதிய தொடரமைப்புகளின் மூலம் நால்வரையும் அறிமுகப்படுத்துகின்றார். அருளாளர்கள் நால்வரையும் அவர்கள் மேற் பாடிய மாலைகளையும் வள்ளலார் முறையே

ஆளுடைய பிள்ளையார் அருண்மாலை
ஆளுடைய அரசுகள் அருண்மாலை
ஆளுடைய நம்பிகள் அருண்மாலை
ஆளுடைய அடிகள் அருண்மாலை

என அவர்தம் பெயர்களுடன் 'ஆளுடைய' என்பதையும் இறுதியில் அனைவர்க்கும் அருண்மாலை என்பதையும் அமைக்கின்றார். அவர்களைத் தாம் உணர்ந்த முறையில் கூறினார் என்றும் கொள்ளலாம் அல்லது உலகத்தவர்கள் அவர்களை அவ்வாறு உணர வேண்டும் என்ற குறிப்பில் கூறியிருக்கலாம் என்றும் கொள்ளலாம்.

சைவ சமய அருளாளர்கள் நால்வரையும் வள்ளலார் தம் எழுத்துமூலம் உறுதியளித்துள செய்திகளை இணைத்துத் தெளிந்து கொள்ளல் வேண்டும்.

நால்வர் பெருமக்களும் நேராகத் தமக்கு அருளியவை போக, அவர்தம் திருமுறைகள், திருவாசகம் ஆகியவற்றிலிருந்து பல்வேறு உண்மைகளையும் பிழிந்தெடுத்து நமக்குக் கொடுத்து, நம்மையும் அனுபவிக்க வைக்கின்றார் வள்ளலார். இவ்வகையில் திருஞான சம்பந்தர் அருளிய திருத்துருத்திப் பதிகம் இரண்டனுள் ஒன்று சகல கேவலப் பதிகம். மற்றொன்று சுத்தப்பதிகம். அப்பதிகத்துள் வரும் செய்திகள் முன்னுறு நிலையையும் பின்னுறு நிலையையும் இணைக்கும் பகற்ப்திகம் எனக் கொள்கின்றார். விளக்கம் முன்பேயும் எழுதப் பெற்றுள்ளது.

திருஞானசம்பந்தப் பெருமான் திருவீழிமிழலையில் வாசியில்லாக் காசு பெறுகிறார். வேதாரணியத்தில் அப்பரடிகளால் மறைக்கதவம் திறக்கப் பெறுகிறது. அன்றிரவு திருமறைக் காட்டில் படுத்துக் கண் மூடி துயரத்துடன் இருந்த அப்பரடிகளைப் பெருமான் அந்தண உருவில் வந்து எழுப்பி உடன் வரச்சொல்லி, சென்று மறைந்து விடுகின்றார். ஞானசம்பந்தரும் உடன்வர, திருவாய்மூரில் அம்பலத்தாடும் கூத்தப்பெருமானாக வெளிப்படுகிறான். திருஞானசம்பந்தரும் அப்பரடிகளும் நேர்க் காட்சியைப் பெற்று வணங்குகின்றார்கள். இங்கே ''அரசுங் காணக் காட்டுதலும்'' என்பது சேக்கிழார் வாக்கு. அப்பரடிகளை எழுப்பி, தன்னைத் தொடர்ந்து வருமாறு சொல்லிச் சென்ற இறைவன் வாய்மூரில் ஒளிக்கவே, ஞானசம்பந்தர் அங்கே பயன்படுத்தும் ஆணைமொழி'' ''இவராணீர்'' என்பது. இத்தொடர் இரு பொருள் படுவது. இவரை (அப்பரடிகளை) ஆளாகக் கொண்ட நீர் (இறைவர்) என்பதும் இவரால் ஆளப்பெற்ற நீர் என்பதும் இருவகை உரைகள். ''இவரை ஆளும் நீர்'' என்று பொருள் கொள்ளும்போது அப்பரடிகள் அடிமை இறைவன்

ஆண்டான் என்பது கருத்து. இவரால் ஆளப்பெறும் நீர் என்று உரைகொள்ளும்போது இறைவன் அப்பரடிகளால் ஆளப்பெறுபவனாக அமைகிறான். இதுவே இருமையும் கலந்த ஒருமைநிலை. இதன் கருத்து, இறைவன் ஒவ்வொருவருடைய உயிரிலும் உடல் அணுக்களிலும் கலந்திருக்கிறான். அப்பரடிகள் உயிரில் உள்ள இறைவன் அப்பரடிகளால் போற்றிப் பாதுகாக்கப் பெறும் பரம்பொருளே. இவ்வகையில், அப்பரடிகளால் ஆளப்பெறுபவன் இறைவன் என்ற விளக்கம் அமைகிறது. எனவே, எந்த ஓர் உயிரும் தம்முள் இருக்கும் பரம்பொருளோடு கலத்தல் அல்லது அதை உணர்ந்து, தெளிந்து, அதனுடன் கலந்து இன்புறுதல் என்பது ஒருவகை நெறி எனக் கொள்ள வேண்டியுள்ளது. ''இவர் ஆள் நீர்'' என்ற தொடரைச் சேக்கிழார் ''ஆளுடைய'' என வழங்குகிறார். வள்ளலாரும் அவ்வழியிலேயே ''ஆளுடைய'' என்ற சொல்லை இணைத்தே நால்வரையும் குறிப்பிடுகின்றார். இதன் பொருளையும் வரலாற்றையும் இணைத்து வள்ளலார் ஒரு பதிகம் அருளுகின்றார்.

வள்ளலார் அருளுகின்ற அருட்பிரகாச மாலை நூறுபாக்களிலும் ஒருமையுற விளங்கும் உண்மையைக் காண வேண்டும்.

> ''இரவில் யான் இருக்கும் இடந்தேடி அடைதல்
> கதவந் திறப்பித்தல்
> வருக என அழைத்தல்
> கையில் ஒன்று கொடுத்தல்''

என்ற நான்கு செயல்கள். கதவத்தைத் தானே திறக்கவில்லை, கதவம் திறப்பித்தது இறை; திறந்தவர் அப்பரடிகள். திருஞானசம்பந்தர் வேண்டுகோளுக் கிணங்க, அப்பரடிகள் மறைக்கதவம் திறந்தார். அப்பரடிகளையும் எழுப்பியது. பின்னர்த் திருவருள் செய்தது. இங்கே கதவந்திறத்தல் என்பது வெளிக்கதவம் திறப்பித்தல். திருப்பூட்டுத் திறத்தலாகக் கொள்ளற்க. கையிலொன்று கொடுத்தது வாசியில்லாக் காசு பெறுதல் என்ற குழூஉக் குறி, ஞானசம்பந்தரும் அப்பரும் உள்ளிட்ட இச்செயல்களை நமக்கு எடுத்துக் காட்டும்

> ''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
> மறைமொழி''

என நின்றதே ''ஆளுடைய'' என்பது.

நான்காந் திருமுறைப் பிற்பகுதியில் உள்ள அன்புமாலைப் பதிகத்தில் அதிசயம் நடைபெறுகிறது. அது அப்பதிகத்தின் ஒன்பதாம் பாட்டில் தொடங்கிப் பத்தாம் பாட்டில் அனுபவப்பெற்றுவிடுகிறது. பதினொன்றாம் பாட்டு முதல் அனுபவம் வேறுபட்டுவிடுகிறது. பதிகத் தொடக்கம் அன்புமாலை. பதிக இறுதியில், ''இதுவரை **அற்புதமாலை;** இனி **அருட்பிரகாச மாலை**'' என்ற குறிப்புக் காணப் பெறுகிறது.

என்னைத்தேடி இரவில்வந்து கதவந் திறப்பித்து ஒன்று கொடுத்து 'இருத்தி' என உபதேசித்தாய் என்பது முதலிய அனுபவங்கள் நிகழ்கின்றன. இங்குள்ள அனுபவம் முன் தெரிந்தும் தெரியாதிருந்தது. பின்னர் உணர முடிந்தது. உணரமுடிந்தமைக்குக் காரணம் கதவு திறப்பித்த நிலையே.

வள்ளலார் தில்லைமன்றிடையே அர்ச்சகரால் திரைதூக்கத் தரிசித்த காலத்தில் அவருக்கு ஐந்து மாத அகவையே (ஐந்துமாதக் குழந்தை). அங்கே அவர்பெற்ற அனுபவம் பூர்வ ஞானசிதம்பரம். பின்னர் மறுபடியும் மறதி.

அடுத்து, அப்பரடிகளால் மறைக்கதவம் திறக்கப் பெறுகிறது. எழுப்பப் பெறுகிறது. அருள்நெறி அனுபவம் முழுமையையும் பெறுகிறார். திருநெறி எனப்பெறும் அருள்நெறி அனுபவம் முழுவதையும் விரைந்தளிக்கும் ஆற்றல் தம் குருவாகிய ஞானசம்பந்தரிடம் உள்ளது எனக் காண்கிறார்.

''தாவில் சரா சரங்களெல்லாம் சிவம் பெருக்கும் நிலை'' என்பது திருக்கூட்ட மரபில், சன்மார்க்க நெறியின் முதற்படிநிலைத் தொண்டு என அமைகிறது. இத்தகு முதற்படியில் நின்று ஞானசம்பந்தர் எனப்பெறும் அருளாட்சி முதற்குரவர்

1. நிற்பன, நடப்பன எனப்பெறும் அனைத்திடத்தும் சிவம் பெருகச் செய்தல்.

2. அலகிலா உணர்ச்சியைக் கொடுத்து, அருள் நிலையில் ஏற்றி, பின்னர். முன்னுறுநிலையையும் பின்னுறு நிலையையும் ஒருமையுணர்வுடன் உணர வைத்தல்.

3. மறைக்கதவந் திறப்பித்து, 'இவராள்நீர்' என்ற மறைமொழியால் எழுப்பி, வாசியில்லாக் காசு எனப்பெறும் அருளமுதம் தருதல்.

4. அருள்நெறியில் ஆண்பனை பெண்பனையாகும். இதனால், ஆண்மையும் பெண்மையும் கடந்த பொதுமைநிலையே அருள்நிலை. எலும்பு பெண்ணாதல் என்ற அருள் வல்லபம். அருள்நெறியில் இணைதலே பெருமணம். அருட்காட்சியைக் கண்டவர்களும் அரிய ஞானவடிவடைவர்.

என்ற உண்மைகளை விளக்கினார்.

எனவே, எந்த ஒன்றையும் சிவமாக்கி, அருள்நலம் பெருகச் செய்து, அதனை ஆண்மை பெண்மை கடந்த பொதுமை நிலையில் இருத்தி, ஒருமையுணர்வினால் முன்னுறு நிலையும் பின்னுறு நிலையும் இது என உணர்த்தி, மறதி வாராதவாறு மறைக் கதவம் திறப்பித்து, ''இவராள்நீர்'' என்ற மறை மொழியால் எழுப்பி, மீதானம் என்னும் தலத்தே இருத்தினார் உத்தம சுத்த சற்குருவாம் ஆளுடைப் பிள்ளையவர்கள். சதாசிவ ஆட்சி எல்லையைக் கடப்பித்து, பரநாதத்தலத்து இருத்துதல் வரையில் ஞானசம்பந்தர் முதற்படியில் நின்று, நிலை நாட்டிய கொள்கை எனக் கொள்ளல் வேண்டும். மீதானத்தில் இருத்தியமையால் இனிச் சாதல் இல்லை. ஒருமையுணர்வினால் முன்னுறு நிலையும் பின்னுறுநிலையும் உணர்த்தப் பெற்றன. (விரிவஞ்சி நிறுத்தப் பெறுகிறது. விரிக்கிற் பெருகும்).

## இரண்டாம் படியின் கொள்கையும் குரவரும்

ஆளுடைய பிள்ளையார் காலத்திலேயே ஆளுடைய அரசுகள் எனப் பெறும் அப்பரடிகள் வாழ்ந்தவர். ஆளுடைய பிள்ளை எனப் பெறும் திருஞான சம்பந்தருடன் இணைந்து தொண்டாற்றியவர். பிறப்பாலேயே சைவராக இருந்தும் சைவத்தை விட்டுச் சமணம் சார்ந்து, பின் சைவத்துக்கு மாறி வந்தவர்.

''திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறிவாழ வரு ஞானத் தவமுனிவர்'' எனச் சேக்கிழாரால் அறிமுகம் செய்யப் பெற்றவர்.

''திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட திருநாவுக்கரசர்'' என்பது சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் அப்பரடிகளை எடுத்துக் கூறி, அடிமையாகும் முறை.

''அப்பர்'' என அழகுத் தமிழால் மழலை ததும்ப அழைப்பவர் ஞானப்பாலருந்திய நற்றமிழ்க் குழந்தை.

மருள்நீக்கியார் இளமைப் பெயர்; ''தம்பியார்'' என்ற செல்லப் பெயர் தமக்கையார் திலகவதியாரளித்தது; தருமசேனர் முதலிய பல பெயர்கள் சமண சமயத்தில்; 'திருநாவுக்கரசு, என்பதை இறைவனளித்த பெயர் எனக் கொள்வது மரபு. நிகழ்ச்சிக்குரிய வரலாற்றுச் சான்று இல்லை. 'திருநாவுக்கரசு' என்ற ஒலியில் தொண்டு என்ற ஒன்று வளர்ந்து வந்து கொண்டிருக்கிறது என்றார் சேக்கிழார்.

அப்பரடிகளை எந்த ஒரு பொருள் சேர்கிறதோ அது சத்தியத் தன்மை பெறும். அது குற்றமுடைய பொருளாயின் நற்பொருளாக நின்று நன்மை பயக்கும். 'திருநாவுக்கரசு' என்ற ஒருசொல் அவருடன் சேர்ந்தது அதுவே மந்திர நற்றுணையாக நின்று அப்பூதி அடிகளாரின் குடும்பம் முழுவதையும் முத்திப் பெருவாழ்வடையச் செய்தது.

''உற்றானலன் தவம் தீயின்நின்றான் அலன் ஊண் புனலா
அற்றான் அலன் நுகர்வும் திருநாவுக்கரசு எனும் ஓர்
சொற்றான் எழுதியும் கூறியுமே துன்பில் பதம்
பெற்றான் ஒருநம்பி அப்பூதி என்னும் பெருந்தகையே''

என்பது கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகளின் நால்வர் நான் மணிமாலை.

அப்பரடிகளின் திருக்கரங்களைச் சேர்ந்ததனாலேயே உழவாரமும் திருமுறைகளால் பாராட்டப் பெறும் சிறப்பும் அன்பர்களால் வணங்கப் பெறும் சிறப்பும் பெற்றது. அப்பரடிகளின் திருவுருவச் சிறப்பினைச் சேக்கிழார்,

''சிந்தை இடையறா அன்பும் திருமேனி தன்னில் அசைவும்
கந்தை மிகையாம் கருத்தும் **கைஉழவாரப் படையும்**
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற்பொலி திருநீறும்
அந்தமிலாத் திருவேடத் தரசும் எதிர் வந்தணைய''

என்று பாராட்டுவது கொண்டு (பெரியபுராணம் 2173) தெளியலாம்.

## ஆளுடைய அரசுகளின் தொண்டு

ஆளுடைய அரசுகள் எனப்பெறும் அப்பரடிகளைப் போற்றுமுகத்தான் வள்ளலார் சில நுட்பமான கருத்துகளை அமைத்தருளுகிறார்.

''ஆகம நெறியை வளர்க்க வந்த வள்ளல்''

''ஓங்காரத் தனிமொழியின் மெய்மையை உணர்த்தவேண்டும்''
என்று வேண்டுகின்றார்.

என்னுள் மதிவிளக்கை ஏற்றி அருண் மனையின் ஞான
வாழ்வு அடையச் செய்தல் வேண்டும்,
ஒண்ணுளே ஒன்பது வைத்தாய் என்ற திருமுறை
புகன்ற அருட்குரு

அப்பரடிகளின் மரபு அருண்மரபு; திலகவதியார்
அருள்வழங்கும் அம்மை; உழவாரம்
அப்பூதியடிகட்கு இன்பந்தந்த பெருநெறித் துணை.
சேய்மை விடாது அணிமையிடத்து ஆளவந்த செல்வர்''

என்பன ஆளுடைய அரசுகளைப் பற்றி வள்ளலார் கூறுவன.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் ஒரே காலத்தவராக நின்று சைவசமய வளர்ச்சியை மேற்கொண்டவர்கள். இவர்கள் இருவரும் இணைய நின்று பணியாற்றுமாறு அமைத்த திருவருட் செயலை வள்ளலார் நினைவு கூர்கிறார்.

திருஞானசம்பந்தர் மகன்மை நெறியில் நின்று பணியாற்றியவர். திருநாவுக்கரசர் ஆண்டான் அடிமை என்ற முறையில் நின்றவர். திருஞானசம்பந்தர் கொள்கை விளக்கம் செய்ய வந்த குருவாக நின்று, ஞானம் விளக்கி, அருள்நெறியை ஆட்சி செய்த முதல்வராகிறார். திருநாவுக்கரசர் திருநெறிய தமிழ்க் கொள்கையைச் செயல் முறைப்படுத்தி வெற்றி கண்டவர். ஆகமம் ஆகி நிற்றல் என்பதற்குத் தாமே இலக்கியமாக, எடுத்துக் காட்டாக நிற்றல் என்பது பொருள். சிவபரம் பொருளைத் தலைமை எனக் கொண்டு தாம் அடிமை என நின்ற அப்பரடிகள் அடிமையின் இலக்கணத்துக்கு இலக்கியமாக நின்றவர்கள். திலகவதியாரை முன்னிறுத்தி, உழவாரத்தைப் பின் நிறுத்தி இடை நின்ற பேறாளர். அவ்வகையில் அகரத்திற்கும் மகரத்திற்கும் இடை நின்ற உகரமாக - அருளாக நின்றவர். திலகவதியாரை ஞானப் பகுதியாகவும் - வேதப்பகுதியாகவும்; உழவாரத்தைத் தொண்டு எனப் பெறும் ஆகமப்பகுதியாகவும் இருபக்கம் நிறுத்தி, அவைகளைத் தாங்கும் அடிமை என நின்றார்.

சைவமே மெய்ந்நெறி என்பதையும், சிவமே தனித்தலைவன் என்பதையும், தொண்டு நெறியாலேயே உலகுக்கு உணர்த்தியவர். அந்தணராம் அப்பூதியடிகள் ''திருநாவுக்கரசு'' என்ற ஒரு பெயரைச் சொல்லியே குடும்பத்துடன் பேரின்ப வாழ்வு பெற நின்றார். அடிமை என நின்றே அரவு தீண்டிய மகனை உயிர் பெற்றெழச் செய்தார் எனில், தலைமையையும் ஏவல் கொள்ளும் தலைவராக விளங்கியமையின் அப்பர் எனப் பெற்றார். ஒண்ணுளே ஒன்பது வைத்தாய் என்பது மெய்ம் மொழிப் பதிகம் என்பது வள்ளலார் கருத்து.

''திரு நின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரசர்'' என்பது சுந்தரர் வாக்கு. எங்கும் நிறை பரம் பொருளைத் தன்னுள் இருப்பதாக அமைத்துக் காணவேண்டும் என்ற கொள்கையைச் செயற்படுத்தியவர்.

''மெய்மையாம் உழவைச் செய்து எனத் தொடங்கி, செம்மையுள் நிற்பராகில் சிவகதி விளையும்'' என்று விளக்கியவர். மனித உடம்பைத் திருவருள் நிலையமாக அமைத்தவர். ஞான விளக்கேற்றி, இந்த உடம்பை அருண் ஞான வாழ் மனையாக அமைத்த பேறாளர். உயிரனுபவம், அருளனுபவம், சிவ அனுபவம் ஆகிய எல்லாவற்றையும் தொண்டு ஒன்றினாலேயே இவ்வுலகில் இந்த உடம்பில் பெற்றவர். பேரின்பத் துய்ப்பு என்பதை எள்ளளவும் மேற்கொள்ளாத துறவி.

செத்தாரை எழுப்புதலும், சாவாமல் இருத்தலும், பொய்ந்நெறி நீக்கி, நன்னெறி விளக்கிக் காட்டலும், தன்னையே திருவருள் நிலையமாக அமைத்தலும் ஆகிய கொள்கை விளக்கங்களைச் செய்து காட்டியவர் அப்பரடிகள். ஓம் எனும் பிரணவத்தின் அனுபவ விளக்கமாகத் திகழ்ந்தவர்கள்.

முத்தேக சித்திகளையும் பெற்று, அருளின்பம் தேக்கும் அருளாளர்கள் எத்தகைய தோற்றத்துடன் இருப்பார்கள் என்பது போன்ற வினாக்களுக்கெல்லாம் தாமே இலக்கியமாக நின்றவர்கள்

## மூன்றாம் படியின் கொள்கையும் குரவரும்

நம்பியாரூரர் எனப் பெறும் சுந்தரர் மறைநெறியையும் ஆகம நெறியையும் இணைத்து விளக்கியவர். பொன் கட்டிகளை

ஆற்றிலிட்டுக் குளத்தில் எடுத்த அருட்டலைவர். முதலை வாய்ப்பிள்ளையை வரச் செய்தவர். யாவராலும் உணரப் பெறாத திருவடி வன்தொண்டரைத் தேடி வந்தது.

ஏழிசை, இசைப்பயன், இன்னமுதம், தோழன் என்ற நான்கு நிலைகளிற் பெருமானை விளக்கிய திறம், வெள்ளையானை மேல் இவர்ந்து கயிலை சென்றது, உயிரனுபவம் விளைக்கும் அருட்பாட்டு அருளியமை, பெருமான் தோழமை கொண்டது, ஆரூரருக்காக இறைவன் பரவையிடம் தூது சென்றது ஆகியவை ஆளுடைய நம்பிகளின் அருட் செயல் விளக்கங்கள்.

தத்துவ நிலைகள் கடந்த பெருவெளியில் விளங்கும் பரநாத ஒலியைத் தம்முள் எழுப்பி, அதனால் திருமுறை அருளியவர். திருவெண்ணெய் நல்லூரில் அற்புதப் பழ ஆவணங் காட்டி, நம்பியாரூரரை அடிமை என ஆட்கொண்டபின், என் பணி யாது என்று கேட்க, ''அர்ச்சனை பாட்டேயாகும் ஆதலால் மண்ணின் மீது, சொற்றமிழ் பாடுக என்றான் தூமறை பாடும் வாயான்'' என்பது சேக்கிழார் தெய்வவாக்கு.

அருளனுபவத்தை விளைவிப்பது தமிழ். அது உயிரனுபவத்தையும் அருளனுபவத்தையும் ஒருங்கே தரவல்லது.

''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே''

என்ற திருமூலர் கருத்துப்படி, எண்வகைச் சித்திகளையும் பெறுதற்குத் துணை செய்யும் பிறமொழிகளின் ஆற்றலை விட உயிர் தழைக்கும் அருளின்ப அனுபவத்தை விளக்குவது தமிழ் என்று குறிப்பிடுகிறார். தமிழொலியானது ஏழுவகைகளிற் பிரிந்து இவ்வுடம்பை இசைக் கருவியாக்குகிறது. அவ்வாறே, உயிரையும் இசைப் பயனின் இன்பத்தில் ஈடுபடச் செய்கிறது. ஏழிசையாய் நின்ற உடம்பும், இசைப்பயனாய் நின்ற உயிரும் இணையவே இன்னமுதமாம் அருளின்ப அனுபவம் உண்டாகிறது.

## III ஆளுடைய நம்பிகளின் தொண்டு

வள்ளலார் இங்கே நமக்குச் சுட்டிக் காட்டும் நுட்பம் ஒன்றை உளங்கொள வேண்டும்.

நம்பியாரூரர் திருமுதுகுன்றை வழிபட்டபின், பொன்பெற்று ஆரூர்க் குளத்தில் எடுத்துக் கொள்வேன் என்று கூறி, அப்பொன்னை மணிமுத்தாற்றில் இட்ட பின்னர், தில்லையை வணங்க எண்ணி வழி மேற் கொள்கிறார். சேக்கிழார்

''மேவிய காதல் தொண்டு விரவு **மெய் விருத்தி** பெற்றார்
**ஆவியின் விருத்தியாய** அந்தணர் புலியூர் மன்றில்
காவியங் கூத்துக் கண்டு கும்பிடுவது''

என்று கருதி வழிமேற் கொண்டார் என்று கூறுகிறார். இச்செய்யுளில் மெய்விருத்தி, ஆவிவிருத்தி என்ற இருவகை விருத்திகள் பேசப்பெறுகின்றன. திருமுதுகுன்றத்தில் பெற்ற பொன் உடல் வளர்ச்சிக்கு உதவுவது என்று குறிப்பவர்களுண்டு. ஆனால், நம்பியாரூரர் காஞ்சி வாய்ப் பேரூர் எனப் பெறும் மேலைச் சிதம்பரம் சென்று வழிபடுகிறார். அப்போது;

''நித்தனார் தில்லை மன்றுள் நின்றாடல் நீடிய கோலம்
நேர் காட்டக்
கைத்தலங் குவித்துக் கண்கள் ஆனந்தக் கலுழிநீர்பொழிதரக்
கண்டார்''

பின்னர்,

''காண்டலும் தொழுது வீழ்ந்து உடன் எழுந்து கரையில் அன்பு
என்பினை உருக்கப்
பூண்ட ஐம்புலனில் புலப்படா இன்பம் புணர்ந்து
மெய்யுணர் வினில் பொங்கத்
தாண்டவம் புரியும் தம்பிரானாரைத் தலைப்படக்
கிடைத்தபின் சைவ
ஆண்டகை யாருக்கு அடுத்த அந்நிலைமை விளைவை
யார் அளவறிந்துரைப்பார்''

என்று விரித்துரைத்தார் சேக்கிழார். பேரூரில் ஆனந்தத் தாண்டவம் காட்டிய பெருமான் பேரம்பலவனால் பெற்ற இன்பம், எலும்பை உருக்கும் அன்பின் பெருக்கு; ஐம்புலனில் புலப்படா இன்பம் மெய்யுணர்வினில் விளங்கித் தோன்றுகின்றது என்று குறிப்பிடுகின்றார். பின்னர், தில்லை வருகிறார். தில்லைத் திருநடக்

காட்சியின் போது ''பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே பெற்றாமன்றே'' என்று பாடிய நிலையில், மெய்விருத்தியும் ஆவியின் விருத்தியும் நிறைவுற்றன என்று குறிப்பிட்டார் சேக்கிழார். பருப்பொருள் தன்மைத்தாய உடலும், ஆன்ம உயிரும் விருத்தி பெற்றன என்று குறிப்பதால் இரண்டையும் சாகாமை செய்யவல்ல அருளனுபவம் பெற்றார் என்பதைக் குறிப்பனவே அந்த இருவகை விருத்திகளும்.

காஞ்சிவாய்ப் பேரூர்ப் பேரம்பலக் கூத்தினைப் பெற்ற போதிலும் அது தில்லைக் கூத்தாகவே அமைந்தது. அந்நிலையில் தில்லைக்கு வந்து பாடும்போதும், அவ்வொலியால் உலகத்து உயிர்களெல்லாம் சாகாக்கலை நலம் பெற்றன என்று குறிப்பிடுகின்றார். இப்போது நம்பியாரூரர் பாடிய பதிக ஒலியானது தத்துவநிலைகள் தனித்தனி கடந்து தனிப்பரநாதமாம் நிலையில் வெளிப்படும் அருளொலியாதலின், அவ்வொலியாம் தமிழ், உயிர்களை அருளின்பத்தில் ஆழ்த்தியது. அந்நிலையில் சேரமான் பெருமாள் நாயனாருக்கு ஒலிக்க வேண்டிய திருச்சிலம்பொலியும் ஒலியாது நின்றது. எனவே, தில்லைக் கூத்தப் பிரான் திருச்சிலம்பொலியையும் செயற்பட வொட்டாது உருக வைக்கும் பரநாத அருட் பேரரொலியே நம்பியாரூரரின் பதிகவொலி என்று கொள்ளுதல் வேண்டும்.

நம்பியாரூரர் அருளிய பதிகவொலியானது அருளனுபவம் தந்து பேரின்பத்தில் ஆழ்த்த வல்ல திருநெறியதமிழ்ஒலி என்பதையும் பேரின்ப நிலையையும் மெய்யுணர்வில் நின்று சாகாமல் அறிந்தின்பம் துய்க்கும் நிலையை அளிப்பது தமிழ் என்பதையும் எடுத்துக் கூறும் நிலையில் தமிழின் சிறப்பியல் அக்கரங்களான ழ, ற, ன என்ற மூன்றும் அருளாம் பரம்பரப் பொருளின் முடிநிலை, இடைநிலை, அடிநிலை இன்பந்தரும் அக்கரங்கள் என்று விளக்கி, தமிழானது தந்தை மொழி என்று கூறி, தமிழ் பற்றிய விரிவான விளக்கம் ஒன்றையும் வள்ளலார் எழுதியுணர்த்தினார்.

## IV. கழறிற்றறிவாரின் நாலாம் படிநிலைத் தொண்டு

திருஞானசம்பந்தருடன் திருநாவுக்கரசரும் இணைந்து நின்று திருநெறிய தமிழ் நெறி எனப் பெறும் அருள் நெறியின் முதலிரண்டு

படிநிலைகளை வளர்த்தாற் போன்று, ஆளுடைய நம்பிகள் மூன்றாம் படிநிலையை வளர்த்துத் தொண்டாற்றிய போது சேர நாட்டு அரசராக விளங்கிய சேரமான் பெருமாள் நாயனார் எனப்பெறும் கழறிற்றறிவார் நான்காம் படிநிலை வளர்ச்சித் தொண்டினை மேற்கொள்கிறார்.

தேவாரம் அருளிய மூவரும் முதல் நின்ற மூன்று படிநிலைகளை விளக்கித் தொண்டாற்றினார்கள் என்று கொள்ளும்போது, இயல்பாக நான்காம் படிநிலையை மாணிக்கவாசகர் நின்று விளக்கினார் என்று கூறுவதே முறை எனச் சிலர் கருதலாம். மணிவாசகப் பெருமான் இந்நெறியின் முழுமைக்கு ஓர் எடுத்துக் காட்டாகவும் அனைத்து அருளாளர்களுக்கும் குருவாகவும் விளங்கும் ஒப்பற்ற நிலையில் நின்ற அருளாளர் என்று வள்ளலார் கருதி, மணிவாசகப் பெருமான் பெற்ற அனுபவம் ஆசகன்ற அனுபவம் என்றும் மாசகன்ற மணிவாசகர் என்றும் போற்றி நிற்கின்றார்.

நான்காம் படிநிலை வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட தொண்டினை மேற்கொண்டவர் சேரமான் பெருமாள் நாயனார்.

சேர நாட்டில் சேரர் மரபில் பிறந்தவர் பெருமாக் கோதையார். அவர் துறவு பூண்டு திருவஞ்சைக்களம் சென்று திருத்தொண்டு நெறி மேற்கொண்டார். தொண்டு பேணும் அவர் தன்மையைச் சேக்கிழார்

''பெருமை பிறங்கச் செய்தமைத்துப் பேணும் விருப்பில்
திருப்பாட்டும்

**ஒருமை நெறியின் உணர்வு** வர ஓதிப் பணிந்தே ஒழுகுவார்''

என்று குறிப்பிட்டார். இந்நிலையில் அரசுகட்டிலில் இருந்த அரசன் துறவு மேற் கொள்ள, மந்திரி முதலானோர் பெருமாக் கோதையாரை அணுகி, அரசு மேற் கொள்ள வேண்டினர். அப்போது அவர், எவ்வுயிரும் எங்கிருந்து முறையிட்டாலும் அதன் குறையறிந்து முடிக்கும் நிலை எனக்கு வேண்டும். எனவே அனைத்துயிர்களும் கூறுவனவற்றை அறியும் ஒலியுணர்வும் பின்னர் அவற்றின் துயர் துடைக்கக் கூடிய வகையில் செல்வம், வெற்றி முதலியனவும் இறைவன் கொடுத்தால் அரசு மேற்கொள்வேன் என்றார். அவ்வாறே அளித்தான் இறைவன். அனைத்துயிர்களின் குறையறிந்து இரங்கும் அன்புடைச் சேரமான் ஆதலின் ''கழறிற்றறிவார்'' எனப் பெற்றார்.

''இருமை உலகுக்கு ஒருமை முடிகவித்தார் எல்லா உயிரும் மகிழ்
தரும நிலைமை அறிந்து புவி தாங்கும் கழறிற்றறிவார்''

என்று போற்றப் பெற்றார். ஆலவாய் இறைவன் இவருக்கு ஓலை அனுப்பி, பாணபத்திரருக்குச் செல்வம் அளிக்குமாறு கேட்டுக் கொண்டான்.

நாள்தோறும் பூசை முடிவில், தில்லைக் கூத்தராம் பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பின் ஒலி அளித்தார். இவ்வொலியே அனைத்துயிர்களின் குறைகளையும் மெய்மையின் உணர்தற்குரிய மூல ஒலியாயிற்று. எனவே, உலகத்துயிர்களுக்கெல்லாம் குறைவின்றி, நிறைவெய்துமாறு தொண்டு செய்வதையே பணியாகக் கொண்டவர். ஒருநாள் நம்பியாரூரர் தில்லையில், பேரூர்ப் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தில் கண்டு, அருளனுபவம் முதிர்ந்து, பதிகம் பாடிக் கொண்டிருக்க, முறைப்படிப் பூசை முடிவில் கேட்கப் பெற வேண்டிய சிலம்பொலி கேட்கவில்லை. உடனே, யான் தவறினேன் எனக் கூறி, வாளை உருவித் தன்னையே சோதிக்க முற்பட்ட போது, விரைந்து திருச்சிலம்பொலி கேட்டது. இவ்வகையில் நம்பியாரூரர் அறிமுகமாகிறார். சேரமான் பெருமான் நாயனார் தில்லைக்கு வந்து தாம் இயற்றிய **பொன் வண்ணத்து அந்தாதி** என்ற நூலை அருளுகிறார். பொன்வண்ணத்து அந்தாதி என்ற சேரமான் பெருமாள் நாயனார் அருளிய நூலில் 22 ஆம் பாட்டுக்கு மட்டும் வள்ளலார் விரிவுரை எழுதுகிறார்கள்.

''வேதியன் பாதம் பணிந்தேன்
பணிந்து மெய்ஞ்ஞானம் என்னும்
சோதி என்பாலுற வுற்று நின்
றேற்கு இன்றுதொட்டு இதுவே
நீதி என்றான் செல்வமாவது என்
றேன் மேல் நினைப்பு வண்டார்
ஓதிநின் போல் வகைத்தே இரு
பாலும் ஒழித்ததுவே''

என்பதே அப்பாட்டு. இது தோழி தலைவியை அறிவுறுத்தியது என்ற பொருளமைப்பில் இச்செய்யுளுக்கு வள்ளலார் சொற்களைத் தனித் தனியாக எடுத்தெழுதிப் பொருள் எழுதுகின்றார்கள்.

''சத்தார்த்த லக்ஷியனாகிய இறைவனது திருவடிகளை வணங்கினேன், பணிந்து (திருவருட் சமுகத்தில் நின்ற யான் அவனால் கடைக் கணிக்கப் பெற்றதனால்) மெய்யறிவு என்னும் இயற்கை விளக்கமாகிய அவ்விறைவனது ஆண்பால் வடிவம் (சோதியென்பது சோதிப் பாலெனக் கொளற்பாலது) ஆன்ம சத்தி விளக்கமாகிய எனது பெண்பாலிற் கலக்க, ஐக்கியானுபவம் பெற்று நின்றேன். அங்ஙனம் நின்ற என்னை இறைவன் மீட்டுங் கடைக்கணித்து, இதுபொழுது தொடங்கி, இவ்வனுபவ ஒழுக்கமே, நீ அனுபவிக்கின்ற ஒழுக்கமாகுக என்று திருவாய் மலர்ந்தருளினான். (யானும்) அடைதற்குரிய திருவருட் செல்வம் இங்ஙனம் ஆவது என்று அங்ஙனமே நின்றனன். அதன் பின்னர், இருவகைப் பாலினும் கவர்பட நின்ற எனது நினைவு, வண்டு மொய்க்கின்ற இயற்கைமணம் வீசும் அளகத்தையுடையாய், இறைவனது அனுபவ விருப்பம் பற்றி வந்த தாப விசேடத்தால் பெண்பாற்குரிய நாணத்தை விடுத்துப் பலரும் கேட்கத் ''தூது செல்லுதி'' என்று என்னை வருத்தி ஏவுதலால், ஊக்க முதலியவுடைய ஆண்பால் தன்மை, அவையின்றிய நின் பெண்பால் தன்மையில் கலக்கப்பட்டு இருபாலும் ஒழித்து நின்ற நின் வண்ணம் போன்ற தாய், ஆண்பால் பெண்பால் என்னும் இருபாலினிடத்தும் செல்லுகை நீங்கிற்று. ஆகலில், நீயும் புறத்தே என்னை ஒப்பாயாக.

''இது சிவாநுபவத்தை அகத்தே அனுபவித்த தோழி
புறத்தநுபவம் விரும்பிய தலைவியை அறிவுறுத்தியது''

இதுவே, வள்ளற் பெருமான் அப்பாட்டிற்கு எழுதிய உரை.

வள்ளற்பெருமானுக்கு அருட்பாடல்களை மழையெனப் பொழிதல் கை வந்த கலை. ஆயினும், சேரமான் பெருமாள் நாயனார் அருளிய ஒரு பாடலுக்கு மட்டும் விரிவுரை எழுத வேண்டிய காரணம் என்ன என்பதைச் சிந்திக்க வேண்டும்.

அடுத்து, மேலே எழுதப் பெற்ற உரையின் அடிப்படைக்குறிக்கோளைச் சற்றுத் தெளிவாக விளங்கிக் கொள்ள வேண்டும்.

தோழியானவள் தலைவியைப் பற்றிக் கூறியதாக அமைவது இப்பாட்டு. தலைவியானவள் தனக்கு இறைவன் மேல் எழுந்த விருப்பம் காரணமாகக் காமம் முதிர்ந்துளது. ஆகையால் தோழியே நீ

எனக்காகத் தூது செல் என்று கூறுகிறாள். அதைக் கேட்ட தோழி சொல்லுகிறாள்.

தலைவியே, நாணம் முதலியன பெண்பால் தன்மைகள். நீயோ தூது போக வேண்டும் அவனைக் கேட்க வேண்டும் என்றெல்லாம் சொல்லுகிறாய். இவையெல்லாம் (என்னைப் போ என்று ஏவுதல், ஊக்கம் முதலியன) ஆண்பாற் பண்புகள். பெண்ணாக உருவத்தில் அமைந்த நீ நாணத்தை விட்டதாலும் தூது போ எனக் கூறுவதாலும் அமைந்த ஆண்மைப் பண்பு, உன்னுடைய பெண்மைப் பண்பில் கலந்து விட்டதால், நீ இப்போது உள்ள தன்மையானது பெண்பால் ஆண்பால் என்ற இருபாலையும் ஒழித்து நின்ற நிலைமை என்றாள். இதுவே தலைவியின் நிலைமை.

தலைவியின் நிலைமையை விளக்கிய தோழியானவள் தன்னுடைய நிலையை விளக்க முற்படுகிறாள்.

நான் இறைவனின் பாதம் பணிந்தேன். பணிந்தபின் அவன் திருமுன் நின்றேன். அவன் கடைக்கண்பாலித்தான். ஆன்ம சக்தி விளக்கமாகிய எனது பெண்பாலில் மெய்யறிவு என்னும் இயற்கை விளக்கமாகிய அவனது ஆண்பால் (சோதிப்பால்) கலக்கவே, நான் ஐக்கியம் என்ற அனுபவம் பெற்றேன். அவ்வனுபவத்தில் நின்ற என்னை மீண்டும் அருள் செய்த இறைவன், இது பொழுது தொடங்கி இவ் அனுபவவொழுக்கமே, நீ அனுபவிக்கின்ற ஒழுக்கமாகுக என்று திருவாய் மலர்ந்தருளினான். அடைதற்குரிய திருவருட் செல்வம் இங்ஙனம் ஆவது என்று அங்ஙனமே நின்றனன். அதன்பின், இருவகைப் பாலினும் கவர்பட நின்ற என் நினைவு ஆண்பால் பெண்பால் என்னும் இருபாலினிடத்தும் செல்லுகை நீங்கிற்று. இது தோழியின் நிலை.

தலைவியின் நிலையானது பெண்மைப் பாலையும் ஆண்மைப் பாலையும் ஒழித்து நின்ற நிலை. தோழியின் நிலையும் பெண்மைப்பாலில் சோதிப்பால் கலந்து ஐக்கிய நிலை பெற்றதாய், ஆண்பால், பெண்பால் என்ற இரு பாலையும் எண்ணி ஒடுகின்ற நினைவை அழித்து விட்டது. எனவே, ஆண்பாலையும் பெண்பாலையும் ஒழித்த நிலையைத் தோழி அகத்தும் புறத்தும் பெற்றிருக்கிறாள். ஆனால், தலைவி புறத்தே மட்டும் பெற்றிருக்கிறாள்.

ஆண்மையும் பெண்மையும் கலந்த ஐக்கிய நிலையில் இருமையும் இல்லை; இருமை பற்றி நினைவும் இல்லை. இதுவே பொதுமை. இருமையாகிய ஆண்மையும் பெண்மையும் இருந்தால் அது நினைவு நிலை அல்லது மறந்த நிலை. இதையே சகல கேவலம் என்பர். இருமை பற்றிய நினைவு இருப்பதே பிறப்பு; நினைவு இல்லாமை இறப்பு. இரண்டும் அற்ற நிலையே சாகாநிலை. அதுவே சுத்தநிலை. அருளனுபவம் பொதுமை நெறி; சுத்தநெறி. இருபாலையும் இணைத்தாலும் இருபாலும் பற்றிய நினைவு அமையுமேல் அது பொதுமை நெறி ஆகாது. பெண்மையும் ஆண்மையும் இணைந்தநிலை சுத்தநிலை அன்று. பெண்மைப்பாலுக்கும் ஆண்மைப்பாலுக்கும் அப்பாற்பட்ட ஒரு சோதிப்பால் கலந்தது. பொதுமையிற் கலந்ததால் தனித்தன்மை அழிந்துபோயிற்று.

இயற்கை உண்மை எனப்பெறும் 'சத்' என்பது கடவுள். இயற்கை உண்மையில் ஏகதேசம் (சிறியது) ஆன்மா. இயற்கை விளக்கம் என்பது சித். கடவுளின் மெய்யறிவு. இயற்கை விளக்கமாகிய மெய்யறிவின் ஏகதேசம் - சிறுபகுதியே ஆன்மசத்தி விளக்கம். ஆன்மசத்தி விளக்கம் என்ற அறிவுப்பகுதியானது சிறியது. ஆதலின் அது பெண்மைப்பால். இயற்கை விளக்கம் என்னும் மெய்யறிவு சோதிமயமானது. அது கலக்கவே; இயற்கை விளக்கம் என்னும் மெய்யறிவு (பெரியது) ஆன்ம இயற்கை விளக்கத்தில் கலந்து ஐக்கியமானது.

''பொதுவுணர் வுணரும் போதலால் பிரித்தே
அது எனில் தோன்றா அருட்பெருஞ்ஜோதி
உளவினில் அறிந்தால் ஒழிய மற்றளக்கின்
அளவினில் அளவா அருட்பெருஞ்ஜோதி''

என்ற அருட்பெருஞ்ஜோதி அகவற்பகுதி கொண்டு தெளிக. இத்தகைய பொதுமை அனுபவமே அருளனுபவம். அதுவே சாகாமையை அளிப்பது; இறப்பை நீக்குவது. நினைப்பு மறப்பு அற்றசுத்தநிலை. மரணமிலாப் பெருவாழ்வு நிலை. அதுவே, உண்மை நெறி.

புற அனுபவம் வரையில் சென்று ஒத்தநிலை பெற்றதாக அனுபவம் பெற்றதாக நிறுத்தி விடுவதால் அகஅனுபவம்

இன்மையால் முழுமையான அத்வைத சுத்த அனுபவம் எய்தவில்லை. அதனால் இருமை இருக்கும்; பொதுமை அனுபவம் கூடாது. இருமை இருப்பின் பிறப்பு உண்டு. அதனாலேயே, திருஞானசம்பந்தர் இந்த அருளனுபவப் பேரின்பப் பெருவாழ்வு நெறியை விளக்க முற்படும்போது,

''இருமையில் ஒருமையும் ஒருமையின் பெருமையும்''

என்றார். இருமை அழிந்து ஒருமை எய்துதல் என்பது அனுபவமன்று. பொதுமை வந்து கலந்தபோது ஐக்கிய அனுபவம் வரும். இருமை பற்றி நினைவு அழியும். ஆனால், அறிந்து இன்பந்துய்த்தல் என்ற வகையில் அறிவு அழியாமல் நிலைபெறும். இதுவே சாகாநிலை, இறவா இன்ப அனுபவப் பெருநிலை.

மேலே கூறப் பெற்ற நால்வரும் உலகத்துயிர்கள் படும் துன்பங்களைக் கண்டு உயிரிரக்கம் கொண்டு அழுதவர்கள். திருத்தொண்டு என்ற நெறியினை வளர்க்கும் முறையில் பரம்பொருளைத் தலைமை என ஏற்று, தம்மை அடிமை என்று ஆக்கி விட்டாலே போதும் என்று எளிய வழியின் மூலம் அருள் நெறியை வளர்த்தவர் நாவுக்கரசர். அருளின்ப வாழ்வினை இவ்வுலகிலேயே பெற்று வாழும் அடியவர்தம் பெருமையை உலகிற்கு உணர்த்த வந்தவர் நம்பியாரூரர். தனிப்பரநாத ஒலியினால் அருளானந்தப் பெருவாழ்வை எய்தும் அருட்பாடல்களை அருளியவர். அவ்வாறே உலகத்துயிர்களின் துன்பங்களை, குறைகளை அவைகளின் ஒலிக் குறிப்பினாலேயே அறியும் திறன் பெற்று, அனைத்துயிர்களும் நலம்பெற அருளாட்சியை இவ்வுலகில் நடத்தியவர் சேரமான் பெருமாள் நாயனார்.

இங்கே கூறப் பெற்ற நால்வரும் தம்மை ஒளியுடம்பாக மாற்றி, அவ்வுடம்புகளுடனேயே சென்ற வரலாறு உண்மையின் அவர்களும் சகல கேவலமற்ற சாகாநிலையினரே. செத்தாரை எழுப்புதல் என்பதற்குரிய சாதாரண விளக்கத்தை அவர்களும் செயற்படுத்தியவர்களே.

உயிர்ப் பொருள்களிலேயன்றி உயிரல் பொருள்களிலும் சிவம் பெருக வேண்டும் என்று தொண்டாற்றியவர் ஞானசம்பந்தர்.

திருக்கோயில் தொண்டு, திருக்கோயிலில் உள்ள திருவருள் திருமேனியுடன் (வழிபாடு, பூசை, தொண்டு முதலியவற்றால்) தொடர்பு கொண்டு இறைநலம் பெருக வேண்டும் என்ற அடிப்படையில் தொண்டாற்றினார்கள்.

சிவனடியவர்கள் எத்தகைய செயலையும் தம் அருளாற்றலால் நிகழ்விக்கும் பெருந்தகைமையாளர்கள். ஆலயத் தொண்டினைப் போலவே அடியவர் தொண்டும் உயர்ந்தது என்பதை நடைமுறைப் படுத்தினார்கள்.

திருக்கோயிலுக்குச் சென்றவுடன் கடவுளுடன் பேசுவது, கேட்பது என்றாற்போல, நம்முடன் இணைந்து வாழ்பொருள் என்பதை நிகழ்ச்சிகளால் காட்டி, கடவுளும் உயிரும் கொள்ளும் தொடர்பை மிகமிக எளிமைப்படுத்தினார்கள்.

மேலே குறிப்பிடப்பெற்ற நால்வரையும் இந்நெறியில் நிலை நிறுத்தியது பரம்பொருள் என்பதை நாம் மறந்து விடக்கூடாது. அருட்பெருந்தகைகளாகிய அவர்கள் ஆற்றிய தொண்டுகள் பரம்பொருள் அமைத்த எல்லைக் கோட்டின்படி நடைபெற்றவை என்பதையும் உளங்கொள வேண்டும். படிமுறை வளர்ச்சி நிலையில் ஒரு கொள்கை உருவாகி வளரவேண்டுமானால், அது மக்கள் வாழ்வியலில் ஒரு பிடிப்பை உண்டாக்கும் நிலையில், சூழ்நிலை அமையவேண்டும். சூழ்நிலை அமைந்திருப்பினும் படிப்படியாகத்தான் மக்கள் வாழ்வியலில் செயல் முறைப் படுத்தப் பெறும் நிலை அமையும். குறிப்பிட்ட படி நிலை வளர்ச்சிக்குரிய இடைவெளிக்காலம் அமைய வேண்டும். எனவே, இறுதிப் படிநிலையில் வரும் வள்ளலார் முன்னுள்ள அருளாளர்களின் கொள்கைகளையோ, தொண்டுகளையோ முழுமையாகப் புறக்கணித்துவிட்டு, ஒரு புதிய கொள்கையை உருவாக்கினார் என்று கொள்ளுதல் மரபுநெறிப்படி வழுவாக அமைவதாகும்.

இங்கே, உள்ளது சிறத்தல் அல்லது கூர்தல் அறம் (Evolution) என்ற விஞ்ஞானக் கருதுகோள் முறையை அமைத்துச் சிந்திக்க வேண்டும். முன் இருப்பதே தோன்றுகிறது என்றால் படிநிலை வளர்ச்சி என்றோ உள்ளது சிறத்தல் என்றோ ஆகாது. முன் இல்லாதது தோன்றுகிறது என்றால் அது முன்னதனோடு இணைந்து, படிநிலைகளில் தொடர்ந்து வளர்ச்சி பெற்று வருவதாக அமையாது.

அவ்வகையில் வள்ளலார் வகுத்த நெறிக்கு ஒருவகை மரபுப் பின்னணி உண்டு. இது அவர்தம் திருவாக்கினாலேயே உணர்த்த உணர்ந்தது. ''வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபில் யான் ஒருவன்'' என்றது. அவ்வாறே, வள்ளலார் புதுமையாகத் தம் நெறியில் எந்த ஒரு கூற்றையும் அமைக்கவில்லை என்றோ பழைமை நெறியே புதிய விளக்கத்தில் வள்ளலாரால் தரப்பெறுகிறது என்றோ முடிவு செய்வதும் முரண்பட்டதே.

''முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியனே''

என்ற மணிவாசகத்துக் கொப்ப, மரபுநெறியில் அமையும் கொள்கை வளர்ச்சியில் எந்த எந்த இடங்களிலிருந்து புதுமைகள் பூத்துக் குலுங்குகின்றன என்பதை விளக்க முற்படுவதே அடுத்த தலைப்பு.

## இத்தலைப்பின் ஆய்வு முடிப்புரை

அருட் பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை என்ற மெய்ம் மொழிகளை மந்திரமாக்கி, சுத்த சன்மார்க்கக் கொள்கை விளக்க நிலையமாகச் சத்திய ஞானத் திருச்சபை கண்டு, கொள்கையைச் செயற்படுத்திக் காட்டிடும் செயற்படு நிலையமாகிய சத்திய தருமச் சாலையைக் கண்டு, கொள்கையும் செயலும் கூடிக் குலவவே, எண்ணிய சித்திகள் எல்லாம் பெருகி வளரும் சித்தி வளாகத் திருமாளிகை கண்டு, தம் கொள்கைக்கெனக் கொடி ஒன்றையும் கட்டியமைத்து, தம் தொண்டினை முழுமையாகச் செய்து, ஆணையிட்ட பயன்களை முழுமையாகப் பெற்று, நம்மிடையே வாழ்ந்த, வாழும் அருளாளராகிய வள்ளலார் தாமே உடன்பட்டு எடுத்துக் கொடுத்ததும் சிதம்பர சுவாமிகளால் அருளப் பெற்றதும் ஆகிய பாயிரப் பாட்டானது ''கண்மணியாம் நங்கள் இராமலிங்கன் நல்ல அருட்பா முறையானது மாந்தர்தம் உள்நீர் சிவம் விளங்க ஓங்குவிக்கும்'' என்று கூறுகிறது. மாந்தர்களின் உள்நின்ற சிவத்தைப் பெருக வைப்பது திருவருட்பாவின் பெருமை. திருஞானசம்பந்தரின் தொண்டும் அதுவே. ''தாவில் சரா சரங்களெல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையார் என்பது சேக்கிழார் வாக்கு. இருவரும் இறைவனிடம் 'மகன்' என்ற உரிமையையும் தொண்டினையும் மேற்கொண்டார்கள். இருவரும் உலகத்துயிர்களுக்காக அழுது அழுது துன்புற்றவர்களே.

அருளாட்சியில் முதலரசியற்றிய துரையாக முத்தியற் சிவிகையூர்ந்து குருவென நின்றார் ஞானசம்பந்தர். அருளாட்சியில் தனிச் செங்கோல் ஏந்தி, அனைத்துச் சித்திகளையும் தற் சுதந்தரமாக இயற்றும் அருள் வலிமையுடன் வள்ளலார் ஆட்சி செய்து வருகிறார். சேரமான் பெருமாள் நாயனார் ஆட்சியுடன் ஒருவகையில் ஒத்து விளங்கும் தன்மையது தான் இதுவும். இவைகளெல்லாம் மரபுக் கூறுகள்.

வள்ளலார் தமக்கென அமைத்த தனிமைகள் பலவற்றை இணைக்கும் போதுதான் அவர் வகுத்த நெறி புதுமைப் பொலிவும் புரட்சித் திருவும் அமைந்து விளங்கும் பொதுமைப் பெரு நெறி என்பது விளங்கும். அருள் தலைமையும் பொதுமையும் இணைந்த உண்மை நெறியே அது. அதனால் முன்னுள்ளவை பொய்மை நெறிகளல்ல. உண்மை நெறியின் தொடக்க நிலைகளே அவை. உண்மை நெறியின் முற்ற முடிந்த முழுமை நிலையில் நிற்பவர் வள்ளலார்.

## மரபு தழுவிய தனித்தன்மை

திருமூலர் அருளிய திருமந்திரமே நமக்குக் கிடைத்த முதல் சாத்திர நூல். மெய்ப்பொருளியல் சார்ந்த கலைச் சொற்களாலேயே அமைக்கப் பெற்ற நூல். அதற்குப் பின்னர் தமிழகத்தில் நமக்குக் கிடைப்பவை திருமுறைகள். அருளாளர்களாக விளங்கிய நாயன்மார்கள் தம்முடைய அருளனுபவ வெளிப்பாடுகளாக அமைந்தவைகளே திருமுறைகள். அவைகள் மெய்ப்பொருளியல் முடிவுகளை வரையறை செய்தற்குரிய மூலங்களாக அமைந்துள்ளன. மெய்ப்பொருளியற் கலைச்சொற்களாலே முழுக்க முழுக்க அமைக்கப் பெற்றவைகளே திருமுறைகள் என்று சொல்ல முடியாது. திருமுறைகளுக்கு அடுத்த நிலையில் கி.பி.13 ஆம் நூற்றாண்டினை முதலாகக் கொண்டு 'மெய்கண்ட சாத்திரம்' என்ற ஒரு தொகை நூலை நாம் காணுகிறோம். இதனுள் மெய்கண்டார் அருளிய சிவஞான போதம் உள்ளிட்ட பதினான்கு நூல்கள் அமைந்துள்ளன. மெய்ப்பொருளியல் உண்மைகளை முழுமையாக எடுத்து விளக்கம் செய்யும் சாத்திர நூல்களே அவை. மெய்ப் பொருளியற் கலைச் சொற்களைத் திருமந்திர நூலைப் போன்றே எடுத்தாண்டுள்ளார்கள். வேதங்களையும் ஆகமங்களையும் மூலமாகக் கொண்டு அமைக்கப்

பெற்றன என்று கூறப் பெற்றாலும் குருவிடமிருந்து உபதேச முறையில் அறிந்தவைகளாய கருத்துகளையே பெரிதும் மூலமாகக் கொண்டன என்று கொள்ளக் கிடக்கின்றது.

வள்ளலார் திருமுறைகளையே முதன்மை வாய்ந்த மூலங்களாகக் கொள்கிறார். தத்துவ சாத்திர நூல்களில் எடுத்தாளப் பெறும் தத்துவ நெறி சார் கலைச் சொற்களையெல்லாம், பொருள் விளக்கம் கூறி, அவைகளையே தம்மெய்யுணர்வியற் கொள்கையை நிலை நாட்டுவதற்குப் பயன் படுத்துகின்றார்.

மெய்ப் பொருளை அருளாலே நோக்கும் விதியுடையேன் என்று கொள்கை முழக்கம் செய்தவர் காரைக்காலம்மையார். ஆறதேறுஞ் சடையான் அருள்மேவ, வீறதேறும் தமிழால் வழிகண்டவன் எனப் போற்றப் பெறும் திருஞானசம்பந்தர் ''திருநெறிய தமிழ்நெறி'' என்று தம் நெறியை அருளனுபவ அடிப்படையில் நிலைநாட்டினார். சந்தானாசாரியார் நால்வரில் இறுதிநின்ற உமாபதி சிவாசாரியார் திருவருளையும் திருமுறைகளையும் மூலமாகக் கொள்வதில் முனைப்புடன் விளங்குவதைக் காணலாம். அவருக்குப் பின்னர் சற்றேறக் குறைய 500 ஆண்டுகளுக்குப் பின் வரலாறு படைத்த வள்ளலாரே திருமுறை அருள் நூல்களைப் பின்பற்றித் தத்துவக் கொள்கையை அமைத்தார் என்பதை எண்ணும் போது வள்ளலார் திருவருள் நிலையில் தம்மை இணைத்துக் கொண்டு, அருளாசிரியர்களின் அனுபவ வெளியீடுகளாக அமைந்த திருமுறைகளை மூல நூல்களாகப் போற்றி எடுத்துக் கொண்டு, திருமந்திரம் முதலாகத் தம் கால எல்லை வரை வளர்ந்த பல்வேறு தத்துவக் கொள்கைகளை ஒருமை நெறியில் வைத்துத் திருவருள் வலத்தால் உணர்ந்தார் எனக் கொள்ளலாம். அவைகளை ஏற்ற பெற்றி எடுத்தாண்டு விளக்கங் கூறியும், மெய்ப் பொருளியற் கலைச் சொற்களுக்குரிய உண்மைப் பொருளை விளக்கிக் காட்டியும் தம் கொள்கையை வரையறுத்துள்ளார் வள்ளலார். அருளாசிரியர்களின் திருமுறைகளையும் தத்துவ இயல் நோக்கிலேயே பார்த்து, அவைகளில் உள்ளுறையாக அமைந்துள்ள தத்துவக் கொள்கைகளை முறைப்படுத்தி வெளியிட்டுள்ளார். திருமுறைகளை முதன்மை மூலமாகக் கொண்டு, மெய்ப்பொருளியல் நூல்களையும் உடன் சேர்த்து ஒரு பொதுமை நோக்கில் முழுமையையும் இணைத்து நிறுத்தி, மெய்ப் பொருளியற் கொள்கையை வரையறுத்த முறையை முன்னே

யாரும் மேற் கொள்ளவில்லை. இவ்வகையில் மரபினைப் போற்றியும் புதுமையை உடன் கொண்டும் ஆய்வு செய்த வள்ளலார் திருவருளால் தமக்கு அமைந்த தனித்தன்மை விளங்கும் வகையிலேயே தம் கொள்கையை அமைத்துக் கொடுத்துள்ளார். அவர் விளக்கும் முறையைக் காணலாம்.

## பொதுமை நெறி

பொதுமைநெறி என்பதை வள்ளலார் விளக்கும்போது சாகாக் கலையின் அடிப்படையில் விளக்கும் முறையை மேற் கொள்கிறார்.

வாழ்வியல் குறிக்கோள்; குறிக்கோளை எய்தும் வழி அல்லது பயிற்சி என்ற இருவகைகளை அடிப்படையாகக் கொண்டே எல்லாவற்றையும் இணைக்க வேண்டும்.

1. இவ்வுலகில் ஐம்புல இன்பம் ஆரத்துய்த்தல், இது உடலனுபவம். உயிரனுபவம் இல்லையாதலின் இது நிறைவுடையதன்று.

2. உயிரானது இவ்வுலகை நீத்து, புற உலகில் சென்று, உயிர் இன்பம் துய்ப்பது, என்பது ஒரு கொள்கை. இந்நெறியில் இங்கேயே அவ்வின்பத்தைப் பெற வழி இல்லையாதலின் நிறைவுடையதன்று.

3. ஞானம் பெற்றுப் பரம்பொருளுடன் இணைந்து ஒன்றாய் விடுதல். தன்னை இழந்த கலப்பை விட, தன்னைச் சாகாமல் நிறுத்தியே கலந்து இன்பந் துய்க்கலாம். ஆதலின், தன்னை இழந்த கலப்பு என்ற கொள்கை நிறைவுடைய தன்று.

4. யோகநெறியானது சமாதி. சகசநிலை வேண்டும். யோகநிலையில் நின்றவர்கள் ஏமாக்க, மாணிக்கவாசகர் உயர்நிலை பெற்றார்.

இவ்வாறன்றி முழுமை இன்பம், முழுமை அறிவு, முழுமை இருப்பு ஆகிய மூன்றாலும் பரம் பொருளை அனுபவித்து இன்ப நிறை வெய்துதல். இந்நிலையை அளிப்பது அருள் நெறி. அருளே உலகை ஆள்விப்பது ஆதலின், இது பொதுமை நெறி.

தனிமை நெறியில் வந்தவர்கள் அவ்வந்நெறியின் இறுதிவரை வந்து நின்று விட்டார்கள்; மேலும் அவர்கள் மற்றவர்கள் நெறியை

அறியார்கள். அப்படி வந்தவர்களும் எடுத்த உடம்பிலேயே எல்லா அனுபவங்களையும் பெறவில்லை. ஆனால், அருள்நெறி பொதுமைநெறி. அருள் நெறியானது பிற நெறிகளைக் கண்டும் கடந்தும் வந்தது. பிறநெறிகளில் வந்தவர்கள் அவ்வந்நெறி முடிவில் வந்து நின்றுவிட, பொதுமை நெறியினர் அங்கே நிற்காமல் முழுமை வரை வந்தவர்கள். வந்தபின், முன்னே நின்றவர்களையும் எழுப்பிக் கொண்டு வந்து, இந்த முடிவு நிலையை அடையவைக்கிறார்கள். ஆதலின் பொதுமை நெறி.

## பொது நெறியே பெருநெறி

அருளானது பொதுமையும் பெருமையும் உடையது அனைத்தையும் கடந்தது அருள். அருளால் அனைத்தையும் அறியலாம்; அடையலாம். பிறவற்றால் அருளை அறியவோ, அடையவோ முடியாது. இவ்வகையில் பெருநெறி எனப் பெற்றது.

மற்றைநெறியாளர்கள் குறுகிய காலக் குறிக்கோள்களைக் கடைக் கொண்டு வந்து அங்கங்கே நின்று விட்டார்கள், அவர்கள் நெறி, அவர்கள் அடைந்த எல்லைகளைக் கடந்தும் சென்ற அருள் நெறியை நோக்கும் போது சிறு நெறியாயிற்று.

மேலும், அவ்வந் நெறி சார்ந்தார் அவரவர்களையே காப்பாற்ற விழைந்தனர். பெருநெறியாளர்கள் மற்றை நெறியாளர்களின் துயர் தவிர்த்து, தம்மிடம் கொண்டுவந்து முழுமை இன்பம் துய்க்கச் செய்தமையின் அவர் தம் நெறி பெரு நெறியாயிற்று.

## பொதுநெறியே குருநெறி

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே நெற்றிக்கண் பூட்டினைத் திறந்து அருளாட்டில் அமைக்க வல்லவர். தம்மால், தம் சாதனையால், தம் முயற்சியால் பெறலாம் எனக் கொள்ளாது, அருட்பெருஞ் சோதி ஆண்டவரே குருவென நின்று திறந்து, அருளமுதம் அளிக்க, அவர் தம் துணையால் அனுபவம் பெறுதல் என்பதைக் குறிக்கோளாகக் கொண்டமையின் இந்நெறி குருநெறி என நின்றது. அனைத்துயிர்களையும் முழுமைப் பேரின்பத்தில் ஆழ்த்தும் நெறியாதலின் இது பொது நெறியாயிற்று.

## பொதுநெறியாம் இது தொன்மைநெறி

சன்மார்க்கம் என்ற பெயரால் பல நெறிகள் விளங்குகின்றன. அவ்வாறே சாகாக்கலையும் பல நெறிகளில் கூறப் பெற்றுள்ளன. எனவே, சாகாக் கலையுடன் கூடிய சன்மார்க்கம் புதிய நெறியன்று. முன்னமேயே பலர் அடைந்துள்ளனர் என்று கூறும் வழக்கு உண்டு.

வள்ளலார் வகுத்துக் காட்டியும் செயற்படுத்தியும் அமைத்த 'சமரச சுத்த சன்மார்க்கம்' என்ற நெறியை விளக்கமுறத் தெரிவிக்கும் வகையில் வள்ளலார் சில சொல் விளக்கங்கள் கருத்தமைவுகள், அளவையியற் கோட்பாடுகள் ஆகியவற்றை அமைத்துக் காட்டுகின்றார். அவைகள் சுருங்கிய அளவில் கீழே கொடுக்கப் பெறுகின்றன.

## கொள்கை விளக்கக் குறியீடுகளும் விளக்கமும்

வள்ளலார் தம்கொள்கையை விளக்க முற்படுமுன் அவர் தரும் அறிவுரை இரண்டு. *1*. கொள்கை விளக்கச் சொற்களுக்கு மரபு முறையில், பொதுமக்கள் வழக்கியல் முறையில் வழங்கும் சாதாரணப் பொருளையே கொள்ளுதல் வேண்டும். 2. கொள்கை வரையறையை அனுபவ வழியில் நின்று எளிமையும் சரிபார்க்கத்தக்கதும் ஏற்புடையதும் ஆகிய அடிப்படையில் தான் வரையறை செய்தல் வேண்டும். ஏனெனில், உண்மையைப் புறங்கவியச் சொல்லுதல் அருட்பெருஞ்ஜோதி அரசுக்கு ஒவ்வாதது. வெளிப்படையாக நின்ற அனுபவப் பொருளே கொள்கையை வரையறுக்கும் கருவியாக அமையும்.

மேலே கூறப்பெற்ற இரண்டு அறிவுரைகளில் முன்னதின்படி, தத்துவக் கலைச் சொற்களுக்குச் சாதாரணப் பொருளே அமைக்க வேண்டும். மெய் என்றால் மெய்யானது என்பதே பொருள். மனித உடலை மெய் என்று சொல்வது, பொய்யை மெய்யெனக் கூறும் மங்கலவழக்கு என்பது போன்ற உரைகளைக் கொள்ளலாகாது. சமரசம், சன்மார்க்கம் போன்ற சொற்களுக்கும் சாதாரண அகராதிப் பொருளே கொள்ள வேண்டும்.

1. ஒரு சொல்லுக்கு மதவாதிகள் பலரும் பலவேறு வகையில் உரை செய்து கொள்கைகளை நிலை நாட்ட முற்படுகிறார்கள்.

அங்கெல்லாம் அவர்கள் ஆற்றல் நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. ஆனால், உலக மக்கள் மெய்ந்நெறி எது என்று கண்டு கடைப்பிடித்தற்கு இயலாத நிலையில் மயங்கித் துன்புறும் நிலை உண்டாகும். அல்லது பொய்நெறியை மெய்நெறியாகப் பிறழவுணர்ந்து மேள்கொள்ளும் நிலை உண்டாகும். உயிரிரக்கங் கொண்டு உய்வகை நாடி, மெய் வழியை வரையறை செய்து உணர்த்துவதே அருள் நெறியின் முதற்பணி என்று குறிப்பிடுகிறார். இந்நிலையை விளக்குவதற்காக, வேதாந்த தேசிகரின் குறட்பா ஒன்றுக்குப் பௌராணிகமதம், அத்வைதம், சிவாத்வைதம், விசிஷ்டாத்வைதம் என்ற நான்கு தத்துவக் கொள்கைகளின் அடிப்படையில் விளக்கவுரை எழுதுகிறார்.

''மூன்றில் ஒருமூன்று மூவிரண்டு முந்நான்கு
தோன்றத் தொலையும் துயர்''

என்பதே அக்குறட்பா. திருமாலைப் பரம் பொருளாகக் கொண்டு வகுக்கப் பெற்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்ட இக்குறளுக்கு ஏனைய உரைகள் பொருத்தமாக இருப்பினும் 'உண்மை' என அமையாது என்பதே வள்ளலார் கொள்கை. இக்குறிப்பை விளக்கவே வேதாந்த தேசிகர் குறட்பா உரை எழுதப்பெற்றது.

II அடுத்து, காழிக் கண்ணுடைய வள்ளலார் அருளிய **'ஒழிவிலொடுக்கம்'** என்ற நூலைப் பதிப்பிக்க முற்பட்டு, அந்நூலின் முதற் செய்யுளுக்கு ஒரு விருத்தியுரை எழுதி, அதனுடன் பதிப்பிக்கிறார் வள்ளலார்.

''திருஞானசம்பந்தரின் திருவடிகளின் அருட்டுணையால், தத்துவங்களனைத்தும் சடம் என்று ஓர்த்து, உணர்ந்து, அவற்றைக் கடந்து, தற்காட்சியோடு திருவருட் காட்சியும் செய்து, அங்ஙனம் வாதனையால் அசைந்தெழும் போதம் தோற்றாது அதனை அத்திருவருள் ஒளியில் அடக்கி ஆண்டு, மேன்மேலும் எழாநின்ற சிவானந்தத்தேனைத் தான் அனுபவஞ் செய்தவாறு, அச்சிவானந்த அநுபவ அந்தரங்கமெல்லாம் வெளிப்பட்டு விளங்க, ஒழிவில் ஒடுக்கம் என்று ஓர் உபதேசமுறையை உரைத்தருளினார்'' என்று வள்ளலார் எழுதும் குறிப்பை உட்கொள்ள வேண்டும்.

கொள்கைகளை அனுபவமாக்கி, திருவருளில் அவைகளை ஒடுக்கி நிறுத்தி, அருளனுபவம் மூலம் அக்கொள்கை அனுபவங்களெல்லாவற்றையும் கண்டு, அவ்வனுபவ அமைப்புகள் எல்லாவற்றையும் முழுமையாக (ஒன்றையும் விட்டுவிடாமல்) அமைத்துக் கூற வேண்டும் என்பதே வள்ளலார் கொள்கை என நாம் கொள்ள வேண்டும். எனவே, வெற்று அறிவு ஆராய்ச்சி அடிப்படையில் தத்துவக் கொள்கைகளை நிறுவுவதோ, உரைப்பதோ முறையன்று என நீக்கி, திருவருளில் அவ்வறிவை ஒடுக்கி, அனுபவப்படுத்தி, பின்னர் அனுபவ அடிப்படையில் கொள்கை விளக்கம் செய்ய வேண்டும் என்று குறிப்பிடுவதையும் உளங் கொளவேண்டும். இதனாலேயே வள்ளலார் சுத்த சன்மார்க்கத்தில் மட்டுமே அனுபவப்படும் அனுபவப் படி நிலைகள் ஆறு என வரையறை செய்து எடுத்துக் கூறினார் என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும்.

III இனி, உபநிடதங்களிற் காணப் பெறும் மகாவாக்கியங்களுக்கு உரையெழுதும் போது அவைகள் பரம் பொருளால் அருளப் பெற்றவை எனக் கொண்டு உரை காணும் மரபு ஒன்று உண்டு என்பதை உளங்கொண்ட வள்ளலார் மகாவாக்கியங்கள், அவைகளின் உரைபற்றிய தம் கொள்கையை எடுத்துணர்த்தவே பெரிய புராணம் பாடுவதற்காகச் சேக்கிழாருக்கு மெய்ம்மொழி அருளப் பெற்ற நிகழ்வை எடுத்துக் கூறி, ''உலகெலாம் என்னும் மெய்ம்மொழிப் பொருள் விளக்கம்'' என்பதை எழுதுகிறார்கள்.

வள்ளலார் உலகெலாம் என்ற மெய்ம்மொழிப் பொருள் விளக்கமாக எழுதுபவை இன்று அருளாளர் மொழிகள் இறைஅருளிய மொழி ஆகியவைகள் பற்றி இக்காலத்து எழும் பலசிக்கல்களைத் தீர்த்து வைப்பனவாகும். இங்கே நமக்குத் தேவையான ஒருபகுதியை மட்டும், நம்மனோருக்குப் புரியும் உரை நடையில் காணலாம்.

முதலில் 'உலகெலாம்' என்பதைத் திருவருள் துரியத் திருவாக்கு எனக் கொள்ளுக என்றார். திருவருளால் வெளிப்படும் மெய்ம் மொழியானது 'உலகெலாம்' எனத் தனியே நிற்காது. ''உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்'' என்ற முழுமைத் தொடரும் திருவருள் துரியத் திருவாக்கே. சிற்சபைப் புறத்தே உலகெலாம் என்பதும்

சேக்கிழாரின் அகத்தே ''உணர்ந்தோதற்கரியவன்'' என்பதும் மொழியப் பெற்றன என்று கூறினார். ''உலகெலாம்'' என்பது மட்டுமே வெளிப்பட்டது என்று கொண்டால் என்ன குறை ?

'உலகெலாம்' என்பது பலபொருள்களைப் பலநோக்கங்களில் கூற இடந்தரும் ஒருமொழி. திருவருள் எந்நோக்கங் கருதி மொழிந்தது என்று தெரியவில்லையானால், அந்நோக்கந் தெரிந்து முடித்தல் மற்றவர்களால் முடியாது.

பரநாதத் திருவாக்கில் எழுந்த மொழியானது பயனிலை இல்லாமல் இருந்தால் அதனை அசுத்த நாதமாகிய நம்மொழியால் பயனிலை கூறி முடித்தல் என்பது எள்ளளவும் முடியாது.

சிவ சுதந்தரச் செயல் குறைப்பட்டு நின்றால் அதனைச் சீவசுதந்தரத்தால் முடிக்க முடியாது.

இதுவரையிலும் பக்குவர்களுக்கு இறைவன் அருள் வடிவால் அளித்த உபதேச மொழிகளில் பயனிலை இல்லாத குறை மொழிகள் இருந்தமைக்கு வரலாறு இல்லை; இருத்தல் இயல்பும் அன்று. எனவே, பயனிலை இல்லாக் குறைமொழிகள் திருவருள் மெய்ம் மொழிகள் எனப் பெறும் மகாவாக்கியங்கள் ஆகா. இனி, அத்தகைய மகாவாக்கியங்களுக்கு விளக்கம் எழுதும் போது, அம்மொழி தோன்றுவதற்குக் காரணமாகிய திருவருள் ஒலி அனுபவம் கைவரப் பெற்று, அவ்வனுபவத்தின் அடிப்படையில் விளக்கம் எழுத வேண்டுமேயல்லாமல், அசுத்த மாயையின் காரியமாய் மனிதரிடத்து எழும் ஒலியின் அடிப்படையில் உரையெழுதல் கூடாது என்பதை விளக்கவே, உலகெலாம் என்பதற்கு விளக்கம் எழுதுகிறார்.

மேலும், இத்தகைய மெய்ம் மொழிகளுக்கும் காட்சி, அனுமானம், சான்றோர் உரை ஆகியவைகளைப் பிரமாணங்களாக எடுத்துக் காட்டி விளக்குவதும் கூடாது என்கிறார்.

இவ்வாறு வள்ளலார் மெய்ம் மொழிப் பொருள் விளக்கம் எழுதுவதற்குக் காரணம் தம்மால் விளக்கவிருக்கும் சுத்த சன்மார்க்கத் தொன்னெறியானது தமக்குத் திருவருள் அகநின்றுணர்த்திய துரிய மொழிகளின் அனுபவத்தையும் குரு உபதேச மொழியையும் அதனால் விளையும் அருளனுபவத்தையும் மூலமாகக் கொண்டு அமைக்கப்

பெற்றது என்பதை உணர்த்துவதற்காகவே, திருவருள் துரிய மெய்ம் மொழி அனுபவம் எப்படிப்பட்டது என்பதை ''உலகெலாம்'' என்பது எவ்வளவு உலகுகளாக விரிந்துள்ளன என்பதை நோக்கி உணரலாம்.

IV 'சின்மய தீபிகை' என்ற நூல் சுவாமிகளால் பதிப்பிக்கப் பெற்றது. இது விருத்தாசலம், குமாரதேவர் திருமடத்துச் சுவாமிகளுள் ஒருவராகிய முத்தைய சுவாமிகளால் இயற்றப் பெற்ற நூல். முத்தைய சுவாமிகள் வீரசைவ நெறி சார்ந்தவர்கள். வீரசைவத்தில் அமைந்த ஆறுதல இணைப்பில் அமையும் ஐக்கியம் ஒருவகைப் பொதுமை நெறியாக அமைந்தமை வள்ளலாரால் பெரிதும் ஈடுபாடு கொண்டு அனுபவ நிலையில் ஆய்ந்து காண்பதற்கு ஏற்றதாக இருந்தது என்பது இந்நூலைச் சுவாமிகள் பதிப்புச் செய்ததிலிருந்து விளங்குவதொன்றாம்.

V 'தொண்டமண்டல சதகம்' பதிப்புச் செய்தமைக்கும் ஒரு காரணம் உண்டு. பொருந்தாப்புணர்ச்சி, பொருந்தும் புணர்ச்சி என்பதன் இலக்கணமும், தென்சொல்நோக்கு வடசொல்நோக்கு என்ற இரண்டும் எவ்வாறு பொருந்தும் என்பதும், பொருந்தா நிலைமைக்கண் பொருத்தம் உறத் தோற்றப் பெறுவதே அருள்நிலை எனக் குறிப்பிட்டு விளக்குவதற்கும் அவ்விளக்கம் அமைக்கப் பெறுகிறது.

எனவே, தத்துவ நிறைவும் அனுபவ முதிர்வும் இணைந்த ஒரு கொள்கையை உருவாக்க வேண்டுமெனில் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகள் யாவை என்பதை விளக்கும் வகையிலேயே விரிவுரைப் பகுதிகள், பதிப்புரைப் பகுதிகள் ஆகியவைகளை அமைத்துக் கொள்ளுகிறார் வள்ளலார் என்று கொள்ளலாம்.

# 5. சித்தி வளாகம்

## முன்னுரை

''அற்புதம் அற்புத மே - அருள்
அற்புதம் அற்புத மே

சத்திய ஞான சபைஎன்னுள் கண்டனன்
சன்மார்க்க சித்தியை நான்பெற்றுக் கொண்டனன்
நித்திய ஞான நிறையமு.துண்டனன்
நிந்தை உலகியற் சந்தையை விண்டனன்''

என்று 'அருளற்புதம்' என்ற தலைப்பில் அருள் முழக்கம் செய்யும் வள்ளலார் தம்முடைய கொள்கை விளக்கங்களாக அமைத்த நிலையம்

சத்திய தருமச் சாலை
சத்திய ஞான சபை

என்ற இரண்டும் ஆகும். இரண்டனுள் சத்திய தருமச் சாலையே கொள்கைப் பயிற்சி நிலையம். அடுத்து வரும் சத்திய ஞான சபை அனுபவ விளக்கமாகவே வள்ளலார்

''ஆணிப் பொன்னம்பலக் காட்சி''

என்பதை அமைக்கின்றார்கள். 'சத்திய ஞான சபை'யை என்னுள் கண்டனன் என்றும், சன்மார்க்க சித்தியை நான் பெற்றுக் கொண்டேன் என்றும், நித்திய, ஞான, நிறை அமுதுண்டேன் என்றும் அருளிய வள்ளலார் தம்மையே இவ்வுலகிற்குச்

**சித்தி வளாகம்**

என்ற பெயரால் அருட் கொடை வழக்கம் செய்து விடுகிறார்.

சிதம்பரம் இராமலிங்கம் இன்று நமக்கெல்லாம் **சித்தி வளாகமாக** நின்று, திருவருள் செங்கோலேந்தி, திருவருளாட்சியை நடாத்துகிறது என்று கொள்ளுதல் வேண்டும்.

கி.பி. 1867-ல் சத்திய தருமச் சாலையை அமைத்த வள்ளலார் அதனையே தம் உறைவிடமாகக் கொண்டு தங்கியிருந்தார்கள்.

கி.பி. *1870*-ல் வடலூருக்குத் தெற்கே இரண்டு கல் தொலைவில் உள்ள **மேட்டுக் குப்பம்** என்ற பகுதிக்குச் சென்று தங்க முற்பட்டார்கள். அடிகள் மேட்டுக் குப்பத்தில் தங்கியிருந்த காலத்தில்தான் 'சத்திய ஞான சபை' அமைக்க எண்ணினார்கள். இதனைத் திருவருட் குறிப்பின் படியே அமைத்ததாக அருளியுள்ளார்கள்.

''நெடுங்காலம் மரணம் முதலாகிய அவத்தைகளால் துன்பமுற்றுக் களைப்படைந்த உங்களை அவ்வவத்தைகளினின்றும் நீக்கிக் களைப்பும் கலக்கமும் தவிர்த்து அழியாத பேரின்ப சித்தியை அடைவித்தற் பொருட்டாகவே பூர்வ ஞான சிதம்பரத்தின் வடபால் பார்வதிபுரம் என்று குறிக்கப்படுகின்ற உத்தர ஞான சித்திபுரத்தில் யாம் அளவு கடந்த நெடுங்காலம் சித்தியெல்லாம் விளங்கத் திருவருள் நடஞ் செய்வோம் என்றும் அது தருணம் மிகவும் அடுத்து சமீபித்த தருணம் என்றும் அப்பகுதியினிடத்தே யாம் அருள் நடம் புரிதற்கு அடையாளமாக ஓர் ஞானசபை காணுதல் வேண்டும் என்றும் திருவருள் குறிப்பால் அறிவித்தது மன்றி, அருளுருவாகி எங்கள் அகத்தும் புறத்தும் அமர்ந்தருளி யாதோர் தடைகளுமின்றி, அத்திரு ஞான சபையும் தோன்றி விளங்கச் செய்வித்தருளிய தேவரீர் பெருங்கருணையைக் கருதுந்தோறும் பெருங்களிப்படைகின்றோம்''.

என்று சுத்த சன்மார்க்க சத்தியச் சிறு விண்ணப்பத்தில் வள்ளற் பெருமான் சுட்டிக் காட்டியிருப்பதை நினைவிற் கொள்ள வேண்டும்.

*1872*-ல் தைப்பூசத்தில் முதன்முதலாக வழிபாடும் அருட்பெருஞ்சோதி தரிசனமும் சத்திய ஞான சபையில் அமைக்கப் பெற்றன.

*1873*, ஐப்பசியில், மேட்டுக்குப்பம் சித்திவளாகத் திருமாளிகையில் சன்மார்க்கக் கொடியை அமைத்தார்கள். சத்திய ஞானசபையைத் தன்னுட் கண்ட வள்ளலார் அதனைப் புறத்தோற்றத்தே அமைத்துக் காட்டியது போலவே சன்மார்க்கக் கொடியும் அகத்தே கண்டதன் புறவடிவ நிலை. சித்தி வளாகத் திருமாளிகையில் முதன் முதல் சன்மார்க்கக் கொடியை அமைத்தபின் 'மஹோபதேசம், என்ற பெயரில் சுத்த சன்மார்க்கக் கொள்கை விளக்கம் செய்தார். அந்த மஹோபதேசத்தில் தான்

''அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி''

என்ற மகாமந்திர வாக்கியத்தைத் தமக்கு வெளிப்படுத்திய அதே முறையில், தம் மெய்யறிவின்கண் தாம் துய்த்த உண்மை அறிவானந்தத்தை ஏனைய உயிர்களும் அறிந்து அனுபவிக்க வேண்டும் என்ற ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமை காரணமாக வெளிப்படுத்தினார்.

*1873* கார்த்திகையில், வள்ளற் பெருமான் தம் அறையில் இருந்த விளக்கை அறைக்கு வெளியே வைத்து

''இதைத் தடைப்படாது ஆராதியுங்கள். இந்தக் கதவைச் சாத்தி விடப் போகிறேன். இனிக் கொஞ்சகாலம் எல்லோரும் ஆண்டவர் இப்போது தீபமுன்னிலையில் விளங்குகிற படியால் உங்களுடைய காலத்தை வீணிற் கழிக்காமல்

''நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்றெழுங்
கண்ணீ ரதனால் உடம்பு
நனைந்து நனைந்து அருளமுதே
நன்னிதி யே ஞான
நடத்தரசே என்னுரிமை நாய
கனே என்று

வனைந்து வனைந்து ஏத்துதும் நாம்
வம்மின் உலகியவீர்
மரணமிலாப் பெருவாழ்வு
வாழ்ந்திடலாங் கண்டீர்
புனைந் துரையேன் பொய் புகலேன்
சத்தியம் சொல்கின்றேன்
பொற்சபையில் சிற்சபையில்
புகுந் தருணம் இதுவே''

என்னும் பாடலிற் கண்டபடித் தெய்வபாவனையை இந்தத் தீபத்திற் செய்யுங்கள். நான் இப்போது இந்த உடம்பிலிருக்கின்றேன்; இனி, எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வேன்'' என்று அருளினார்கள். இந்நிகழ்ச்சி நடைபெற்றது கார்த்திகைத் திங்களில்.

அடுத்த தைத்திங்கள் பூசநன்னாளின் (*30-1-1874*, ஸ்ரீமுக ஆண்டு, தைத்திங்கள் 19-ஆம் நாள் வெள்ளிக்கிழமை) முதல் நாள் முன்னிரவில் வள்ளலார் அங்கிருந்த அன்பர்களை யெல்லாம் அழைத்து,

''நான் உள்ளே பத்துப் பதினைந்து தினம் இருக்கப் போகிறேன். பார்த்து அவநம்பிக்கை அடையாதீர்கள். ஒருகால் பார்க்க நேர்ந்து பார்த்தால் **யாருக்கும் தோன்றாது வெறு வீடாகத்தான் இருக்கும் படி ஆண்டவர் செய்விப்பார். என்னைக் காட்டிக் கொடார்**'' என்று அருளிச் செய்து விட்டுத் தமது திருவறைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக் கொண்டார்''.

*1870*ல் மேட்டுக்குப்பம் சார்ந்த அடிகளார் அடுத்த நான்கு ஆண்டுகளுக்குள் விரைந்து பல அருளிப்பாடுகளை நிகழ்த்தி விடுகிறார்கள்.

சத்திய ஞானசபை அமைத்தது
சன்மார்க்கக் கொடி அமைத்தது
சன்மார்க்கத் திருமந்திரம் வெளிப்படுத்தியது
சன்மார்க்கத் திருவிளக்கு அமைத்தது

மேலே குறிப்பிடப் பெற்ற நான்கையும் உளங்கொண்ட 'அருட்பெருஞ்ஜோதி அகவல்' மலர்ந்ததும் சித்தி வளாகத்தில் தான்.

''நான் உள்ளே இருப்பேன். நீங்கள் வந்து பார்த்தால் யாருக்கும் தெரியாது; வெற்றிடமாகத்தான் இருக்கும். ஆண்டவர் என்னைக் காட்டிக் கொடுக்க மாட்டார்'' என்றருளிய திருவாக்கினை எண்ணினால் அடிகள் இருப்பிடம் சித்தி வளாகமே, நம்மால் காணப் பெற இயலவில்லை; காண நேர்ந்தால் வெற்றிடமே என்றார்.

இந்நிகழ்வுக்கு நான்கு திங்கள் முன்னதாக *8.9.1873*-ல் ஓர் பத்திரிகை விளம்பரப் படுத்தப் பெறுகிறது. அதனுள்,

''ஞான சித்திபுரம் என்றும் உத்தர ஞான சிதம்பரம் என்றும் பிர மாணிக்கப் படுகின்ற வடலூர் சத்திய ஞான சபைக்கு **முக்கிய சம்பந்தம் உடையதாகி** அடுத்த கருங்குழி எல்லை மேட்டுக் குப்பத்தில் **வழிபடப் படுகின்ற சித்தி வளாகத்தில்** வந்திருக்கின்றவர்களும் வருகின்றவர்களும், வருபவர்களும் ஆகிய ஜனங்களுக்கு அறிவிப்பது''

என்று காட்டப் பெற்றுள்ளது.

மேலும், திருவருள் மந்திரம் வெளிப்படுத்தப் பெற்ற பேருபதேசத்தில்

''**சித்தி வளாகம் என்னும் இச்சந்நிதானத்திற்கு** அடுத்த உத்தர ஞான சிதம்பரம்''

என்று குறிப்பிடுவதையும் காணவேண்டும். மேட்டுக்குப்பத்தில் அடிகள் திருக்கரத்தால் அமைத்த விளக்கானது அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரைத் தாங்கி நிற்கும் அடிகளே என உணர வேண்டும். சன்மார்க்கச் சோதியாக வள்ளலார் நிற்க, அச்சோதியுட் சோதியாக ஆண்டவர் நிற்கிறார். வள்ளலார் என்ற சோதியின் மூலமாக அருட்பெருஞ் சோதியாம் ஆண்டவரை நாம் கண்டு தரிசிக்கிறோம். திருவிளக்கில் விளக்கொளியும் அதன் உள்ளொளியும் என்ற இருவகைச் சோதிகளின் இணைப்பை மனத்துட் கொண்டால் புறம் நின்ற சோதியாக வள்ளலாரையும், அகநின்ற அருட்பெருஞ்சோதியாக ஆண்டவரையும் நாம் காணமுடியும். ஆண்டவரை நமக்கு விளக்கிக் காட்டும் சந்நிதியாக அமைகிறார் வள்ளலார்.

ஆனால், வளாகம் எனப் பெறும் மாளிகை முழுவதிலும் படுகின்ற ஒளியானது வள்ளலார் என்ற ஒளியா, அவர் அகத்தே அமையும் அருட்பெருஞ்சோதி ஆண்டவராம் ஒளியா என வேறு பிரித்துக் காண இயலாது.

மேட்டுக்குப்பத்தே அமைந்த மாளிகையானது சித்தி வளாகம். அதுஎல்லாச் சித்திகளையும் வரையாது வழங்குகின்றது. வழங்குவது அருட் பெருஞ்ஜோதி ஆண்டவரா வள்ளலாரா என ஒரு வினாவை எழுப்பினால் யாருடையது என்பதாக நாம் திட்டமிட்டுக் கூற இயலாது.

ஆயினும், வள்ளலாரின் கொள்கையை முற்றாக விளக்கம் பெறச் செய்வதும், வள்ளலாருக்கும், வழிபட வருவாருக்கும் முழுமையான சித்திகளையும் வல்லபங்களையும் பேரின்பப் பெருவாழ்வையும் அளித்து, எல்லாவகையாலும் நிறைவுடைய, முழுமையுடைய, பொதுமையுடைய பெருவாழ்வை அனைத்துயிர்களுக்கும் வழங்கும் உண்மைச் சத்தியப் பெருவாழ்வுப் பெருமாளிகையாக இருப்பது சித்தி வளாகம் என்பதே.

சிதம்பரம் இராமலிங்கம் எனத் தம் ஐந்தாம் அகவையில் வெளிப்படுத்திக் கொண்ட சமரசசுத்த சன்மார்க்கப் பெருநிலையம், ஒன்பதாகிய உருவுடைப் பெருமான் என்றும், ஒற்றியூர் நியமம் என்றும் வகுத்தமைத்த அனுபவக் கொள்கைகளின் அடிப்படையில் வளர்ச்சி பெற்று, வடலூரிற் கொள்கை விளக்க நிலையங்களைத் தோற்ற முறச்செய்து, மேட்டுக்குப்பத்துச் சித்தி வளாகத் திருமாளிகையிற் பூரணம் பெற்றுப் பொதுமையில் நின்று அருளாட்சிச் செங்கோல் தாங்கி அருளரசு இயற்றி வருகிறது என்று கொள்ள வேண்டும். அவ்வடிப் படையிலேயே இந்நூலின் பெயர்

**சிதம்பரம் இராமலிங்கரின்**
**சித்தி வளாகம்**

என அமைவதாயிற்று எனக் கொள்ள வேண்டும். இவ்வடிப்படையில் சித்திவளாகச் செந்நெறியை வகைப்படுத்தி அமைத்துக் கொண்டால் வள்ளற் பெருமானின் தனித்தன்மை இத்துணையது என நாம் உணர்ந்து எளிமையில் தெரிந்து கொள்ளலாம்.

சித்தி வளாகத்தில் பந்தலிட்டு அலங்கரித்து ஞானதீபம் வைத்து, சூனிய சிம்மாசனம் அமைத்து, ஆண்டவன் அதில் வீற்றிருப்பதாகப் பாவனை செய்து, சன்மார்க்க அன்பர்களுடன் தாமே பாடிவந்து நிற்கும் வழக்கமுடையவர் வள்ளலார்.

## சித்திவளாகத் தத்துவம்

திருவருட் பிரகாச வள்ளலார் என்னும் சிதம்பரம் இராமலிங்க பிள்ளையின் சித்தி வளாகத் தத்துவம் என விரிந்து நிற்கும் தொடரின் சுருக்கமே மேலே அமைந்த சித்தி வளாகத் தத்துவம் என்ற சிறு தலைப்பு.

சித்தி வளாகத் தத்துவத்தை வரையறை செய்வதற்கு மூலமாக உள்ள பொருள் வரையறை, அளவையியல் வரையறை ஆகியவைகள் சித்தி வளாகம் என்ற தலைப்பின் முன்தலைப்புகளில் எடுத்துக் காட்டப்பெற்றன. கொள்கையை விளக்கம் செய்வதற்கு வள்ளலார் மேற் கொண்ட முறைகள் என அவைகளைக் கொள்ளலாம்.

வள்ளலாரின் தத்துவத்தைச் சித்திவளாகத் தத்துவம் என அமைத்துக் கொள்ளுதல் மிகப் பெரும் பயன் விளைப்பதாம். சத்திய தருமச் சாலைக்குப்பின் சித்திவளாகத்தில் நின்றே கொள்கை விளக்கம் செய்கிறார் வள்ளற் பெருமான்.

சித்தி வளாகக் கொள்கையை நேர் நின்று விளக்கும் மூலங்களாக

சுப்பிரமணியமும் அருள்நெறியும்
திருவருண் மெய்ம்மொழி
மஹோபதேசம்

என்ற உபதேசப் பகுதிகளும்,

சமரச சுத்த சன்மார்க்க சத்தியச் **சிறு** விண்ணப்பம்
சமரச சுத்த சன்மார்க்க சத்தியப் **பெரு** விண்ணப்பம்
சமரச சுத்த சன்மார்க்க சத்திய **ஞான** விண்ணப்பம்
சமரச சுத்த சன்மார்க்க **சங்க சத்திய** விண்ணப்பம்

என்ற நான்கு உரைநடைப் பகுதிகளும் முக்கியமானவை. இக்கருத்துகளை விளக்கும் அருட் பாடல்களையும் கொள்ளலாம்.

ஆறு திருமுறைகளையும் அகப்படுத்திய திருவருள் மெய்ம் மொழியாகிய **''ஆளுடைய''** என்பதைக் கொண்டு தொடங்கும் அருள் மாலைகள் நான்கும்,

''ஒன்பதாகிய உருவுடைப் பெருமான்'' என்றும் ''ஒற்றியூர் நியமம்'' என்றும் கூறும் பகுதிகளும்,

உத்தர ஞான சிதம்பரமாலை
சுத்தசிவ நிலை
சுத்தசிவ சன்மார்க்க உலகின் ஒருமை நிலை

என்ற முப்பெரும் பிரிவுகளும் தத்துவ விளக்கங்களுக்குத் துணை செய்பவை.

திருவடிப் புகழ்ச்சி
அருட் பெருஞ்சோதி அகவல்
அட்டகம்

என்ற மூன்றும் தத்துவம், அனுபவ நிலைகள், நெறிவிளக்கம் ஆகியவைகளை விளக்குவன.

'நடுநாடு' என்பது ஒருமைத் தத்துவம்; தொண்ட மண்டலம் என்பது ஒருமைத் தத்துவத்தின் குணமும் அனுபவமும் என நிற்கின்றன.

நடுநாடு என்பதே உத்தர ஞான சிதம்பரம் என்னும் நிலத்தே விளங்கும் சத்திய ஞான சபை. தொண்ட மண்டலமாக, ஒற்றி நியமமாக நின்ற நிலையே சித்தி வளாகம்.

''சத்திய தருமச் சாலை''

என்பது முதற்படி. அதனை மஹோபதேசத்தில் ''இதுமுதல் - கொஞ்சகாலம் - சாலைக்குப் போகிற வரைக்கும்'' என்று குறிப்பிட்டார். சன்மார்க்கத்தின் முதற் சாதனம்,

''அருட் பெருஞ்ஜோதி அருட் பெருஞ்ஜோதி
தனிப் பெருங்கருணை அருட் பெருஞ்ஜோதி''

என்ற திருவருள் மெய்ம் மொழி.

**சன்மார்க்கக் கொடி**

என்பது புறத்தே தோன்றி அகவிளக்கம் செய்யும் சாதனம்.

ஆன்ம நேயமும்
உரிமையும்

உள்ளத்தே கொள்ள வேண்டிய சாதனங்கள். இவைகளாற் பயன் 'சித்தி வளாகம்' ஆதல் அல்லது 'சங்கமிருத்தல்' என்பதே.

## சித்திவளாகத்தில் நிற்றல்

சித்திவளாகம் என்பதே 'சங்கம்' என நிற்கிறது. அங்கிருந்தே திருக்கோயில் முதலியன காண்கிறார் ஆதலின் அங்கிருந்தே தத்துவ விளக்கம் காணுதல் அவர் வகுத்த முறை.

## கடவுள் நிலை

1. இயற்கையில் தானே விளங்குகின்றவராய் உள்ளவர்
2. இயற்கையில் தானே உள்ளவராய் விளங்குபவர்

இவ்வாறு கடவுளின் இலக்கணத்தை இரண்டாக விளக்கம் அமைத்தாலும், இது ஒருமையின் இருமை எனப் பெறும். இதனை வெளி என்றும் ஒளி என்றும் கூறுவர். எடுத்துக் காட்டாகச் சூரியனைக் கொள்ளலாம். ஒளியினால் சூரியனை அறிகிறோம். ஒளியில்லாமல் சூரியன் என்ற ஒரு தனிப் பொருளைக் காண இயலாது.

கடவுள் உள்பொருளாகவும் (சத்) ஒளிப் பொருளாகவும் (சித்) இருக்கிறார். இவ்வாறு இருமை என நின்ற நிலையை இடை நின்று இணைக்கும் ஒருமை நிலையே இன்பநிலை. அதனை இரண்டுபடாத பூரண இன்பம் என்றார்.

பொது வெளி என்றார், பொதுவெளியில் நிறைந்து நிற்பது பொதுவொளி. அகம் புறம் எனப் பிரித்து அறிய முடியாத வெளியே பொதுவெளி.

வெளியில் ஒளி என்பது மேலும் விளக்கம் பெறவேண்டும். வெளி என்பது வெற்றிடமானால் அங்கே ஒலிக் கூறுகளும் இருக்கும் பொருட் கூறுகளும் இருக்கும். தத்துவ மொழிகளில் அவை நாதம், விந்து எனப்பெறும்.

கடவுள் இலக்கணம் என்று காட்டப் பெற்ற உள்ளதாய் விளங்குவது, விளங்குவதாய் உள்ளது என்ற இரண்டன் விரிவுகளே ஆறந்தங்கள் என நிற்கும். ஆறந்தங்கள் விரியாதவாறு காண வேண்டுமாயின் இவ்விரண்டையும் இணைக்கும் குணநிலையிற் காண வேண்டும்.

குணத்தாற் காணும்போது இயற்கை செயற்கைக் குணங்கள் அமையும். சத்துவகுணம் என்பதை மூலமாக வைத்து, அதனையும் சகுண, நிர்க்குண அதீதமாகிய கருணை எனக் காணவேண்டும். இதனையே நடுநிலை என்கிறார்.

உள்ளதாய் விளங்குவது; விளங்குவதாய் உள்ளது என்ற இரு நிலைகளுக்கு நடுவே அமையும் நடுநிலையே கருணை. இதனைக்

கருணையும் கருணையை உடைய பொருளும் என நினைக்கலாகாது என்றார். இதனையே,

**''கருணையும் சிவமே பொருள் எனக் காணும் காட்சியும்''** என இணைத்தார். சிவம் என்பதில் பரசிவம், சதாசிவம் எனப் பல்வேறு விரிவு அமைந்து விட்டமையால் கருணையை அவர் ''சுத்தசிவம்'' என்றார். இதனாலேயே, அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி என இரண்டு முறை மந்திரம் அமைத்து, அடுத்து, தனிப்பெருங் கருணையே அருட்பெருஞ் ஜோதி என நடுநிறுத்திக் காட்டினார்.

அடுத்து, பூர்வ ஞான சிதம்பரத்தில் இருமை உண்டு. அங்கே பொன்னம்பலக் கூத்தும் உண்டு; சிற்றம்பலக் கூத்தும் உண்டு. இரண்டையும் கடந்த நடுநிலையை உத்தர ஞான சிதம்பரம் என்றார். அதனையே ஒருமை, பொதுமை என்றார். அதனைப் பூர்வ ஞான சிதம்பரத்துக்கு மேற்பால் அமைத்தார். அதனையே அருள் என்றார். கருணை என்றார். ஒன்பது என்ற உருவமுடையது என்று கூறி ஒன்பது என்பதற்குத் தொன்மையானது என்று பொருள் கூறினார்.

ஒன்று வேறு; பத்து வேறு. இரண்டன் நடுநின்ற ஒன்பதற்குத் தனித்த நிலம் இல்லை. ஒன்பது என்பது நடுநின்றது. நடுநாட்டில் தொண்ட மண்டலம் என்ற அமைப்பினை வைத்தார்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு நிலங்களை இடமாகக் கொண்டு நான்கு ஒழுக்கம் நிகழும். ஆனால் பிரிதல் என்ற ஒழுக்கம் நான்கு இடங்களில் நின்று நடைபெறும் ஐந்தாவது ஒழுக்கம். பிரிதல் என்ற ஒழுக்கத்துக்கு உரிய பாலை என்ற தனி நிலம் இல்லை. ஆயினும், நான்கு நிலங்களையும் இடமாகக் கொண்டு பிரிவு என்ற ஒழுக்கம் நிகழும். இதனை ''நடுநிலைத் திணை'' என்று தமிழ் இலக்கணம் கூறும். நானிலம் என்ற நிலத்தில் ஐந்திணை ஒழுக்கம் நிகழும் என்று கூறும் தமிழ் இலக்கணம் அது கொடுப்பாரும் ஏற்பாரும் இன்றித் தன்னேரில்லாத் தலைவனும் தலைவியும் தாமே கூடும் ஒழுக்கம் என்று விளக்கியது. அதனாலேயே உத்தர ஞான சிதம்பரத்தை

''அருளுலகில் திணை ஐந்தும் ஆகியது''

என்றும்,

''ஒத்தாரையும் இழிந்தாரையும் நேர்கண்டு ஒரு
மித்து வாழ்விப்பது''

என்றும் கூறினார்.

''ஒன்பதாகிய உருவுடைப் பெருமான்'' என ஒற்றிப் பெருமானை, தியாகப் பெருமானை எடுத்துக் காட்டி, தனக்கென இடம் இல்லாது ஒற்றி வாழும் கருணை என்பதே கடவுளின் உண்மை நிலை என்றார்.

சன்மார்க்க நெறியைச் சதுரப் பெருநெறி என்று கூறி, சுத்த சிவ சன்மார்க்கம் என்பதை உண்மை நெறி, உண்மைப் பொதுநெறி, பொதுமைப் பெருநெறி எனவும் விளக்கினார்.

பொதுமை நெறியானது அறிவார் அறியும் வண்ணங்கள் எல்லாமாகவும் விளங்கும் தன்மையுடையது ஆதலின், அவர்கள் அறிவதற்கு அதுவதுவாய் விளங்கும். ஆனால், அது அவற்றின் வேறுபட்டது என்றார். எனவே, சமரசம் வேறு; பொதுமை வேறு என்றும் குறிப்பிட்டார்.

பொதுமையில் எல்லாத் தனிமைகளும் சமரசப்பட்டு நிற்கும். ஆனால், தனிமையானது தன்னை ஒத்த இன்னொரு தனிமையையோ பொதுமையையோ அறியாது. பொதுமையானது தனிமைகளை உணரவும் தன்னை உணரவும் செய்வது. அதனால், பொதுமையில் தனிமைகள் இல்லாதன அல்ல என்றார் வள்ளலார்.

''தனிப்பெருங்கருணை'' என்பதே நடுநிலைத் தொன்மைப்பதம். இதுவே சுத்தசிவம் என்ற பொருள் எனவும், அவ்வாறு அறியும் அறிவே சுத்த ஞானம் எனவும், அந்த ஞானம் அனுபவப் படுதல் என்பதே சுத்த ஞான சித்தி அனுபவம் என்றும் கொண்டார்.

இதனைச் சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞான விண்ணப்பம் என்ற மூன்றாவது விண்ணப்பத்தில் விளக்கமுற அமைத்தார்.

1. அடிநிலைக் கருமஞானசித்தி அனுபவம்
   முடிநிலைக் கருமஞானசித்தி அனுபவம்
2. அடிநிலை யோக ஞானசித்தி அனுபவம்
   முடிநிலை யோக ஞானசித்தி அனுபவம்

3. அடிநிலைத் தத்துவ ஞானசித்தி அனுபவம்
   முடிநிலைத் தத்துவ ஞானசித்தி அனுபவம்

4. அடிநிலை ஆன்மஞான சித்தி அனுபவம்
   முடிநிலை ஆன்மஞான சித்தி அனுபவம்

என்ற நான்கு நிலைகள் எட்டாக நின்று அனுபவப்படும் என்றார். ''அடிமுடி'' என இருமை அமைத்தார்.

நால்வகை நிலங்களில் எட்டாக இருமையுற்று அமைந்த அனுபவம்.

அதன்மேல் சுத்தஞானசித்தி அனுபவம்
அதன்மேல் சமரச சுத்தஞான சித்தி அனுபவம்

இவற்றுள், சுத்தஞான சித்தி அனுபவத்தில் திருவருட் சமூகப் பெருங்கருணை வண்ணம் விளங்கும். சமரச சுத்த ஞான சித்தி அனுபவத்தில் இயற்கைத் திருவருள் திருவண்ணம் விளங்கும்.

இனி, மூன்றாம் விண்ணப்பத்தில் கூறுவதை உளங்கொண்டு உணர்தல் வேண்டும்.

''ஓ! ஒப்புயர்வின்றி விளங்குகின்ற ஒருவரே! தேவரீர்! திருவண்ணமும் திருவருட் சமூகத் திருவண்ணமும் அறிதற்கும் கருதுதற்கும் துதித்தற்கும் எத்திறத்தாயினும் கூடாவாயினும், அடிமை அளவிற்கியன்றபடி அறியா தறிந்தும், கருதாது கருதியும், துதியாது துதித்தும் **எனது உரிமையை ஊற்றம் செய்கின்றவனானேன்**''

என்பதே அப்பகுதி. இதனுள் திருவண்ணம் என்பது ஒன்று; திருவருட் சமூகத் திருவண்ணம் ஒன்று. இதுவரையிலும் பலவகையான சித்தி பெற்றவர்களும் திருவருட் சமூக வண்ணத்தையே அறியவில்லை என்றார்கள். சுத்த சன்மார்க்க நிலை பெற்றவர்கள் திருவருட் சமூக வண்ணத்தை அனுபவித்து நிற்கிறார்கள். அவர்கள் மவுனமாக அனுபவிக்கிறார்கள். இதனை மூன்றாவது விண்ணப்பத்தில்,

''சடாந்த சமரச சத்தியராய் விளங்குகின்ற சமரச சுத்த சன்மார்க்க ஞானிகளது சித்விலாசத் திருச்சபைக் கண்ணே புண்ணிய வசத்தாற் புகுதப் பெற்று, மனங்கனிந்து, வணங்கி, சர்வசுதந்தரராய

சத்தியர்களே! இயற்கை உண்மைத் தனிப்பெரும் பகுதியாய கடவுளின் இயற்கைத் திருவருட் சமுகம் இருந்த வண்ணம் திருவுளம்பற்றித் திருவாய் மலர்ந்து திருவார்த்தை அளித்தருள வேண்டும் என்று விண்ணப்பிக்கின்றதோறும் திருவார்த்தை அளித்தல் இன்றிப் பெருங்கருணைத் திருக்கண்களில் ஆனந்தநீர் பொழிந்து சும்மா இருக்கின்றனர் என்றும் உயர்ந்தோர் வியந்துரைப்பக் கேட்டு, இயற்கைத் திருவருட் சமுகம் இருந்த வண்ணம் என்னையோ, என்னையோ எனக் கூவுகின்றேன்'' என்ற பகுதியைக் காண்க.

இங்கே குறிப்பிடப் பெற்றவர்கள் சடாந்த சமரச சத்தியராய் விளங்குகின்ற சமரச சுத்த சன்மார்க்க ஞானிகளே; அவர்கள் நின்ற இடமும் சித்விலாசத் திருச்சபையே. அப்படியிருக்கவும் திருவருட் சமுகம் பற்றித் திருவார்த்தை அளிக்காமல் சும்மா இருக்கின்றார்கள் எனக் கூறி, தமக்குமுன் சென்ற சமரச சுத்த சன்மார்க்க ஞானிகளையெல்லாம் கூறி, அவர்கள் அனுபவம் பெற்றவர்களே என்றார். அவர்கள் அனுபவத்திற் குறையில்லை; ஆனால் நமக்குத் திருவார்த்தை அளிக்க இயலவில்லை. திருவருட் சமுகம் பற்றிய அவர்கள் நிலையே இது! அதற்கு மேல் உள்ள திருவருள் வண்ணம் எப்படி என எடுத்துரைப்பது எனில், இந்நிலையில் வள்ளலார் தனிநிற்கிறார். ''யான் எனது உரிமையை ஊற்றம் செய்தவனாவேன்'' என்கிறார்.

இயற்கையில் உள்ளவராய் விளங்குபவர்; இயற்கையில் விளங்குபவராய் உள்ளவர் என்ற இருமையின் நடுவே கருணை வடிவமாக இருப்பவர் என அறிதல். அவர்கள் அறிவின் மூலம் கருணையை அறிதல் உண்டு. ஆனால், கருணையை அனுபவிக்கும் போது அறிவால் அறிந்து கூற இயலவில்லை. கருணையை அறிதற்குரிய அறிவும் தொழிற்படவில்லை.

ஆனால், வள்ளலார் ''உரிமை ஊற்றம் செய்கின்றேன்'' என்றார். உரிமை என்பது ஆன்ம நேயம். அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் உயிர்கள் மேற் கொள்வது கருணை. மக்களாய்ப் பிறந்தோர் ஒருவர் ஏனை உயிரின் மேல் காட்டும் உயிரிரக்கம் ஜீவகாருண்யம். அதுவே ஆன்ம நேயம். அதுவே உரிமை. கருணையை ஆன்மநேயத்தால் பெற முடியும் என்பதே உரிமை.

உரிமையை ஊற்றஞ் செய்கின்றேன் என்பதன் பொருள் ஆன்ம நேயத்தை வளர்க்கிறேன். அதுவே தருமச் சாலையிற் போதல். ஜீவகாருண்யம் பெருகப் பெருக நடுநிலை உண்மைப் பதியின் திருவண்ணம் நேரே அறிய முடியும்; அடைய முடியும்.

திருவருளின் திருவண்ணத்தை நேரே அறிய முடிந்த நிலையில், திருவருள் சமுகத்தின் வண்ணமும் அறிய முடியும். இரண்டையும் பற்றி எடுத்துரைக்கவும் முடியும் என விளக்கம் அமைத்தார். இந்நிலையையே

''சுத்த சன்மார்க்கச் சுகநிலை பெறுதல்
உத்தமனாதல்''

என்றார். 'ஓங்குக' என்பதே **சித்தி வளாக** விளக்கம்.

## சத்திய ஞான சபையும் சித்திவளாகமும்

''உண்மைக் கடவுள் தாமே திருவுள்ளங் கொண்டு சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லட்சியமாகிய உண்மை விளக்கம் செய்கின்ற ஓர் ஞானசபையைச் சித்திவளாகம் என்னும் இச்சந்நிதிக்கு அடுத்த உத்தர ஞான சிதம்பரம் அல்லது ஞான சித்திபுரம் என்று குறிக்கப் பெறுகின்ற வடலூர், பார்வதி புரத்தில் தமது திருவருட் சம்மதத்தால் இயற்றுவித்து, ''இக்காலந் தொடங்கி அளவு குறிக்கப்படாத நெடுங்காலம் அற்புத சித்திகள் எல்லாம் விளங்க யாமே அமர்ந்தருளித் திருவிளையாடல் செய்தருள்கின்றோம்'' என்னும் திருக்குறிப்பை இவ்விடத்தே தாயினும் சிறந்த பெருந்தயவுடைய நமது கருணையங் கடலாராகிய அருமைத் தந்தையார் அருட்பிரகாச வள்ளலார் முன்னிலையாகப் பல்லாற்றானும் பிரசித்தப்பட வெளிப்படுத்தி, அருட்பெருஞ்ஜோதி சொருபராய் அப்பெருங்கருணை வள்ளலாரது உடல், பொருள், ஆவிகளைக் கொண்டு, பொற் சபைச் சிற்சபைப் பிரவேசஞ் செய்வித்தருளி, அரிய அவரது திருமேனியில் தாம் கனிவுறக் கலந்தருளிய நிலை''யை விளக்குவதே சத்திய ஞான சபை. எனவே, பொன்னம்பலம் என்ற பொற்சபைக் கூத்தும், சிற்றம்பலம் என்ற சிற்சபைக் கூத்தும் நிகழும் பூர்வ ஞான சிதம்பரம் இருபக்கத்திருக்க, உத்தரஞான சிதம்பரம் இவற்றின் இடை நின்றதாயிற்று. இது சுத்தசிவ ஞான சித்தி என்பதை உண்மை விளக்கம் செய்யவே அவர் தாமே வந்து இனிதுற நடம் புரிந்து விளக்குகிறார். இதுவே, கருணையுருவாய் நின்று ஆடும் பேரின்ப

நடனம் எனப் பெற்றது. இதுவே இயற்கை உண்மைநிலை. இது எல்லா உயிர்களிடத்தும் பெருமான் எழில் பெற நின்றாடும் நிலையை உண்மை விளக்கம் செய்யவெனப் புறத்தே அமைக்கப் பெற்ற நிலை. இதுவே திருவருள் இயற்கை வண்ணம்.

திருவருள் இயற்கை வண்ணம் இது எனக் காட்டும் உண்மை விளக்கமாகச் சத்திய ஞான சபை அமைந்தது. இது அருட்பெருஞ்சோதியிடத்தில் வள்ளற் பெருமான் ஒடுங்கியிருந்த நிலையின் விளக்கம் எனவும் நாம் கொள்ளல் வேண்டும். இதுவே அருளனுபவம் பெறும் முறை.

இனி, **சித்தி வளாகம்** என்பது மகாசந்நிதானம், இதனை அலங்கரிக்க வேண்டும் என்றார் தருணம் வந்துவிட்டது என்றார். அலங்கரிக்கும் நிலையே சித்திவளாகச் சந்நிதி விளக்க முறை.

எல்லாம் வல்ல ஆண்டவனார் திருவரவு அமையப் போகிறது, சத்திய ஞான சபையில் எந்த ஒரு சித்தருடைய வடிவம் தம்முள் அடங்கியதோ அதே வடிவு கொண்டு அருட்பெருஞ்ஜோதிக் கருணைப் பரம்பொருள், திருவருட் செங்கோல் கொண்டு நடாத்துவித்தருளும் பேரருட் பெருங்கருணை வாய்ந்த தனிப்பெருந்தலைமை அரிதில் வருகை புரிகிறது. அப்போது வழிபடுதல், மங்கலம் புனைதல் என்ற திருப்பணிகளில் நம்முடைய கரணம், இந்திரியம் ஆகியவைகளை ஈடுபடுத்தி விடுதல் வேண்டும்.

நாதஒலி, விந்து விளக்கம் என்ற இரண்டு சக்திகள் நம்மைப் புறத்தே இழுத்து விடும். ஆகையால் அத்தகைய புறஒலி, புறஒளி இல்லாமல் திருவிளக்கு ஒளியையே பார்த்துக் கொண்டிருத்தல் வேண்டும்.

அப்போது ஆண்டவனாரின் அருளற்புத ஞான சித்தத் திருமேனியை - மங்கலத் 'திருக்கோலத்தை - வள்ளலார் வடிவில் அமையும் அருட் பெருஞ்ஜோதி ஆண்டவரைக் கண் காட்சியாகக் காணமுடியும். நம் மானிட உடலாலேயே பார்க்க முடியும். உடல் குழைய உள்ளங் குளிர, ஆனந்தக் கண்ணீர் கொண்ட பரவசத்துடன் தரிசிக்கலாம். அத்துடன் வேறு ஒரு பயனும் உண்டு. அதனை வள்ளலார் வாக்காலேயே உணரலாம்.

''நாம் எல்லவரும் சுத்த சன்மார்க்கத்தினுக்கு உரிமையுடையவர்களாகி, அறிவு வந்த கால முதல் கண்டறியாத அற்புதக் காட்சிகளையும், கேட்டறியாத அற்புதக் கேள்விகளையும் அறிந்தறியாத அற்புத அறிவுகளையும், அடைந்தறியாத அற்புதக் குணங்களையும், செய்தறியாத அற்புதச் செயல்களையும் அனுபவித்தறியாத அற்புத அனுபவங்களையும் - **வெளிப்படத் தரிசிக்கும் அதே கணத்தினுள்ளே** - பெற்றுப் பெருங்களிப்புடன் எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் தடைபடாத சத்திய சுகபூரணப் பெருவாழ்வு என்னும் பேரின்ப சித்திப் பெருவாழ்வில் வாழப் பெறுவோம்.

இதுவே, சித்தி வளாகச் சந்நிதிப் பெருமை. பரம் பொருளை நேர் நின்று காணவும் அறியவும், அப்போதே அதனை அனுபவிக்கும் பெருவாழ்வு பெறுதலும் ஆகிய இரண்டையும் பெறலாம் என்கிறார்.

இதன் உட்கருத்தை மேலும் விளக்கும் வகையில் நான்கு விண்ணப்பங்களில் இறுதி நின்ற - சமரச சுத்த சன்மார்க்க சங்க சத்திய விண்ணபத்தை அமைக்கிறார். இங்கே கூறும் ஞான சபை விளக்கத்தைக் காண்க.

| **உலகியற் பெயர்கள்** | **திருவருளாலாக்கப் பெற்ற பெயர்கள்** |
|---|---|
| பார்வதி புரம் | உத்தரஞான சிதம்பரம் |
| வடலூர் | உத்தரஞான சித்திபுரம் |

அது பெருங்கருணைத் தெய்வப்பதி.

இயற்கை விளக்க நிறைவாகியுள்ள ஓர் சுத்த சிவ அனுபவ ஞானசபை.

இயற்கை உண்மை நிறைவாகிய திருவுரு

இயற்கை உண்மை நிறைவாகிய சுத்தசிவானந்த
ஒருமைத் திருநடச் செய்கை

எவ்வுயிரும் இன்பமடைதற் பொருட்டுச் செய்யப் பெறுவது.

இத்துணையும் புறவிளக்கம்.

இனி, திருவருட் சுதந்தரம் மேலிட, ஆன்மாவானது அதன்கீழ் நின்று ஆடும் நிலை அமையும். திருவருளில் ஆன்மா அடங்கி நிற்கும். அப்போது இத்தேகம் நித்திய தேகமாகி எக்காலத்தும் அழியாத பேரின்ப சித்திப் பெருவாழ்வை அடையும். இதுவே சத்தியஞான சபை எனப்பெறும் திருவருள் வண்ணம்.

சித்திவளாகத்தில் அவனுரு, அவன் உரை, அவன் செயல் ஆகியவைகளை ஆன்மாவானது தாங்கிச் செயற்படும் நிலை. இங்கே, அவனுரு என்னுரு; அவனுரை என்னுரை; அவன் செயல் என் செயல் என நின்று தாம் இன்ப வாழ்வு வாழும் நிலையுடன் ஏனைய உயிர்களையும் சித்தி பெற்று வாழும் நிலையை அடையச் செய்யும் வல்லபமும் உண்டாகும். இதுவே சித்திவளாக நிலை.

## சித்திவளாகமாக நிற்பதற்குரிய வழி

*1.* **சாலையிற் போதல்.** சாலையிற் சென்றவரே சங்கம் இருப்பார். சாலையிற் போதல் என்றால் என்ன ?

சத்திய தருமத்தில் நிற்றல். எந்த ஒரு மனிதனும் தன்னுள் சத்தியப் பொருள் அசத்தியப் பொருள் எது என ஆராய வேண்டும் என்று அறிஞர்கள் கூறுவர். ஆனால், வள்ளலார் நம்மை வழிப்படுத்தும் முறை புதிய உத்தியைக் கொண்டது.

இந்திரியம், கரணம், ஜீவன், ஆன்மா என நான்காக நாம் இருக்கிறோம். இந்திரியம், கரணம், ஜீவன் என்ற மூன்றும் இறைவன் நமக்குக் கொடுத்தவைகள்.

இந்திரியம் என்பது என்னுடைய உடல்; கரணம் என்பது என் துய்ப்பு நிலை; ஜீவன் என்பது புறத்தே விடயங்களை அறியும் அறிவு நிலை.

இம் மூன்றையும் பரம்பொருள் எனக்கு எப்படி எப்படியெல்லாம் கொடுத்தது என்பதை முதன் மூன்று விண்ணப்பங்களில் விளக்கிக் காட்டுகின்றார்.

இம் மூன்றையும் அவனுக்கு உரியன என்று கருதுதல் வேண்டும். கருதும் அவ்வளவில் அவனுக்கே அவைகளை உரிமையாக்க வேண்டும். இங்கே தான் வள்ளலார்,

''யோகம் செய்ய வேண்டுவதில்லை; அதில் அழுந்தி விட்டால் மீளுவது கஷ்டம்; சதாசிவ கலப்பாய்க் கிடந்தாலும் மீளுதல் அருமை, மூடம் உண்டாகும். உண்மை''

''சமாதிப் பழக்கம் பழக்கமல்ல; சகஜப் பழக்கமே பழக்கம்'' என்று கூறி, எந்த ஒன்றிலும் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளக்

கூடாது. திருவருளால் நாம் இருக்கிறோம் என்ற நினைவுடன் இருத்தல் வேண்டும்.

''சித்சபையில் மனத்தை நிறுத்த வேண்டும்'' என்று வள்ளலார் கூறியதை வைத்து, புருவமத்தியில் மனதை - மூக்குநுனியில் காற்றை நிறுத்தப் பயிற்சி செய்பவர்கள் உண்டு.

இதனாலேயே வள்ளலார் வேறு ஒன்றும் கூறினார். ''சாதனங்கள் ஒன்றும் வேண்டாம்; ஏதாவது ஓர் சாதனம் சொல்லக் கேட்டு அதன்படி நடந்தால் சிறு ஒளி உண்டாகும். அதைக் கண்டு பல்லிளித்து இறுமாந்து கெட நேரிடும். ஆதலால், காலந் தாழ்க்காது எல்லா உயிரையும் தன்னுயிரைப் போலப் பார்க்கும் உணர்வை வருவித்துக் கொள்ள வேண்டும்; இதுவே சாதனம்'' என்றார்.

இந்திரியம், கரணம், ஜீவன் என்ற மூன்றையும் கடவுளுக்குச் சுதந்தரமாக்க வேண்டும். அதாவது திருவருளில் ஒப்படைக்க வேண்டும்.

இத்தேகமும், ஜீவனும், போகப் பொருள்களும் சர்வ சுதந்தரராகிய கடவுள் பெருங்கணையாற் கொடுக்கப் பெற்றவை; நமது சுதந்தரத்தாற் பெற்றன அல்ல என்பதை முதலில் அறிதல் வேண்டும்.

அடுத்து, தேவரீர் இந்திரியம், கரணம், ஜீவன் என்ற மூன்றிலும் திருவருட் சுதந்தரம் வெளிப்பட்டுத் தோன்றவும், தேவரீர் திருவருள் சாட்சியாக எனக்கு எவ்விதத்தும் யாதோர் சுதந்தரத் தோற்றமும் தோற்றுவிக்காதவாறும் செய்தருளல் வேண்டும் என்றும் தனிப் பெருங் கருணைப் பதியைக் கேட்டல் வேண்டும்.

சைவம், வைணவம் முதலிய சமயங்களில் இத்தகைய கொள்கை உண்டு. ஆனால், அது வெற்றுச் சடங்காக அமைந்து விட்டது.

''பூவார் அடிச்சுவடு என்மேற் பொறித்துவை
மூவிலைச் சூலம் என்மேற் பொறித்துவை''

என்று அப்பரடிகள் வரங்கிடக்கிறார். இவ்வுடல் முதலியன நின் சொத்து என உரிமை அமைக்கும் அடையாளத்தை இதன் மேல் பொறித்துவை என்று கேட்கிறார். அப்படியே பெறுகிறார். பின்னர், அவை சமயச் சின்னங்கள் என்று அமைக்கப் பெற்று விட்டன.

திருவருட் சுதந்தர மாக்குதல் என்றால் உடல் முதலியவைகளை வெறுத்தல் அன்று. அவன் கருணையுடன் கொடுத்தவை அனைத்தும் நம் தேவையை அறிந்து திருவருளால் வழங்கப் பெற்றவைகளே. அவைகள் அவனுடையன; அவன் கருணையால் நமக்குக் கொடுத்தவை என்ற நினைவானது நம்முள்ளத்தில் பெருகினால், நம் உடல் முதலியன திருவருள் மயமாகி விடும்.

இறைவன் கருணையைச் சதா சிந்தித்திருத்தல் என்பதே இது. இதனைச் சத்விசாரம் என்பர். இதனாற் பயன் ''ஏமசித்தி'' என்பார். **''ஏமமாக்குதல்''** என்பதன் விளக்கம். ஆன்மாவில் இயற்கையாக உள்ள குற்றத்தினால் - ஆணவத்தினால் இந்திரியம், கரணம், ஜீவன் ஆகியவைகளைத் தன்னுடையன, தற்சுதந்தர முடையன என நினைத்தலை மாற்றித் திருவருட் சுதந்தரமாக்குதல் என்பதே ஏமமாக்குதல். இவை கருணையால் அளிக்கப் பெற்றவை என்ற நினைவோடிருத்தலே உயர்ந்த சாதனம், சத்விசாரம்.

இதனை வள்ளலார் வேறு ஒரு வகையாலும் உணர்த்துவார். ''உள்ளும் புறம்பும் ஓர் துணையாக வள்ளல் இருப்பதால் வாட்டம் அடைதற்குக் காரணமே இல்லை; கவலை கூடாது'' என்பார்.

தான் என்பதைக் காட்டாமல், திருவருளாலேயே எல்லாம் என்ற கருத்துடன் இருந்தாலே போதுமானது. இதனால் 'ஏமசித்தி' என்ற ஆன்மலாபம் கிடைக்கும்.

அடுத்தநிலையில். ''ஆன்மா'' வைப் பற்றிய சிந்தனை. இந்திரியம், கரணம், ஜீவன் என்ற மூன்றும் நீங்கவே, எஞ்சியிருப்பது ஆன்மா.

பரம்பொருளையும் ஆன்மாவையும் பெரியது சிறியது எனக் கொள்ளவேண்டும். சிறியது பெரியதை அடைய வேண்டும். இதற்குரிய வழிகள் பலவாக, பலரால் பேசப் பெற்றன. அவையெல்லாம் சிறு நெறி எனத் தள்ளி, பெருநெறி பேசுகிறார் வள்ளலார்.

பரம்பொருள் அருள்மயம் அல்லது பெரிய தயவு மயம். ஆன்மா சிறுதயவு. சிறியதைக் கொண்டு பெரியதைப் பெறலாம். சிவகருணையைச் சீவ கருணையாற் பெற முடியும். இதனைச் **சத்திய தருமம்** என்றார். சத்தியம் - உண்மை என்பது கருணையே என்றார்.

கடவுள் என்பது ஒரு பொருளாக அதன் குணம் என்று கருணையைக் கொள்ளலாகாது. பொருளும் பண்பும் என்ற வேறுபாடு இல்லை.

''கருணையும் சிவமே பொருள் எனக் காணும் அறிவு''

என்றார்.

''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்திலார்
அன்பே சிவமாய் ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந் திருப்பாரே''

என்பது திருமந்திரம்.

சிவம் என்பது பெருங்கருணை; தனிப்பெருங் கருணை. ஆன்மா என்பது சிறியகருணை. சீவகாருண்ணியம்.

கருணையைக் கருணையால் அடைதல் என்பதைக் கூறுவதே சத்தியம், சன்மார்க்கம். எனவே,சத்திய தருமச் சாலையிற் போதல் வேண்டும்.

சத்திய தருமம் என்பது கருணை. ஆன்ம இரக்கம். இதனை விளக்கும் போது பசி நீக்குதல் முதலாக விளக்கம் செய்வார்கள். ''பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுக'' என மணிமேகலை அறம் செய்தாள். அஹிம்சை, இன்னாசெய்யாமை போன்ற அறங்களை ஏனைய அருளாளர்கள் வள்ளலாருக்கு முன்னரே கூறியுள்ளார்கள் என்று எடுத்துக் காட்டுவார்கள். ஆனால், ஏனைய அருளாளர்கள் கூறியவை வேறு; வள்ளலார் கூறியது வேறு. இதனை விளக்கப் புகுந்த வள்ளலார்,

''சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லட்சியம் **ஆன்ம நேய ஒருமைப் பாட்டுரிமை**'' என்றார்.

**உண்மைப் பெருநெறி ஒழுக்கத்தில்** என்னை ஏறாநிலைமிசை ஏற்றி விட்டது தயவு தான் என்றார்.

தயவுக்கு ஒருமை வரவேண்டும்
ஒருமையால் தயவு வரும்
தயவினால் பேரறிவு உண்டாம்

என்று கூறி, நீங்களும் ஒருமையுடன் இருங்கள் என்றார்.

''நான் இல்லாமல் இந்த ஜனங்கள் க்ஷண நேரம் இருக்க மாட்டார்களே என்று ஆண்டவரிடத்தில் விண்ணப்பித்துக் கொண்டேன். அது இங்கே இருக்கிற ஜனங்கள் மட்டில் மாத்திரமல்ல, உலகத்திலிருக்கிற எல்லா ஜனங்களையும் குறித்தே விண்ணப்பித்துக் கொண்டேன் என்றால், எல்லவரும் சகோதரர்களாதலாலும், இயற்கை உண்மை ஏக தேசங்களாதலாலும் நான் அங்ஙனம் **ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமை** வைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றார்.

இதனைச் சன்மார்க்க விண்ணப்பத்தில், ''எல்லா உயிர்களையும் பொதுமையில் நோக்கி எல்லா உயிர்களும் இன்பமடைதல் வேண்டும் என்னும் கருணை நன்முயற்சி'' என்றார்.

ஒருமைப்பாடு என்றும் பொதுமையில் நோக்குதல் என்றும் இரண்டு செய்திகளை அமைக்கிறார்.

இனி, நான்காம் விண்ணப்பமாகிய சமரச சுத்த சன்மார்க்க சங்க சத்திய விண்ணபத்தில்.

''இத்தேகத்தைப் பெற்ற எல்லாச் சீவர்களுக்கும் எனக்கறிவித்த வண்ணமே அறிவித்து, அவர்களையும் உரிமை உடையவர்களாக்கி வாழ்வித்தல் வேண்டும்'' என்று கேட்கிறார்.

சீவகாருண்ணியம் என்றும், ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமை என்றும் வள்ளலார் கூறும் அடிப்படைக் கொள்கையைத் தெளிவுறப் புரிந்து கொள்ளுதல் வேண்டும்.

இந்திரியம், கரணம், ஜீவன் ஆகியவை வேறுபாடுடையவைகள். மேலும் திருவருளால் கொடுக்கப் பெற்றவைகள். ஆகையால், நாம் 'ஆன்மாவை' அடிப்படையாகக் கொண்டே இரக்கம் காட்டுதல் வேண்டும் என்பதே ஆன்ம நேயம்.

இதனால், மக்களினமேயன்றி அனைத்துயிர்களையும் உள்ளிட்ட இரக்கம் தேவை. எனவே, மனிதன் மனிதனைச் சகோதரனாக மதித்தல் வேறு; எல்லா உயிர்களையும் ஒப்ப நினைத்தல் வேண்டும்.

அடுத்து, ஆன்மாவை ஒருபொருள் என நினைக்கக் கூடாது. ஆன்மாவானது தயவே பரம்பொருள் என்பது பெரிய தயவு. ஆன்மா

என்பது சிறிய தயவு. எனவே, பரம்பொருளைக் கருணையுஞ் சிவமே பொருளெனக் காணுதல்போல, சீவனும் சிவனும் கருணையே; பெரியதும் சிறியதும் என்ற அளவே வேறுபாடு. சிறு தயவு என்ற நிலையிலும் எல்லா ஆன்மாக்களும் வேறுபாடற்றவை. சிவம் என்பது பெரிய தயவு. சீவன், ஆன்மா என்பது சிறு தயவு எனக் காணுதல் வேண்டும்.

தயவு என்ற வகையில் சிவனும் ஆன்மாவும் ஒருமை நிலையினரே. சத்திய தருமம் என்பது சிவகருணையும் சீவகருணையும். அந்த வகையில் ஆன்மநேயம் (கருணை (அ) தயவு) ஒருமைப் பாடுடையது.

இனி, ***'உரிமை'*** என்பது தயவைச் செயற்படுத்துதல் என்பதே. தயவு என்பது இயற்கையாக ஓர் உயிர் துன்புறும் போது இரக்க முற்று, வருந்தி, அதன் துயர் தீர்க்கக் கருதுவது. பரம்பொருள் தயவைக் காட்டுவதும் அப்படியே. ஓர் உயிர் தயவைக் காட்டுவதும் அப்படியே. எனவே எல்லா ஆன்மாக்களுக்கும் கருணையைப் பொழிய வேண்டுவது உன் உரிமை; அவர்களுக்காக இரங்கி உன்னை வேண்டுவது என் உரிமை.

தயவு என நின்றவைகள் ஆன்மாக்கள். தயவு என்ற வகையில் எல்லா உயிர்களும் ஒருமையுடையன. பெரியது சிறியது என்ற வேறுபாட்டைத் தவிர எல்லாமே தயவுதான். அனைத்துயிர்களும் தயவு எனக் காண்பதும், அனைத்தும் அருள் எனக் காண்பதும், ஒருமைக் காட்சி. இரக்கம் காட்டுவதே உரிமைச் செயல்.

எனவே ''ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை'' என்பதைத் தயவு என்ற ஒருமையில் நிற்பனவே எல்லா ஆன்மாக்களும் என்றும் தயவு என்பதை அனைத்து ஆன்மாக்களை நோக்கியும் செயற்பட வைப்பதே உரிமை என்றும் கொள்ளலாம். இதனை,

''எத்துணையும் பேதம் உறாது எவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணி ஆங்கே
ஒத்து உரிமை உடையவராய் உவக்கின்றார்
யாவர்''

என்பதாற் குறிப்பிடுகின்றார் வள்ளலார் என்று கூறலாம்.

ஆன்மநேய ஒருமைப் பாட்டின் விளக்கத்தை இத்துடன் நிறுத்தவில்லை வள்ளலார்.

மக்களுயிர்களைச் சகோதரர்களாக நினைக்க வேண்டும் என்பதை விட உயர்ந்தது எல்லா உயிர்களையும் சகோதரர்களாக நினைக்க வேண்டும் என்பது.

எல்லா உயிர்களும் பொருள்கள் அல்ல; நேயம் - சிறு தயவு எனக்கொள்க. இறைவன் பெருந்தயவு; ஆன்மா சிறு தயவு. இவ்வகையில் ஆன்ம நேய ஒருமைப்பாடு நினைத்தது அதைவிட உயர்வு.

நேயம் - தயவு என்பது பிற உயிரை நோக்கிய இரக்கம். ஆதலின் தயவு என்பதைச் செய்யவில்லையானால் ஆன்மா என்பதே இல்லை. ஆன்மா எனில் அது பிற ஆன்மநேயத்தை நோக்கி ஓடிச் சென்று உதவி செய்தலையே மேற்கொள்ளும். அதுவே அதன் சத்தியச் செயல்.

எனவே ஆன்மா என்பது பிற உயிர்களை நோக்கி இரக்கங்கொண்டு பணியாற்றும் பண்பே. இவ்வாறு கருதுவது அதை விட உயர்வு.

அதற்கும் மேல், யானும், பிற ஆன்மாக்களும் சிறிய தயை வடிவமே என்ற எண்ணத்தால் ஒப்ப நினைத்தல் என்பது நினைத்தலே அன்று. அனைத்துயிர்களையும் பொதுமையின் நோக்கி, என்றால், அனைத்து ஆன்மாக்களையும் வாழ வைக்க வேண்டும் என்ற பெருங்கருணைப் பரம் பொருள் - பொதுப் பொருள் அமர்ந்து பணியாற்றும் இடம் என ஒரு ஆன்மாவானது ஏனைய ஆன்மாக்களை எண்ணுதல் வேண்டும். அதுவே **பொதுமையின் நோக்குதல்.**

''சுத்த சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடம் என நான் தேர்ந்தேன்''

என்பதே ஆன்ம நேய ஒருமைப்பாட்டு உரிமையின் அடிப்படை மூலமாகிய பொதுமையின் நோக்குதல்.

எல்லா உயிரும் எம்பெருமான் நடம் புரியும் இடம் என நோக்கும் நோக்கு ஒரு வகையில் பொதுமையின் நோக்குதலே.

வள்ளலார் அதற்கு மேலும் ஒரு படி செல்லுகிறார். சிறு தயவு என்பதாகிய ஆன்மா அவ்வாறு நினைக்க இயலாது. எனவே ஆன்மா தன்னைப் பொதுமையில் நின்ற தனிப்பெருங் கருணையில் இணைத்து விட வேண்டும். பின்னர், அது நோக்கும் பொதுமையில் தானும் இணைந்து நின்று - திருவருட் பார்வை என்பதனுள் இணைந்து நின்று நோக்குதல் வேண்டும்.

இதனாலேயே வள்ளலார் **சித்தி வளாகம்** ஆகிறார். சத்திய தருமச் சாலையில் நின்று, சித்தி வளாகம் ஆதல் வேண்டும். சிறியதயவு பெரியதயவோடு இணைதல் எதற்கு ? சிறியதயவு தன்னைப் பெரிய தயவுடன் இணைத்து, பெரியதயவின் மூலம் - திருவருளின் மூலம், ஏன் திருவருளாகவே நின்று அனைத்துயிர்களுக்கும் அனைத்தையும் வழங்கும் சித்தி வளாகமாக ஆதல் வேண்டும். சித்திவளாகமே திருவருள் மகாசந்நிதானம் என்றார்.

திருவருளுண்மை நிலை எனப் பெறும் சத்திய ஞான சபையை விட, திருவருட் சமுகம் எனப்பெறும் மகாசந்நிதியாகிய **சித்தி வளாகமே** பேரின்பப்பயன் அளிக்க வல்லது.

எனவே, எல்லா ஆன்மாக்களும் சத்தியஞானசபை எனத் திருவருளிற் கலந்து நிற்றல் என்பதை வள்ளலார் முடிந்த முடிவாகக் கொள்ளவில்லை. எல்லா ஆன்மாக்களும் சித்தி வளாகங்களாக நின்று நித்திய சத்தியப் பெரும்பேரின்பத்தை அனுபவிக்கும், பிற உயிர்களை அனுபவிக்க வைக்கும். இதுவே **''ஓங்கிய நிலை''**.

ஓங்கிய நிலையே **சித்தி வளாக நிலை**.

சித்தி வளாகங்களே 'சமரச சுத்த சன்மார்க்க சங்கம்'. இதனையே அருட் பெருஞ்ஜோதி அகவலில்

உயிரெலாம் பொதுவின் உளம்பட நோக்குக
செயிரெலாம் விடுக எனச் செப்பிய சிவமே
பயிர்ப்புறு கரணப் பரிசுகள் பலப்பல
உயிர்த்திரள் ஒன்றென உரைத்த மெய்ச் சிவமே
உயிருள்யாம் எம்முள் உயிர் இவை உணர்ந்தே
உயிர்நலம் பரவுக என்றுரைத்த மெய்ச்சுகமே
இயல்அருள் ஒளி ஓர் ஏகதேசத்தின் ஆம்
உயிர் ஒளி காண்க என்று உரைத்த மெய்ச்சிவமே''

என விளக்கினார். அதனாலேயே தன்னெறியைப் பொது நெறி, உண்மைத் தனிநெறி, அருள்நெறி எனக் கொண்டார். அந்நெறியின் தொடக்கம் சத்திய தருமச் சாலை எனவும் முடிவிடம் சித்தி வளாகம் எனவும் நின்றது.

இதனாலேயே, இந்திரிய ஒழுக்கம், கரணவொழுக்கம், ஜீவ ஒழுக்கம், ஆன்ம வொழுக்கம் என்ற நான்கனுள் முதலிரண்டும் நம்மால் மேற்கொள்ள முடியும். பின்னுள இரண்டும் திருவருட் பேறடைந்தவர்க்கே இயலுவன என்று எடுத்துரைத்தார்.

## வள்ளலார் கொள்கையின்படி அமையும் சாதனமும் சாத்தியமும்

சாதனம் - தாம் கருதிய ஒன்றை அடைவதற்காக மேற்கொள்ளப்பெறும் நெறிமுறைகள். சாத்தியம் - அடையப் பெறும் பேறு.

சுத்த சன்மார்க்கம் தவிர ஏனைய சமய, மத சன்மார்க்கங்கள் எல்லாவற்றிலும் சாத்தியம் இல்லை. சாத்தியம் என்பது முடிவிடத்தை முற்றாக அடைந்து விடுதல். எனவே, எல்லா மார்க்கங்களும் முற்றாக முடிந்த இறுதி இடத்தைச் சென்று அடைவதற்கு உதவா என்பது வள்ளலார் கருத்து. ஏனெனில், அங்கெல்லாம் நித்திய உடம்பு இல்லை. சுத்த சன்மார்க்கம் ஒன்றே சாத்தியம். முன்னுள்ள மார்க்கங்களில் உள்ளவர்கள் அனைவரும் உயிர் பெற்று, விசேஷ ஞானம் பெற்று, இம்மார்க்கத்துக்கு வந்து, சாத்திய நிலை பெறுவார்கள்.

சாதனம் என்பது ஒரு முடிவை அடைவதற்கு உறுதி கொண்டு, அதனை அடையத் தக்க நெறி முறைகளை மேற்கொள்ளல் என்ற பொருளைக் கொண்டது. சுத்த சன்மார்க்கம் என்பது ஒருவகைப் பொதுப் பெயர். ஆதலின், மக்களாய்ப் பிறந்தோர் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகளையே சுத்த சன்மார்க்க சாதனம் என்ற பெயரில் நாம் விளங்கிக் கொள்ளுதல் வேண்டும். அவ்வகையில் சுத்த சன்மார்க்கத்துக்கு முக்கிய சாதனம் இரண்டு. அவை,

எல்லாச் சீவர்களிடத்தும் தயவு காட்டுதல்
ஆண்டவரிடத்து அன்பு செய்தல்

என்பன. இக்கொள்கையை,

''கருணையும் சிவமே பொருளெனக் காணும்
காட்சியும் பெறுக''

என்று ஆண்டவரே தமக்கு அறிவுறுத்தியதாகக் கூறுகிறார். இக்கொள்கையை மேலும் விளக்கும் வகையில் அடையும் பயன் நான்கு என்றும் பயனைப் போலவே வழிகளும் நான்கு என்றும் அமைத்துக் கூறுகின்றார்.

இந்திரிய ஒழுக்கம், கரண ஒழுக்கம், ஜீவ ஒழுக்கம், ஆன்ம ஒழுக்கம் என்ற நால்வகை ஒழுக்கங்களும் சாதனம் ; நால்வகைச் சாதனங்களாலும் அடையப் பெறும் பேறு (சாத்யம்) நால்வகைப்படும் என்றார். அவை ஏமசித்தி, சாகாக்கல்வி, கடவுள் நிலை அறிந்து அம்மயமாதல், தத்துவ நிக்கிரகம் என்பன.

மேலே கூறப் பெற்றவைகளை இணைத்து, அடையப் பெற வேண்டிய பேறு எவ்வாறு இருக்கும் என்பதைச் சுருக்கமாகவும் குறிப்பிட்டு விளக்குகிறார் வள்ளலார்.

''எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் எவ்வகைத் தடையும் வாராத சுத்தமாதி ஞானதேக சித்தியும், அண்ட பிண்ட தத்துவங்களைச் சுதந்தரத்தில் நடத்தும் தனிப்பெரும் வல்லமையும், தம்மை ஏமமாகச் செய்து கொள்ளும் சித்தியும் அடையக் கூடிய பொருளை நேர்க்காட்சி நேர் அனுபவம் பெறுதல் என்ற சித்தியும் ஆகிய இவைகளை ஒருங்கே அடைவது''.

ஆயினும், வள்ளலார் அனைத்துயிர்களும் இத்தகைய சாத்தியத்தைப் பெறுவான் வேண்டிச் சித்திவளாகமாக நின்று திருவருட் செங்கோலேந்தி திருவருள் ஞானபீடத்து அமர்ந்து அருளரசோச்சும் அற்புதராக நின்று விளங்குகிறார் எனக் கொள்ள வேண்டும். இத்துணை விரிவுகளையும் தம்முள் அடக்கிச் சிதம்பரம் இராமலிங்கர் நின்ற நிலையே சித்தி வளாகத் திருநிலை.

**''வாழிஎன் ஆண்டவன் வாழிஎங்கோன்**
**அருள் வாய்மை என்றும்**
**வாழிஎம் மான் புகழ் வாழிஎன் நாதன்**
**மலர்ப் பதங்கள்**
**வாழிமெய்ச் சுத்தசன் மார்க்கப் பெருநெறி**
**மாண்பு கொண்டு**
**வாழிஇவ் வையமும் வானமும்**
**மற்றவும் வாழியவே''.**



(முற்றும்)

# பொருண்மை - அகரவரிசை

